# கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் தமிழ்ப்பணி



சென்னைப் பல்கலைக்கழக முனைவர் (Ph.D.)
பட்டத்திற்காக அளிக்கப்படும் ஆய்வேடு

[illegible]



தமிழ்த்துறை
சென்னைக் கிறித்தவக் கல்லூரி (தன்னாட்சி)
தாம்பரம், சென்னை - 600 059

ஆகஸ்டு 2001

**டாக்டர் யோ. ஞான சந்திர ஜாண்சன்,**
இணைப்பேராசிரியர் - தமிழ்த்துறை
சென்னைக் கிறித்தவக் கல்லூரி (தன்னாட்சி),
தாம்பரம், சென்னை - 600 059.

# மேற்பார்வையாளர் சான்றிதழ்

***கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் தமிழ்ப்பணி*** என்னும் தலைப்பில் **திரு. கு. கண்ணன்** அவர்கள் செய்துள்ள இவ்வாய்வு, சென்னைப் பல்கலைக்கழக **முனைவர் (Ph.D.)** பட்டத்திற்காக, சென்னைக் கிறித்தவக் கல்லூரித் தமிழ்த்துறையில் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப் பெற்றது என்றும், இவ்வாய்விற்காக ஆய்வாளருக்கு வேறு எந்தப்பட்டமும் இதுவரை அளிக்கப்பெறவில்லை என்றும் சான்று அளிக்கிறேன்.

23/8/2001

தாம்பரம்

23.8.2001

**(யோ. ஞான சந்திர ஜாண்சன்)**

மேற்பார்வையாளர்

**Dr. Y.** GNANA CHANDRA JOHNSON
READER IN TAMIL
MADRAS CHRISTIAN COLLEGE
TAMBARAM, CHENNAI - 600 059



**கு. கண்ணன்**
முழுநேர முனைவர் பட்ட ஆய்வு மாணவர்,
தமிழ்த்துறை,
சென்னைக் கிறித்தவக் கல்லூரி (தன்னாட்சி),
தாம்பரம், சென்னை - 600 059.

# ஆய்வாளர் உறுதிமொழி

***கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் தமிழ்ப்பணி*** என்னும் தலைப்பில் சென்னைப் பல்கலைக்கழக **முனைவர் (Ph.D.)** பட்டத்திற்காக சென்னைக் கிறித்தவக் கல்லூரித் தமிழ்த்துறையில் செய்யப்பெற்ற இவ்வாய்வு என் முயற்சியில் உருவானதேயாகும். இதற்கு முன் வேறு எந்த ஆய்வுப்பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப்பெறவில்லை என உறுதியளிக்கிறேன்.

கு. கண்ணன்

தாம்பரம்
23.8.2001

**(கு. கண்ணன்)**
ஆய்வாளர்

# நன்றியுரை

ஆய்வினை நெறியோடும், முறையோடும் செய்வதற்கு வழிகாட்டியாய் அமைந்து, ஆய்வேடு எழுதுகையில் கட்டுரைகளைச் செம்மைப்படுத்தி, ஆய்விற்குத் துணைநின்ற ஆய்வு மேற்பார்வையாளர் டாக்டர் யோ.ஞானசந்திர ஜாண்சன் அவர்களுக்கு என் உளமார்ந்த நன்றியினை உரித்தாக்குகிறேன்.

ஆய்வு செய்யும்பொழுது ஆற்றுப்படுத்திய தமிழ்த் துறைத் தலைவர் டாக்டர்.மோசசு மைக்கேல் பாரடே அவர்களுக்கும், தமிழ்த்துறையின் பேராசிரியர்களுக்கும், கிறித்தவ இலக்கியச் சங்கம் தொடர்பாக பல்வேறு கருத்துக்கள் வழங்கிய கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் பொதுச்செயலாளர் அருள்திரு.டாக்டர்.தி.தயானந்தன் பிரான்சிஸ் அவர்களுக்கும், ஆய்வு தொடர்பாக சென்றபோதெல்லாம் தேவையான நூல்களையும், கருத்துக்களையும் வழங்கிய கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் தமிழ்ப்பதிப்பாசிரியர் திருமதி.ஸ்வீட்லின் பிரபாகரன் அவர்களுக்கும் மற்றும் திரு.வெஸ்லி, திருமதி. பத்மாவதி கென்னத் அவர்களுக்கும்,

ஆய்வின்பொழுது ஊக்கப்படுத்திய டாக்டர். மாரிமுத்து, டாக்டர். வெங்கடாச்சாரியார், திரு. உத்திராபதி, திருமதி. மாலா, திரு. பசுபதி, திரு. கிருட்டிணன், திரு. முருகேசன், டாக்டர். கண்ணுமுத்து, திரு. அரவிந்தன், திரு.சண்முகம், ஜெகதா, பரமேஸ்வரி ஆகியோர்களுக்கும்

ஆய்வின்பொழுது உதவிபுரிந்த நண்பர்கள், மா.ரசல்ஜெயபதி, திருமூர்த்தி, க.கதிரவன், முருகன், ராஜா, செல்வக்குமார், நேதாசி, சண்முகம், ஜெயசீலன், வள்ளி, ராதாகிருஷ்ணன், திருமால், சேட், வெங்கடேசன், சந்தானலட்சுமி, கவிதா, ரேணுகாம்பாள், மீனாட்சி, சுகுணா ஆகியோர்களுக்கும்,

இந்த ஆய்வேட்டினைச் சிறந்த முறையில் தட்டச்சு செய்து தந்த திருமதி.சரஸ்வதி மோகன் அவர்களுக்கும், ஆய்வேட்டினைச் சிறப்பாகக் கட்டமைப்புச் செய்து தந்த அடையாறு மாணவர் நகலகத்தார்க்கும் என் நன்றிகளை உரித்தாக்குகிறேன்.

(கு. கண்ணன்)

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| ஆ.பெ.இ. | - | ஆசிரியர் பெயர் இல்லை |
| க.ஆ. | - | கட்டுரை ஆசிரியர் |
| கி.இ.ச. | – | கிறித்தவ இலக்கியச் சங்கம் |
| கீ.எ. | - | கீர்த்தனை எண் |
| கு.எ. | - | குறள் எண் |
| தொ.ஆ. | - | தொகுப்பு ஆசிரியர் |
| நூ.ஆ. | - | நூல் ஆசிரியர் |
| நூ.எ. | - | நூற்பா எண் |
| ப. | - | பக்கம் |
| ப.ஆ. | - | பதிப்பு ஆசிரியர் |
| பக். | - | பக்கங்கள் |
| பா.அ. | - | பாடல் அடி |
| பா.எ. | - | பாடல் எண் |
| மு.இ. | - | முன்னர் காட்டிய இதழ் |
| மு.நூ. | - | முன்னர் காட்டிய நூல் |
| மு.ப. | - | முன்னர் காட்டிய பக்கம் |
| மொ.பெ.ஆ. | - | மொழி பெயர்ப்பு ஆசிரியர் |
| P. | - | Page |
| PP | - | Pages |
| Ibid. | - | Ibidem. |

# பொருளடக்கம்

# ஆய்வு அறிமுகம்

உலக மொழிகளில் தொன்மையும் சிறப்பும் வாய்ந்தது தமிழ் மொழி. இம்மொழி நீண்ட இலக்கிய இலக்கண வரலாற்றினை உடையது. ஒரு மொழியும் அதன் வளர்ச்சியும் அம்மொழி பேசும் மக்களின் பண்பாடு,சமயம் முதலியவற்றை அடிப்படையாகக் கொண்டே அமையும். அவ்வாறே தமிழ்நாட்டில் தோன்றிய சமயங்களும், வெளிநாடுகளினின்று இங்கே பரவிய சமயங்களும் மொழி வளர்ச்சிக்குப் பெரிதும் துணை செய்துள்ளன. தமிழ் இலக்கிய வளர்ச்சியில் மேலைநாட்டு, நம் நாட்டுக் கிறித்தவர்களின் பங்கு குறிப்பிடத்தக்கது. குறிப்பிட்டுச் சொல்லும் வகையில் தமிழகத்தில் கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் பணிகள் அமைந்துள்ளன. இச்சங்கத்தின் தமிழ்ப்பணிகளை ஆய்வு செய்யும் இவ்வாய்வின் அறிமுகப்பகுதியாக இவ்வியல் அமைகின்றது.

**ஆய்வின் தலைப்புத் தேர்வு**

ஆய்வாளரால் ஆய்விற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஆய்வுத் தலைப்பு **கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் தமிழ்ப்பணி** என்பதாகும். கிறித்தவ இலக்கியச் சங்கம் 143 ஆண்டுகளாகத் தொடர்ந்து இலக்கியப் பணியுடன் சமயப் பணியும் செய்து வருகின்றது. நூல் பதிப்புப் பணியையும், வெளியீட்டுப் பணியையும், இதழ்ப் பணியையும் செய்து வருவதோடு படைப்பாளர்களை அறிமுகப்படுத்தியும், இக்கால இலக்கியத்திற்கு ஊட்டம் கொடுத்தும், திறனாய்வுச் சிந்தனையை ஊக்குவித்தும் இலக்கிய நண்பர் வட்டத்தின் மூலம் கருத்தரங்குகளை நடத்தியும் தமிழ் இலக்கியப் பணி செய்து வருகின்றது. எனவே இத்தகையச் சிறப்புக் கூறுகளை உடைய கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் தமிழப்பணிகளைத் தமிழர்கள் மற்றும் கல்வியாளர்களுக்கு அறிமுகப்படுத்தும் நோக்கில் இத்தலைப்பு தேர்ந்தெடுக்கப்பட்டது.

**ஆய்வின் நோக்கம்**

நூற்பதிப்புக் கழகங்களில் கிறித்தவ இலக்கியச் சங்கம் சமயம், மொழி மற்றும் இலக்கிய வளர்ச்சிக்கு பெரிதும் தொண்டாற்றி வருகின்றது. கிடைத்தற்கரிய நூற்களைத் தேடிக் கண்டுபிடித்து பதிப்பித்தும் பிற மொழிகளில் உள்ள சிறந்த நூல்களை மொழிபெயர்த்தும் தமிழ்த் தொண்டாற்றி வருகிறது. இங்ஙனம் கிறித்தவ இலக்கியத்திற்கும் தமிழ் மொழிக்கும் கிறித்தவ இலக்கியச் சங்கம் ஆற்றி வரும் தமிழ்ப்பணியை வெளிக் கொணர்வதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

**ஆய்வின் அணுகுமுறைகள்**

கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் பல்வேறு தமிழ்ப்பணிகளை இவ்வாய்வில் பகுத்தும் விளக்கியும் வரலாற்று நெறிமுறையுடன் கூறப்பட்டுள்ளது. அவ்வகையில் இவ்வாய்வில்,

1. பகுப்பாய்வு அணுகுமுறை
2. விளக்கவியல் அணுகுமுறை
3 வரலாற்று அணுகுமுறை

என மூன்று அணுகுமுறைகள் கையாளப்பட்டுள்ளன.

**ஆய்வின் ஆதாரங்கள்**

ஆதாரங்கள் ஆய்விற்கு அடிப்படையாக விளங்குகின்றன. ஆய்வுத் தலைப்பிற்குரிய தகவல்களையும் அவை பற்றி விரிவாக அறிய எவையெல்லாம் பயன்படுகின்றனவோ அவையெல்லாம் ஆதாரங்கள் எனப்படுகின்றன. இவ் ஆதாரங்கள் முதன்மை ஆதாரங்கள் எனவும், துணைமை ஆதாரங்கள் எனவும் பகுக்கப்பட்டுள்ளன.

**முதன்மை ஆதாரங்கள்**

கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் தமிழ்ப்பணி என்னும்இவ்வாய்விற்கு கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் மூலம் இதன் தொடக்கக் காலத்தில் இருந்து

வெளிவந்துள்ள பல்வேறு நூல்கள், பூக்கூடை இதழ் ஆகியன முதன்மை ஆதாரங்களாக அமைகின்றன.

**துணைமை ஆதாரங்கள்**

கிறித்தவ இலக்கிய நூல்கள், திறனாய்வு நூல்கள், படைப்பிலக்கியம் பற்றிய பல்வேறு நூல்கள், இதழியல் நூல்கள் ஆகியன துணைமை ஆதாரங்களாக அமைகின்றன.

**ஆய்வின் மொழிநடை**

கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் தமிழ்ப்பணி குறித்த ஆய்வு என்பதால் கிறித்தவச் சமயம் சார்ந்த பல சொற்கள் கருத்து மாற்றம் ஏற்படாவண்ணம் அப்படியே கையாளப்பட்டுள்ளன. இடப் பெயர்களும், மக்கள் பெயர்களும் நூலில் உள்ளவாறே பின்பற்றப்பட்டுள்ளன.

**ஆய்வின் பாகுபாடு**

கிறித்தவ இலக்கியச்சங்கத்தின் தமிழ்ப்பணி எனும் இவ்வாய்வேடு ஆறு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு இயலும் தனித்தனியே முன்னுரைகளையும், உட்தலைப்புகளையும் தொகுப்புரைகளையும் கொண்டுள்ளது. ஆய்வேட்டின் அமைப்பு வருமாறு :

**1. ஆய்வு அறிமுகம்**

ஆய்வு அறிமுகம் எனும் முதல் இயலில் ஆய்வின் தலைப்புத் தேர்வு - ஆய்வின் நோக்கம் - ஆய்வின் அணுகுமுறைகள் - ஆய்வின் ஆதாரங்கள் - ஆய்வின் மொழிநடை - ஆய்வின் பாகுபாடு - பின்னிணைப்புகள் - துணைநூற் பட்டியல் போன்ற செய்திகள் கூறப்பட்டுள்ளன.

## 2 கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும்

இரண்டாம் இயலான கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும் என்னும் பகுதியில் தமிழகத்தில் கிறித்தவம் - சீகன்பால்கு ஐயரின் பணிகள் - தமிழ்ப்பணி - மொழிபெயர்ப்புப்பணி - அச்சுப்பணி - ஆலயப்பணி - நற்செய்திப்பணி - கல்விப்பணி - அகராதிப்பணி - எழுத்துப்பணி - கிறித்தவர்களின் இலக்கியப்பணி - கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் தோற்றம் - கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் தோற்றத்தின் வரலாற்றுப் பின்னணி - கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் நோக்கம் - கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் அமைவிடம் - கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் சிறப்பு - கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் பொதுச் செயலாளர்கள் - கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் நிறுவனரும் முதல் பொதுச் செயலாளரும் - கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் ஆட்சிக்குழுத் தலைவர்கள் - பதிப்பாசிரியர் - கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் தமிழ்ப் பதிப்பாசிரியர்கள் - முதல் தமிழ்ப் பதிப்பாசிரியர் - அச்சு, நூற்பதிப்பு, வெளியீடு விற்பனை - கிறித்தவ இலக்கியச் சங்க அச்சகம் - அச்சகக் கண்காணிப்பாளர்கள் - கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் நூற்பதிப்புப்பணி - வெளியீடு - வெளியீட்டுத்துறை - தமிழ் - ஆங்கிலம் - மலையாளம் - தெலுங்கு - நூல்விற்பனை - நூல்விற்பனை நிலையங்கள் - பயிற்சிகள் - நூல்விற்பனைப் பொறுப்பாளர்கள் - கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் குறிக்கோள்கள் - சென்னை பாடநூல் நிறுவனம் - இலக்கிய நண்பர் வட்டம் - பூக்கூடை - சிற்றாலயம் - விருதுகள் – கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் தற்போதைய வளர்ச்சியில் தி.தயானந்தன் பிரான்சிஸ் ஆகிய செய்திகள் விளக்கப்பட்டுள்ளன.

## 3. நூல்வெளியீட்டுப்பணி

நூல்வெளியீட்டுப் பணி என்னும் மூன்றாவது இயலில் நூற்பதிப்புப்பணி - தமிழ்நூற் பதிப்பு முன்னோடிகள் - பதிப்பாசிரியர் - கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் நூல் வெளியீட்டுப்பணி - அகராதிகள் - இலக்கணங்கள் - மொழிப்பயிற்சி நூல்கள் - களஞ்சியம் - செய்யுள் இலக்கியம் - புதுக்கவிதை - சிறுகதை - நாவல்கள் - நாடகங்கள் - சிறுவர் இலக்கியம் - கட்டுரை இலக்கியம் - வாழ்க்கை வரலாறு - நல்வாழ்வு வரிசை - தேசிய ஒருமைப்பாட்டு வரிசை - தேசிய வளர்ச்சி நூல்வரிசை -

கணித நூல்கள் - பள்ளிப் பாட நூல்கள் - சமய நூல்கள் – மொழி பெயர்ப்பு நூல்கள் ஆகிய செய்திகள் விளக்கப்பட்டுள்ளன.

## 4 இதழ்ப்பணி

இதழ்ப்பணி என்னும் நான்காவது இயலில் தமிழ்நாட்டில் இதழ்களின் தோற்றம் - தொடக்கக்கால கிறித்தவ இதழ்கள் - கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் தொடக்கக்கால இதழ்கள் - பூக்கூடையின் தோற்றம் - தொடக்கக் காலச்சந்தா - ஆசிரியர் குழு - பூக்கூடையின் தற்போதைய வளர்ச்சி - வாசகர்கள் - பூக்கூடை அறிமுகப்படுத்தியுள்ள படைப்பாளர்கள் - படைப்பிலக்கியம் - பூக்கூடையில் படைப்பிலக்கியம் - கவிதை - பூக்கூடையில் கவிதைகள் - புதுக்கவிதைகள் – மரபுக்கவிதைகள் - இசைப்பாடல்கள் - சிறுகதை - பூக்கூடை சிறுகதைகளின் கரு - நாடகம் - கட்டுரை இலக்கியம் - வாழ்க்கை வரலாற்று இலக்கியம் - பயண இலக்கியம் - திறனாய்வு இலக்கியம் - கடித இலக்கியம் - பூக்கூடையும் படைப்பிலக்கியமும் - உத்தி - தலையங்கம் - பாகுபாடு - இறைவழிபாடு - விவிலியக் கருத்துக்கள் - சமுதாய நிகழ்ச்சிகள் - கிறித்தவ அறிஞர்கள் - சிறப்பிதழ்த் தலையங்கம் - பூக்கூடைத் தலையங்கம் - சிறப்பியல்பு - குட்டிக் கதைகள் - துணுக்குகள் - செய்திச் சரம் - உரையாடல் - விண்ணப்ப வீடு கோத்திரக் கோயில் - நூல் அறிமுகம் - பேட்டி - படக்கதை - வாசகர் உறவு - விவிலிய வினாவிடைப் போட்டி - விளம்பரம் - படங்கள் - அறிவிப்புகள் - பிற குறிப்புகள் ஆகிய செய்திகள் கூறப்பட்டுள்ளன.

## 5. இலக்கிய நண்பர் வட்டம்

இலக்கிய நண்பர் வட்டம் என்னும் ஐந்தாவது இயலில் இலக்கிய வட்டங்கள் - இலக்கிய நண்பர் வட்டத்தின் தோற்றம் - இலக்கிய நண்பர் வட்டத்தின் சிறப்பு - இலக்கிய நண்பர் வட்டத்தில் பங்குகொண்ட நாவலாசிரியர்கள் - நண்பர் வட்ட நூல்கள் - நண்பர் வட்ட நூல்களின் பகுப்புகள் - திறனாய்வுகள் ஆகிய செய்திகள் விவரிக்கப்பட்டுள்ளன.

## 6 ஆய்வு முடிவுரை

ஆய்வு முடிவுரை என்னும் ஆறாவது இயலில் கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் தமிழ்ப்பணி குறித்து ஆய்ந்து தெளிந்த உண்மைகள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

## பின்னிணைப்புகள்

கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் நிறுவனர் டாக்டர் ஜான் மர்டாக் புகைப்படம், கிறித்தவ இலக்கியச் சங்கம் வெளியிட்டுள்ள நூற்களின் பட்டியல், துணைநூற் பட்டியல் ஆகியன இடம் பெற்றுள்ளன.

# கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும்

## முன்னுரை

உலக அளவில் பரவியிருக்கின்ற சமயங்களுள் கிறித்தவ சமயமும் ஒன்று. அது மனித உணர்வுகளை அறிவுநிலையில் ஆராய்ந்து அணுகிச் சில விதிமுறைகளை நெகிழ்த்தி மக்களைக் கவர்ந்தது. இக்கிறித்தவ சமயம் தமிழகத்திற்கு வந்து வளர்ந்து செழித்ததன் வாயிலாக உருவான கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும் குறித்து ஆய்வதாக இவ்வியல் அமைகிறது.

## தமிழகத்தில் கிறித்தவம்

தமிழகத்தில் கிறித்தவ சமயம் கி.பி. முதல் நூற்றாண்டிலேயே வித்திடப் பெற்று விட்டது. இயேசு கிறித்துவின் சீடர்களுள் ஒருவரான புனித தோமையர் கேரள நாட்டிற்கு முதலிலும் பின்னர் தமிழகத்திற்கும் வந்து கிறித்தவத்தைப் பரப்பினார். ஆயினும் ஐரோப்பியர் வருகைக்குப் பின்னர் தான் அது வளர்ந்து பெருகிற்று. *1498* இல் போர்த்துகீசிய நாட்டவரான வாஸ்கோடகாமா இந்தியாவிற்குப் புதிய கடல் வழியைக் கண்டுபிடித்தார். இதனைத் தொடர்ந்து வந்த ஐரோப்பியர்களால் இந்தியாவில் கிறித்தவ சமயம் பரவ ஆரம்பித்தது. தமிழகத்தில் கத்தோலிக்கக் கிறித்தவமும், திருத்த முறைக் கிறித்தவமும் பரவியது.

திருத்தமுறைக் கிறித்தவத்தைத் தமிழகத்தில் பரப்ப செர்மனி நாட்டில் பிறந்தவர்களான **சீகன்பால்கு** என்பவரும் **பிளீச்செள** என்பவரும் கி.பி.1705ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 24ஆம் தேதி கப்பலில் தரங்கம்பாடி வந்தனர். தரங்கம்பாடியில் வந்திறங்கி இறைப்பணியைத் தொடங்கிய சீகன்பால்கு, பிளீச்செள மொழி மாறுதலால் இன்னலுற்றனர்.

இறையியல் உண்மைகளை வாய்மொழியாகவே கூறிவந்த சீகன்பால்கு ஐயர் ஓலைச்சுவடிகளையே பயன்படுத்தி வந்ததால் அச்சுப்புத்தகங்களை வெளியிட விரும்பினார். அவ்விருப்பத்தை செர்மனியில் உள்ள தன் நண்பர்களுக்குக் கடிதம் மூலம் வெளிப்படுத்தினார். அக்கடிதத்தில் தமிழ் எழுத்துக்களின் வடிவத்தையும் எழுதி அனுப்பினார். அதன்படி தமிழ் அச்செழுத்து சீகன்பால்கு எழுதி அனுப்பிய வரிவடிவிலேயே செய்து கொண்டு வரப்பட்டது. அச்சு எழுத்துக்கள், அச்சுப்பொறி, அச்சுத்தாள் ஆகியவற்றைப் பெற்றுக் கொண்ட சீகன்பால்கு ஐயர் கி.பி.1708இல் விவிலியத்தை மொழிபெயர்க்கத் தொடங்கினார். இதற்கிடையில் பிலிப்ஸ் பல்தேயுஸ் என்பவர் யாழ்ப்பாணத்தில் மொழிபெயர்த்த விவிலியத்தின் ஒரு பகுதியான மத்தேயு நற்செய்தி சீகன்பால்கு ஐயருக்குக் கிடைத்தது. அந்தத் தமிழ் நடை அவருக்கு உகந்ததாக இல்லையாதலால் அதனைத் தொடரவில்லை. எனினும் தாமே தொடங்கிய மொழிபெயர்ப்புப் பணியைத் தொடர்ந்து செய்து கி.பி.1711இல் முடித்தார்.[1]

பின்னர் சீகன் பால்கு தரங்கம்பாடியில் அச்சகம் அமைத்தார். கி.பி.1713இல் விவிலியத்தையும் இறைவேண்டுதல் புத்தகங்களையும் அச்சிட்டார். காகிதம் போதிய அளவிற்கு இல்லாததால் கி.பி.1715இல் தரங்கம்பாடியை அடுத்த பொறையாறு என்ற இடத்தில் காகிதம் தயாரிக்கும் தொழிற்சாலையை அமைத்தார்.[2] பொது மக்களும் படித்து இன்புறும்படி தமிழில் வெளிவந்த முதல் அச்சுநூல் புதிய ஏற்பாடு எனும் விவிலியப் பகுதியாகும்.

**சீகன்பால்கு ஐயரின் பணிகள்**

தமிழகத்தில் சீகன்பால்கு ஐயரின் பணிகளைப் பின்வருமாறு வகைப்படுத்தலாம். அவை:

1. தமிழ்ப்பணி
2. மொழிபெயர்ப்புப் பணி

3. அச்சுப்பணி
4. ஆலயப்பணி
5. நற்செய்திப்பணி
6. கல்விப்பணி
7. அகராதிப்பணி
8. எழுத்துப்பணி

என்பனவாகும்.

**தமிழ்ப்பணி**

புதியவற்றைப் படைப்பதைவிட முன்பு படைக்கப்பட்டவற்றைப் பாதுகாப்பதே தமிழுக்குச் செய்யும் தொண்டாக இருக்கும் என்று எண்ணிய சீகன்பால்கு ஐயர் ஓலைச்சுவடிகளைத் தேடிக் கண்டுபிடித்தார். அவற்றைத் தொகுத்து 1708ஆம் ஆண்டு தமது நூலகத்தில் வைத்தார். அச்சுவடிகள் தற்போது இலண்டனிலுள்ள பிரிட்டிஷ் பொருட்காட்சிச் சாலையிலுள்ளது. அதில் உலக நீதி எனும் ஓலைச்சுவடியும் ஒன்றாகும்.[3]

**மொழிபெயர்ப்புப்பணி**

சீகன்பால்கு 1708ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 17ஆம் தேதி ஊக்கமான வேண்டுதலுடன் புதிய ஏற்பாட்டை மொழிபெயர்க்கத் தொடங்கினார். 1711ஆம் ஆண்டில் மார்ச் மாதம் 31ஆம் நாள் அதாவது மூன்றே ஆண்டுகளில் புதிய ஏற்பாட்டை மொழிபெயர்த்து முடித்தார்.

**அச்சுப்பணி**

திருமறையின் பிரதிகளைக் கையால் எழுதிப்பரப்பப் பெருந்தொகையும், நேரமும் செலவிடுகிறார்கள் என்று இங்கிலாந்து நாட்டு கிறித்தவர்கள் கேள்விப்பட்டு உடனே அச்சு இயந்திரம் ஒன்றையும், அத்துடன் ரோமன்

எழுத்துக்களையும் அனுப்ப எண்ணினார்கள். அச்சு இயந்திரத்தை இயக்கிக் காட்டி கற்றுக்கொடுக்க, யோனோபின்கே என்ற பக்தியுள்ள செர்மனி நாட்டு நிபுணரையும், 100 ரிம் காகிதத்தையும், 213 போர்த்துக்கீசிய புதிய ஏற்பாட்டுப் பிரதிகளையும் 1711ஆம் ஆண்டில் கப்பலில் அனுப்பினார்கள். அச்சு இயந்திரம் 1712ஆம் ஆண்டு தரங்கம்பாடிக்கு வந்து சேர்ந்தது.[4]

1714ஆம் ஆண்டு முதல் புதிய ஏற்பாடு தமிழில் அச்சிடப்பட்டு வெளியானது. இந்திய மொழிகளில் முதன் முதலில் தமிழ் மொழியில் தான் திருமறை அச்சிடப்பட்டு வெளிவந்தது. திருமறையை படித்தவர் முதல் பாமரர் வரை பயன்படுத்த ஆரம்பித்தார்கள். 1717ஆம் ஆண்டில் முதன் முதல் இந்தியாவில் நாள்காட்டி (Calender) தரங்கை அச்சகத்திலிருந்து அச்சிடப்பட்டு வெளியானது.[5]

**ஆலயப்பணி**

சீகன்பால்கு ஐயரின் அயராத உழைப்பினால் தரங்கையில் இரண்டே மாதங்களில் ஓர் ஆலயம் கட்டி முடிக்கப்பட்டது. 1707ஆம் ஆண்டு ஆகஸ்டு 14ஆம் நாள் எருசலேம் ஆலயம் என்ற பெயரில் திருத்திறப்பு செய்யப்பட்டது. அது முதல் புதிய எருசலேம் ஆலயத்தில் வழிபாடுகள் நடந்தன.

**நற்செய்திப்பணி**

சீகன்பால்கு ஐயரும் புளுட்சோவும் ரோமன் கத்தோலிக்கச் சபையின் நற்செய்தித் தொண்டர்கள் பின்பற்றிய எந்த முறையையும் பின்பற்றவில்லை. தங்களுடைய சூழலுக்கேற்ப தாங்களாகவே புதிய முறைகளையும் வழிகளையும் சிந்தித்து உருவாக்கி நற்செய்திப் பணியாற்றினார்கள். முதன் முதலில் சீகன்பால்கு ஐயர் சில அடிமைகளுக்குத் திருமுழுக்குக் கொடுத்தார்.

**கல்விப்பணி**

1706ஆம் ஆண்டு சீகன்பால்கும் அவர் உடன்பணிபுரிபவர்களும் சேர்ந்து இரண்டு பள்ளிகளை நிறுவினர். ஒன்று **டேனோ போர்த்துக்கீசிய பள்ளி** மற்றொன்று தமிழ்ப்பள்ளி. 1712 வரை சீகன்பால்கு ஐயர் ஐந்து பள்ளிகளைத் தோற்றுவித்தார். அங்குக் கிறித்தவ மதத்தைத் தழுவியவர்களுக்கு இலவசமாக உணவும், உடையும், புத்தகமும் கொடுக்கப்பட்டன.

1707ஆம் ஆண்டு பெண்களுக்கான தமிழ்ப்பள்ளிக்கூடம் தரங்கையில் தொடங்கப்பட்டது. இந்தியப் பெண்களுக்காக இந்தியாவில் ஆரம்பிக்கப்பட்ட முதல் பள்ளி இதுவேயாகும். சீகன்பால்கு ஐயர் இந்தியாவிற்கு வந்த பத்தே ஆண்டுகளில் தரங்கம்பாடியைச் சுற்றி சுமார் 20 பள்ளிகளைத் துவக்கினார்.[6]

**அகராதிப்பணி**

அச்சு வசதி ஏற்படுவதற்கு முன்புவரை சீகன்பால்கு ஐயர் நூல்களையெல்லாம் கையாலேயே எழுதி வந்தார். அவர் எழுத்து வழக்கில் இல்லாத சொற்களை தொகுத்தார். 20,000 சொற்கள் அடங்கிய அகராதியை வெளியிடத் திட்டம் செய்தார். சமயம், தத்துவம், மருத்துவம், மொழியியல், வரலாறு தொடர்பான சொற்களையும் இந்த அகராதியில் சேர்த்தார். நான்கு ஆண்டுகளில் 40,000 சொற்கள் இடம்பெற்றன.[7] இவர் தொகுத்த அகராதியானது மூன்று பகுதிகளைக் கொண்டதாக இருந்தது. தமிழ்ச்சொல், அதை உச்சரிக்கும் முறை, செர்மன் மொழியில் அதன் பொருள் ஆகிய முக்கூறுகள் இடம் பெற்றிருந்தன. சீகன்பால்கு ஐயர் செய்யுள் அகராதியையும் தொகுத்தார். அதில் 17,000 சொற்களும், மரபுத் தொடர்களும் வெளியிடப்பெற்றன.

**எழுத்துப்பணி**

கிறித்தவர்களுக்குத் தங்கள் மொழியில் பாடப்பாட்டுக்கள் இருக்க வேண்டும் என்றுணர்ந்து சீகன்பால்கு 1707இல் மார்ச் மாதம் தொடங்கி பாட்டுக்களை மொழிபெயர்க்கத் தொடங்கினார். ஐரோப்பியப் பண்களுக்கு இசைந்த ஞானபாட்டுக்கள் மாத்திரம் போதாதெனத் தீர்மானித்து தமிழ்ப் பண்களுக்கேற்ற கீர்த்தனைகளையும் இயற்றினார்.

1708 செப்டம்பர் 14ஆம் நாள் இவர் தனது நண்பனுக்கு எழுதிய கடிதம் ஒன்றில் தாம் தமிழில் பதினான்கு நூற்களை எழுதியதாகவும், அதுவும் தமிழ்கற்ற இரண்டு ஆண்டுகளுக்குள் எழுதியதாகவும் குறிப்பிடுகிறார். சீகன்பால்கு ஐயர் தமிழ்மொழியைத் தவிர வேறு மொழிகளிலும் நூல்கள் எழுதியுள்ளார். இவ்வாறு பல்வேறு பணிகளைச் செய்த சீகன்பால்கு ஐயர் 1719 ஆண்டு பிப்ரவரி மாதம் 23ஆம் நாளில் மரணமடைந்தார்.

**கிறித்தவர்களின் இலக்கியப்பணி**

இந்தியாவில் முதன் முதலில் அச்சிடப்பட்ட மொழி தமிழ்மொழியே என்னும் பெருமையைத் தமிழுக்குத் தந்தவர்கள் கிறித்தவர்கள். தமிழில் மொழியின் வளர்ச்சிக்கும், இலக்கியத்தின் வளர்ச்சிக்கும் கிறித்தவர்களின் பங்கு குறிப்பிடத் தக்கதாகும்.

இலக்கிய நோக்கின்படி தமிழ் இலக்கியம் என்ற ஒரே வகைப்படுத்தல் தான் இருக்க முடியும். எச்சமயத்தவரால் படைக்கப்பெற்றாலும் தமிழில் உருவாகும் இலக்கியம் தமிழ் இலக்கியமே. உலக இலக்கிய வரலாற்றில் தமிழுக்குக் கிடைத்த சமயத் தொண்டு போன்றது வேறு எந்த மொழிக்கும் கிடைத்திருக்காது எனலாம்.

தமிழகத்தில் கிறித்தவத்தைப் பரப்ப வந்த ஐரோப்பியப் பாதிரிமார்களால் தமிழ் மேலும் மெருகு பெற்றது எனலாம். அவர்களின் வருகைக்கு முன்

தமிழ்மொழி கல்வெட்டுகளிலும், ஓலைச்சுவடிகளிலும், கையெழுத்துப் பிரதிகளிலுமே இடம்பெற்றிருந்தது. கி.பி.14ஆம் நூற்றாண்டில் ஐரோப்பாவில் ஜான் கூட்டன்பர்க் என்பவரால் கண்டுபிடிக்கப்பட்ட அச்சுப்பொறியின் பயனை நன்கு உணர்ந்திருந்த இவர்கள் தமது சமயக் கருத்துக்களைப் பரப்ப தமிழ்மொழிக்கு அச்சு வடிவம் அளித்தனர்.[8]

தமிழகத்திற்கு வந்த ஐரோப்பியக் கிறித்தவர்களுள் தத்துவ போதகர் என்று அழைக்கப்படும் ராபர்ட் டி. நொபிலி, வீரமாமுனிவர், கால்டுவெல், ஜி.யு. போப், பெர்சிவல் ஐயர், ஜான் மர்டாக் போன்றோர் குறிப்பிடத்தகுந்தவர்கள். இவர்களைப் பின்பற்றி மேலும் பலர் இந்தியாவிற்கு வந்து சமயப்பணியுடன் மொழி மற்றும் இலக்கிய வளர்ச்சிக்கான பணிகளையும் மேற்கொண்டனர். இவர்களில் ஜான் மர்டாக் கிறித்தவ இலக்கியச் சங்கத்தைத் தோற்றுவித்தார்.)

**கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் தோற்றம்**

இந்தியாவில் குறிப்பாகத் தமிழ்நாட்டில் பொதுமக்கள், ஆசிரியர், மாணவர்கள் ஆகியோரின் நலனை முன்னிட்டுப் பல்வேறு நூல் வெளியீட்டு நிறுவனங்கள் 19ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் தொண்டாற்றி வந்தன. கி.பி.1818-இல் தோற்றுவிக்கப்பட்ட சென்னை சமயக்கைத்தாள் மற்றும் பாடநூல்கள் சங்கம் இந்தியா, பர்மா, இலங்கை ஆகிய மூன்று நாடுகளிலும் இலக்கியப் பணி ஆற்றி வந்தன.

கி.பி. 1854இல் தென்னிந்தியப் பாடநூல் நிறுவனம் தொடங்கப்பட்டது.[9] இந்திய நிறுவனங்கள் பெரும்பாலும் சமயப் பிரசுரங்களையும் ஆங்கிலத்தைப் பயிற்றுமொழியாகக் கொண்ட பாடநூல்களையும் வெளியிட்டு வந்தன. இதனால் தாய்மொழி வாயிலாகக் கல்வி கற்க இயலாத நிலை ஏற்பட்டது. இதனைத் தவிர்க்கும் நோக்கத்தில் கி.பி.1858-இல் கிறித்தவ தாய்மொழிக் கல்விச் சங்கம்

தோற்றுவிக்கப்பட்டது. இச்சங்கத்துடன் முதலில் தென்னிந்தியப் பாடநூல் நிறுவனம் இணைந்து பணியாற்றியது.

கி.பி.1890ஆம் ஆண்டு கிறித்தவ தாய்மொழிக் கல்விச்சங்கம் இந்தியக் கிறித்தவ இலக்கியச் சங்கம் எனும் பெயரைப் பெற்றது. டாக்டர் மர்டாக் இச்சங்கத்தின் முதல் பொதுச்செயலாளராகப் பணியாற்றினார். சமய நூல்களும், பாட நூல்களும் இருபத்திரண்டு மொழிகளில் வெளியிடப்பட்டு வந்தன. கொழும்பு, யாழ்ப்பாணம், கல்கத்தா, பம்பாய், அலகாபாத், இரங்கூன் ஆகிய இடங்களில் இதன் கிளைகள் நிறுவப்பட்டன[10] எனும் கருத்து கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் ஆரம்பகாலச் சிறப்பை எடுத்துரைக்கின்றது. இக்காலக் கட்டத்தில் டாக்டர் மர்டாக் சென்னைப் பல்கலைக்கழகத்துடன் தொடர்பு கொண்டிருந்தார்.

கி.பி.1915இல் சென்னை சமயக்கைத்தாள் மற்றும் பாட நூல்கள் சங்கமும் இத்துடன் இணைந்தது. இந்திய விடுதலைக்குப் பின்பும் கி.பி.1953 வரை இச்சங்கம் இங்கிலாந்தில் உள்ள கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் அங்கமாகச் செயல்பட்டு வந்தது.

1953ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் இது தன்னாதிக்கம் பெற்ற இந்தியச் சங்கமாக 1913ஆம் ஆண்டு கம்பெனிகள் சட்டத்தின் ஏழாவது பிரிவின்படி பதிவு செய்யப்பட்டது. அன்றிலிருந்து இன்று வரை நற்செய்தி, கல்வி, சமூகப் பணிக்கான இலாப நோக்கமற்ற நிறுவனமாக இயங்கி வந்து கொண்டிருக்கிறது என்பது குறிப்பிடத்தக்கது.[11]

**கிறித்தவ இலக்கியச் சங்க தோற்றத்தின் வரலாற்றுப்பின்னனி**

கி.பி.19ஆம் நூற்றாண்டில் அரசாங்கமும், திருச்சபைகளும் தென்னிந்தியாவில் கல்வியின் தேவையையும் அவசியத்தையும் உணர்ந்து பல்வேறு கல்வி நிறுவனங்களை ஏற்படுத்தின. இக்கல்வி நிறுவனங்களில்

இருவிதமான இலக்கியப்பணிகள் மேற்கொள்ளப்பட்டன. ஒன்று சமயச் சார்பான நற்செய்திப்பிரசுரங்களை அளிப்பதும், மற்றொன்று ஆங்கிலம் அல்லது தாய்மொழி வாயிலாகப் பொதுக் கல்வியைக் கற்றுத் தருவதும் ஆகும். இக்காரணங்களால் தேவைப்பட்ட கைப்பிரதிகள் மற்றும் புத்தகங்களைப் பல்வேறு நிறுவனங்களும் தயாரித்து அளித்தன. இவ்வித நிறுவனங்களில் சென்னை சமயத்துண்டுப் பிரதி மற்றும் நூல்கள் சங்கமும் தென்னிந்தியப் பாடநூல் சங்கமும் குறிப்பிடத்தக்கவை.[12] மேலை நாட்டினர், இந்திய ஆசிரியர்கள், ஆய்வாளர்கள் முதலியோரின் உடனடிப் புத்தகத் தேவையை ஈடு செய்வதற்காக ஊக்கத்துடன் உழைத்தனர். இவர்கள் மட்டுமின்றி ஆசிரியர்கள், அரசாங்க ஊழியர்கள், வணிகர்கள், இராணுவத்தினர் ஆகியோர் கல்வியில் அக்கறை காட்டினர்.

அக்காலத்தில் தமிழிலும் மற்றும் பிற இந்திய மொழிகளிலும் அச்சிடுவதைக் காட்டிலும் ஆங்கிலத்தில் அச்சிடுவதே எளிதாய் இருந்ததால் பல அச்சகங்களும் ஆங்கிலத்தில் நூல்களை அச்சிடலாயின. ஆனாலும் தாய்மொழி வாயிலாகக் கல்வி கற்க வேண்டியது மிகவும் அவசியமானதாய் இருந்ததால் அவ்விதத்தில் நூல்களை அச்சிடுவதற்கு மிகுந்த சிரத்தை மேற்கொள்ளப்பட்டது. இந்நிலையில்தான் தாய்மொழி வாயிலாகக் கல்வி கற்க வகை செய்யும் விதத்தில் கிறித்தவத் தாய்மொழிக் கல்விச் சங்கம் என்னும் தற்போதைய கிறித்தவ இலக்கியச் சங்கம் ஜான்மர்டாக் என்பவரால் கி.பி.1858 இல் தோற்றுவிக்கப்பட்டது.[13]

**கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் நோக்கம்**

கிறித்தவ இலக்கியச் சங்கம் சமயச் சார்புடையதாக இருந்த போதிலும் சமய இலக்கியங்கள் மட்டுமின்றி தமிழ்மொழிக்கும், இலக்கியத்திற்கும் பல விதங்களில் தொண்டு செய்வதையே தனது நோக்கமாகக் கொண்டுள்ளது. சாதி, மதம், மொழி,

இனம் என்ற கட்டுகளை எல்லாம் கடந்து மனிதநேயம், சமத்துவம், சகோதரத்துவம் என்ற நோக்கில் செயல்பட்டு வருகின்றது.

தகுந்த நூல்களை, தகுந்த முறையில் அதிக இலாபம் பெற வேண்டும் என்னும் பேராசையின்றி வெளியிடுவதுதான் வெளியிடுவோர் வாங்குவோர் ஆகிய இரு சாராருக்கும் பயன் ஏற்படக்கூடிய வழி ஆகும்.[14] இலாபத்தை மட்டுமே நோக்கமாகக் கொண்டு செயல்படாமல் தொண்டு மனப்பான்மையுடன் கிறித்தவ இலக்கியச் சங்கம் இயங்கி வருகிறது.

சிறந்த தமிழிலக்கிய நூல்கள், கிறித்தவ இலக்கிய நூல்கள், மக்கள் அறிவு வளர்ச்சிக்கும் மன வளர்ச்சிக்கும் உதவும் நூல்கள், பொதுநூல்கள் ஆகியவற்றைத் தமிழ் மொழியின் மூலமாக வெளியிட்டு வருகின்றது.

**கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் அமைவிடம்**

கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் தலைமைச் செயலகம் சென்னை பூங்கா நகர்ப் பகுதியில் மெமோரியல் கட்டிட வளாகத்தில் அமைந்துள்ளது. இங்குப் பொதுச்செயலர் அலுவலகம், தமிழ், ஆங்கிலம், பதிப்புத்துறைகள், கணக்காளர் அலுவலகம், நூல் விநியோகத்துறைச் செயலகம், பணியாளர் கண்காணிப்புத் துறை மற்றும் நூல் விற்பனை நிலையம் ஆகியவை அமைந்து செயல்படுகின்றன. கிறித்தவ இலக்கியச் சங்கத்திற்குச் சொந்தமாக இரண்டு அச்சகங்கள் உள்ளன. அவை, சென்னை வேப்பேரியில் உள்ள டயோசிசன் அச்சகமும், பெங்களூரில் உள்ள சி.எல்.எஸ். அச்சகமும் ஆகும். வேப்பேரியிலுள்ள டயோசிசன் அச்சகம் 1998ஆம் ஆண்டு முதல் சி.எல்.எஸ். அச்சகம் எனப் பெயர் மாற்றம் செய்யப்பட்டு தமிழ்ப்பணி ஆற்றி வருகின்றது. இவ் அச்சகம் தற்போது கிறித்தவ இலக்கியச் சங்கக் கட்டடத்தில் இயங்கி வருகின்றது.

**கிறித்தவ இலக்கியச்சங்கத்தின் சிறப்பு**

கிறித்தவ இலக்கியச் சங்கம் தோற்றுவிக்கப்பட்டது முதல் இந்நாள் வரை இச்சங்கம் வெளியிட்டுள்ள கல்வி, கலாச்சார நூல்கள் இந்தியாவில் குறிப்பாகத் தமிழ்நாட்டில் கல்வி வளர்ச்சிக்குப் பெரிதும் துணைபுரிந்துள்ளன. கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் மூலம் வெளியிடப்பட்ட அகராதிகள், மொழிப்பயிற்சி நூல்கள், இலக்கண நூல்கள், நாவல்கள், சிறுகதைகள், கவிதைத் தொகுப்புகள், சிறுவர் நூல்கள், மகளிர் நூல்கள் ஆகியவை இன்றைய தமிழ்மொழி மற்றும் கிறித்தவ இலக்கிய வளர்ச்சிக்கு அடிப்படையாக அமைந்தன என்பது உண்மை. கிறித்தவ இலக்கியச் சங்கம் தனது நூற்று இருபத்தைந்தாவது ஆண்டு நிறைவு விழாவை 1983ஆம் ஆண்டு டிசம்பர் திங்களில் கொண்டாடியது.

**கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் பொதுச்செயலாளர்கள்**

கிறித்தவ இலக்கியச் சங்கம் எட்டு உறுப்பினர்களைக் கொண்ட ஓர் ஆட்சிக் குழுவினால் நிர்வகிக்கப்பட்டு வருகிறது என்றாலும் இதன் நிர்வாகப் பொறுப்பு இச்சங்கத்தின் பொதுச் செயலாளரிடம் உள்ளது. கி.பி.1967 வரையில் மேனாட்டவரே இப்பதவியை வகித்து வந்துள்ளனர். பொதுச் செயலாளர்கள் பற்றிய விபரம் அவர்கள் பணிபுரிந்த ஆண்டு வாரியாகக் கீழே தரப்பட்டுள்ளன.

| | | | |
|---|---|---|---|
| 1. | ஜான் மர்டாக் (நிறுவனர்) | - | 1858-1904 |
| 2. | எச். கிளிப்போர்ட் | - | 1904-1908 |
| 3. | பாஸ்மோர் | - | 1908-1926 |
| 4. | வில்லியம் ஹென்றிவாரன் | - | 1926-1954 |
| 5. | பிலிப் பென்னிங் | - | 1954-1968 |
| 6. | ஏ.டி. மனுவேல் | - | 1968-1973 |
| 7. | அலெக்சாண்டர்ஜான் | - | 1974-1978 |
| 8. | தி. தயானந்தன் பிரான்சிஸ் | - | 1979- |

**கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் நிறுவனரும் முதல் பொதுச் செயலாளரும்**

கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் நிறுவனரும் முதல் பொதுச் செயலாளரும் டாக்டர் ஜான் மர்டாக் ஆவார். 1819ஆம் ஆண்டு ஜூலை 22ஆம் நாள் ஸ்காட்லாந்திலுள்ள கிளாஸ்கோ எனும் ஊரில் பிறந்தார். இவருடன் பிறந்தவர்கள் பன்னிரண்டு பேர்கள். இதில் இவர் மூன்றாவது மகன். இவர் இளமையிலே மிகவும் திறமை மிக்கவராகக் காணப்பட்டார்.

இவருடைய குடும்பத்தினர் தங்களுடைய ஓய்வு நேரங்களில் சுற்றுலா செல்வது வழக்கம். இவருடைய தந்தையார் இவர்களைக் கடற்கரைப் பகுதிகளுக்குத்தான் அதிகமாக அழைத்துச் செல்வார். சில வேளைகளில் கடற்கரையைச் சார்ந்த கிராமப்புறங்களில் ஐந்து அல்லது ஆறு வாரங்கள் தங்கியிருப்பார்கள்.

இவர் கல்வி கேள்விகளில் மிகச் சிறந்தவராக விளங்கினார். தன்னுடைய தனிப்பட்ட முயற்சியால் ஓவியத்திலும், இசையிலும் சிறந்தவராக விளங்கினார்.

தன்னுடைய 19ஆம் வயதில் (1838) ''ஆர்ம்ஸ்டர்டாம்'' என்ற இடத்திலுள்ள கிளாஸ்கோ பல்கலைக்கழகத்தில் மேற்படிப்பைத் தொடர்ந்தார். அதனுடைய நிறைவாக அதே பல்கலைக்கழகத்தில் அருள்திரு. இராபர்ட் குன்னிகாம் என்பவரிடம் ஆயருக்கான கல்வியையும் பெற்றார்.

இச்சூழலில் 'ஜான் மர்டாக்' அவர்களுக்கு இலங்கை அரசுப் பள்ளியில் தலைமை ஆசிரியர் பணிக்கான அழைப்பு வந்தது. எனவே இவர் லண்டன் சென்று மூன்று வாரங்கள் காத்திருந்து கப்பலுக்குப் பயணச்சீட்டைப் பெற்று அங்கிருந்து இலங்கைக்கு 1844ஆம் ஆண்டு ஏப்ரல் 6ஆம் தேதி பயணம் மேற்கொண்டார். இவர் பயணம் செய்த கப்பலின் பெயர் 'ஆப்ரிக்கா' என்பதாகும். அப்போதெல்லாம் கடல் பயணம் மிகவும் மெதுவாகத்தான் இருக்கும். தவிர சில

இடங்களில் நின்று செல்லும். இடையிடையே மர்டாக் தன் குடும்பத்தாருக்கு கடிதம் எழுதி வந்தார். ஒரு சமயம் 'ஆப்ரிக்கா கேப்' என்ற இடத்திலிருந்து ஜூன் 30ஆம் தேதி தன் குடும்பத்துக்கு எழுதிய கடிதக் குறிப்பை அவருடைய வாழ்க்கைக் குறிப்பில் காண முடிகிறது. இவர் மேற்கொண்ட பயணமானது ஆகஸ்ட் மாதம் 17ஆம் தேதி 1844இல் நிறைவு பெற்று கப்பல் கொழும்பு துறைமுகத்தை அடைந்தது.

1844 நவம்பர் 24ஆம் தேதி கொழும்பு நகரில் உள்ள அரசு மையப் பள்ளியில் தலைமை ஆசிரியராகப் பதவியை ஏற்றுக் கொண்டார். தன்னுடைய தாய்நாட்டை விட்டுப் பிரிந்து இருப்பது கொஞ்சம் வருத்தமாய் இருந்தாலும், கொழும்பு நகரில் காணப்பட்ட இடங்களும், இயற்கைச் சூழலும், புத்த மடங்களும், மசூதிகளும், இந்துக் கோயில்களும் இவருக்குப் புதுமையாகவும் மனதுக்கு சற்று மகிழ்ச்சி அளிப்பதாகவும் இருந்தன.

1847ஆம் ஆண்டு மார்ச்சு 17ஆம் தேதி தன் தந்தையின் மரணச் செய்தியைக் கேட்டு மனம் துடித்துப் போனார். அந்தச் செய்தியோடு கூட தன் தந்தை பயன்படுத்திய கைக்கடிகாரத்தை அம்மா அனுப்பி வைத்திருந்தார். அதனை ஞாபகச் சின்னமாக பாதுகாத்து வைத்துக்கொண்டார்.

1848ஆம் ஆண்டு திடீரென கொழும்பு நகரில் வியாபாரிகள் தங்கள் தொழிலில் நஷ்டம் அடைந்தார்கள். அதனை ஈடு செய்ய அவர்களால் இயலவில்லை. எனவே அநேகர் அங்கிருந்து இடம் பெயர்ந்து ஆஸ்திரேலியாவுக்குச் சென்றுவிட்டனர். இதனால் கல்வி நிலையங்களும் பாதிக்கப்பட்டன. மாணவர்கள் வருகையும், சேர்க்கையும் குறையத் தொடங்கியது. பல பள்ளிகள் இடிக்கப்பட்டன. இச்சூழலில் மர்டாக் ஆகஸ்ட் முதலாம் தேதி தன் பணியை ராஜினாமா செய்துவிட்டார். பிறகு சிறிது காலம் கழிந்த பிறகு தன்னுடைய ஆயர் கல்வி அவருக்கு கை கொடுத்தது. இதனை மையமாகக்

கொண்டு "LOCAL TRACK SOCIETY" என்ற ஒரு சிறிய நிறுவனத்தை ஆரம்பித்தார். கிறித்தவச் செய்திகளையும், கிறித்தவ இலக்கியங்களையும் பற்றி ஆராய்ந்து அதனைக் குறித்து எழுத ஆரம்பித்தார்.

மேலும் இந்தியா, இலங்கை போன்ற நாடுகளில் கிறித்தவம் பரவி வருவதைக் கண்டார். எனவே தானும் அதனை மேற்கொண்டு வளர்க்க வேண்டும் என்ற அவாவில் அநேக கிறித்தவ நூல்களை எழுத ஆரம்பித்தார். பல நூல்களையும் வெளியிட்டார். இதனையே தன் பணியாகக் கொண்டு செயல்பட்டமையால் நாளடைவில் தன் வாழ்வையே இறைப்பணிக்காக அர்ப்பணித்துக் கொண்டார்.

இவர் ஆரம்பித்த கைப்பிரதிக் கழக ஊழியத்தின் வளர்ச்சிக்காக அதிக முயற்சி எடுத்துக் கொண்டார். இவரே தன் கைப்பட எழுதிய பிரதிகளை அச்சடித்து மக்களுக்கு விநியோகம் செய்து வந்தார்.[15]

இலங்கையில் எங்கெல்லாம் நற்செய்தியாளர்கள் (Missionaries) வந்திருந்தார்களோ அங்கெல்லாம் சென்று அவர்களோடு தன் பணியையும் இணைத்துக் கொண்டு அவர்களின் நட்புக்கும், ஊழியத்திற்கும் ஏற்றவராய்க் காணப்பட்டார். அவர்களும் இவருக்குப் பல வழிகளில் ஆலோசனைகளையும், உதவிகளையும் செய்தனர். பிறகு கிறித்தவர்களின் வாழ்க்கை மற்றும் கிறித்தவ மதம் பரவுதல், கிறித்தவ மிஷனரிமார்களின் பணி, கிறித்தவம் தொடர்பான செய்திகள் போன்றவற்றை அனைவரும் அறிய வேண்டும் என்ற நோக்கத்தால் 1850ஆம் ஆண்டுத் தொடக்கத்தின் முதல் நாளில் 'SINHALESE' என்ற மாதப்பத்திரிக்கையை ஆரம்பித்து அதன் மூலமாக தன்னுடைய எண்ணத்தையும், பல செய்திகளையும் வெளியிட்டார்.

இந்தப் பத்திரிக்கையை நடத்த இவருக்குப் பொருளுதவி தேவைப்பட்டது. உடனே இவருடைய ஊரான கிளாஸ்கோ "WELINTONSTREET UNITED PRESBYTERIAN CHURCH" இவருக்கு உதவிகளைச் செய்தது. இச்சமயத்தில் அருள்திரு. வில்லியம்

கினைட் (Rev. WILLIAM KNIGHT) என்பவர் கொழும்பில் மர்டாக்கைச் சந்தித்தார். இவர் "The Church Missionary Society in Madras" என்ற அமைப்பைச் சேர்ந்தவர். இவர்கள் இருவரும் சேர்ந்து கலந்துபேசி "Tamil Coolie Mission" என்ற அமைப்பை மக்களுக்காக உருவாக்கினார்கள்.

இவ் இயக்கத்தைப்பற்றிக் கேள்விப்பட்டு திருநெல்வேலியைச் சார்ந்த அருள்திரு. ஜான் தாமஸ் என்பவர் மர்டாக்குடன் சேர்ந்துகொண்டு தன்னுடைய பங்கையும் அளித்தார். இவர்கள் பல்வேறு பள்ளிகள், இடங்களில் சென்று நிறுவனங்களின் குறைகளையும், நிறைகளையும் ஆராய்ந்தார்கள். அநேகப் பள்ளிகளில் பிள்ளைகள் படிக்கத் தேவையான பாடநூல்களே இல்லை என்பதை அறிந்து மனம் வருந்தினார் மர்டாக்.

இக்குறையைப் போக்க வேண்டும் என்ற ஆர்வத்தில் சென்னைக்கு 1854 ஜூலை மாதம் 9ஆம் தேதி சென்றார். சென்னைப் பேராயரைப் பார்த்து அவரிடம் அனுமதி பெற்றுக்கொண்டு "SOUTH INDIAN CHRISTIAN SCHOOL BOOK SOCIETY" என்ற நிறுவனத்தை நிறுவினார். இந்நிறுவனத்திற்கு கவர்னர் லார்டு காரீஸ் (GOVERNER LORD HARRIS) தலைவராகவும், பேராயர் டியல்டிரை (DEALTRY) குழு அமைப்புத் தலைவராகவும், மர்டாக் முகவராகவும் இருந்து செயல்படலானார்கள்.

தன் தாய்நாட்டை விட்டு சுமார் 11 ஆண்டுகள் இந்தியா, இலங்கை மற்றும் பிற இடங்களில் தன்னுடைய பணியைச் செய்து வந்தமையால், குடும்ப நினைவு திடீரென இவர் மனதில் தோன்றியது. உடனே 1854ஆம் ஆண்டு பிரிட்டன் நோக்கி பயணம் செய்தார்.

சிறிது காலம் தன் குடும்பத்தினருடன் கழித்துவிட்டு 1855 ஜூலை 16ஆம் நாள் இலங்கைக்குத் திரும்பினார். பிறகு தன்னுடைய பணிக்காக சென்னை, இலங்கை என்று மாறி மாறிச் சென்று கிறித்தவ இலக்கியச் சங்கத்திற்கான செய்திகளையும், தரவுகளையும் சேகரித்தார். இதனுடைய பயனாக இவர்

விரைவிலே தமிழ்மொழியைக் கற்றுக் கொள்கிற வாய்ப்பைப் பெற்றுக் கொண்டார். இதனால் இவருக்குப் பெரும் பயன் கிடைத்தது.

ஜான் மர்டாக் தன்னுடைய வாழ்க்கையை ஒரு பயணமாகவே நடத்தி வந்தார். அதனால் பயணம் செய்யும் போது அதிகம் படிக்கவும், எழுதவும், தியானிக்கவும் நேரம் கிடைத்தது. இச்சூழலில் சென்னையில் நிறுவிய Christian School Book Society-யை ஒருவரும் சரியாக நடத்தவில்லை என்று கேள்விப்பட்டு மன வேதனைப்பட்டார். அதனைப் புதுப்பிக்கவும், சரியாக நடத்தவும் மனதிலே தீர்மானித்தார்.

1857 முதல் 1859 வரையான காலகட்டத்தில் பலருடன் கலந்து பேசி இந்தியாவுக்காக, இலண்டனில் "CHRISTIAN VERNACULAR SOCIETY" என்பதை நிறுவினார். இந்நிறுவனத்தை 1858ஆம் ஆண்டு மே 20ஆம் தேதி ஆரம்பித்து வைத்தார்.[16] இந்நிறுவனத்தில் மர்டாக் முகவராக நியமிக்கப்பட்டார். அதன் பிறகு தன்னுடைய கிறித்தவம் தொடர்பான நிறுவனங்களை திருநெல்வேலி, கல்கத்தா ஆகிய இடங்களில் நிறுவ வேண்டி அனுமதியோடு கூட சுற்றுப்பயணம் தொடங்கினார்.

'ஜான் மர்டாக்' தன்னுடைய பணியின் காரணமாக லண்டன் சென்றார். பின் அதனை முடித்துக்கொண்டு 1859 ஜூலை 15 ஆம் நாள் மீண்டும் இந்தியா வந்தார். தான் நிறுவிய அமைப்பின் செயற்குழுவில் கலந்துகொண்டு சில திட்டங்களை வகுத்தார். அதன்படி "TRAINING INSTITUTION" என்ற அமைப்பை இந்தியா முழுவதும் நிறுவினார். அதனையே நாளடைவில் கிறித்தவ இலக்கியச் சங்கம் (CHRISTIAN LITERATURE SOCIETY) என்று பெயர் மாற்றம் செய்தார்.

மேலும் இந்நிறுவனங்கள் வாயிலாக பள்ளிப் பிள்ளைகளுக்காக அநேக உதவிகளைச் செய்தனர். அதில் நூல்கள், எழுதுகோல்கள் என்பவைகளும் அடங்கும். இந்தியாவில் பள்ளிகளை உயர்த்துவதற்காகவும் இந்திய

ஆசிரியர்களும், பிள்ளைகளுக்கு அவர்கள் அளிக்கும் பாடக் கருத்துக்களும் தரமாக இருப்பதற்கான பயிற்சி அளிப்பதற்காகவும், கிறித்தவ இலக்கியம் தொடர்பான நூல்களையும், பள்ளிப் பிள்ளைகளுக்கான புத்தகங்களையும் வெளியிடுவதற்காகவும் கிறித்தவ இலக்கியச் சங்கம் என்ற அமைப்பு தோற்றுவிக்கப்பட்டது.

இந்நிறுவனத்தில் முதல் 10 ஆண்டுகளில் 250 புத்தகங்களையும், உலகின் 14 மொழிகளில் எழுதி 3 மில்லியன் பிரதிகளை வெளியிட்டுள்ளனர். இவர் சிறிது கூட ஒய்வு என்று அமராமல் இந்தியா முழுவதும் பயணம் செய்துகொண்டே இருந்தார். நலிவடைந்த பின்தங்கிய இடங்களிலெல்லாம் கிறித்தவ நிறுவனங்களை நிறுவினார். கிறித்தவ இலக்கியத்தை மக்கள் படித்துத் தெரிந்துகொள்ளவும், கிறித்தவ மதத்தைப் பரப்பவும் வேண்டும் என்பதே இவரின் முக்கியக் குறிக்கோளாக இருந்தது.

''ஜான் மர்டாக்'' அமெரிக்கா, ஐரோப்பா, சீனா போன்ற நாடுகளுக்கும் பயணம் செய்து அங்கேயும் கிறித்தவ மதம் தொடர்பான பணிகளைச் செய்து வந்தார். இப்படி இவர் மேற்கொள்ளும் பயண அனுபவங்களையும், அங்கே சந்தித்துப் பேசியவர்களையும் பற்றித் தன் குறிப்பேட்டில் குறித்து வைப்பது இவருடைய வழக்கமாகும். இப்படிச் சாதாரணமாக எழுதிய குறிப்புகளே பிற்காலத்தில் சரித்திரம் ஆகும் என்று நினைத்திருக்க மாட்டார். இவருடைய பயணம் கல்வி தொடர்புடைய பயணமாகக் காணப்பட்டது. மேலும் ஹாலந்து, ரஷியா, சுவிட்சர்லாந்து, பிரான்சு போன்ற நாட்டின் அனுபவங்களை எல்லாம் புத்தகமாக எழுதி வெளியிட்டார். அது பெரும் மதிப்பையும், வரவேற்பையும் பெற்றது.

இந்தியாவில் 1706ஆம் ஆண்டில் டானிஷ்மிஷன் என்ற அமைப்பு நிறுவப்பட்டது. அந்த நாள் முதல் இதுவரை எவ்வளவு கைப்பிரதிகள், நூல்கள்

வெளியிடப்பட்டன, அது கிறித்தவத்திற்குப் போதுமானதாக இருந்ததா? என்பது பற்றி 1867-இல் ஒரு பட்டியல் ஒன்றை தயாரித்தார்.[17] இது அவருடைய பணியின் செம்மையையும், பொறுப்பையும் காட்டுகிறது.

1868ஆம் ஆண்டு தன் அருமைத்தாயார் இறந்த செய்தி கேட்டு மனம் வருந்தினார். கடைசிக் காலங்களில் தன் அம்மாவுடன் செலவிட முடியாத நிலையை எண்ணி கவலைப்பட்டார். இருந்தாலும் தன்பணியை தொடர்ந்து செய்து வந்தார். 1871இல் இவர் அதிக பயணத்தை மேற்கொண்டமையால் ''காலரா'' நோயால் மிகவும் வேதனைப்பட்டார்.

இச்சூழலில் சிறிது உடல்நிலை தேறிய உடனே பழையபடி பள்ளிகளுக்குச் சென்று பிள்ளைகளின் பாடநூல்கள், அதனுடைய தரம், இவற்றைப் பற்றிய ஆய்வை மேற்கொண்டார். அதில் காணப்பட்ட குறைகளைத் திருத்தம் செய்தார், நிறைகளைப் பாராட்டினார். சில புத்தகங்களைப் பற்றிய திறனாய்வுக் கருத்துக்களையும் வெளியிட்டார்.

மிகவும் பயனுடையதாக இருந்த பயணம் 1882ஆம் ஆண்டு சீனாவுக்கும், ஜப்பானுக்கும் இவர் சுற்றுப்பயணம் செய்ததே ஆகும்.

அங்குள்ள கிறித்தவ இலக்கியங்களை எல்லாம் சேகரித்தார். பிறகு அதனோடு இந்திய கிறித்தவ இலக்கியங்களையும் சேகரித்து இரண்டையும் ஒன்றாகச் சேர்த்து ஒப்பாய்வு செய்தார் என்பது குறிப்பிடத்தக்க ஒன்று. இதற்காக AMERICAN TRACK SOCIETYயில் பல்வேறு தரவுகளையும் சேகரித்தார்.

இதற்கிடையில் சீனாவில் இருந்த கிறித்தவ அமைப்பின் பொறுப்பாளராக இருந்த டாக்டர். வில்லியம்சன் என்பவர் இறந்துவிட்டார். எனவே அங்குள்ள கிறித்தவ அமைப்பு மூடப்பட்டது. அதனைத் திறமையாக எடுத்து செயல்படுத்த

ஆட்கள் அமையவில்லை. அதனைப்பற்றிய செய்தியை அறிந்து அங்கு சென்று அமைப்பைத் தொடர்ந்து நடத்த ஆவன செய்தார்.

1891இல் ஸ்காட்லாந்தில் "Christian Literature Society for China" என்ற நிறுவனத்தை நிறுவி அதன்மூலம் பணிகளை விரைவாகச் செய்து வந்தார். திடீரென 1895ஆம் ஆண்டு மே 22ஆம் நாள் மர்டாக்கின் ஒரே சகோதரி 'மார்கிரேட்' இறந்துவிடுகிறாள். ஒவ்வொரு பிரிவையும் தன்னுடைய இறைப் பணிக்காக தாங்கிக் கொண்டு தொடர்ந்து தன்னுடைய பயணத்தை மேற்கொண்டார். அப்போது வேதாகமச் சங்கத்தின் ஒவ்வொரு நாட்டுச் செயலாளர்களையும் தொடர்பு கொண்டு விவிலியப் பணியைக் குறித்து விசாரித்து வந்தார்.

மேலும் மாநிலங்களின் ஒவ்வொரு பள்ளிகளிலும் புதிய ஏற்பாட்டை (NEW TESTAMENT) பிள்ளைகளுக்கு வழங்கினார். இந்தப் பணியை "MADRAS AUXILIARY BIBLE SOCIETY"யின் உதவியுடன் அருள்திரு. சார்லஸ் சாக்சன் துணையுடன் 1864ஆம் ஆண்டு ஜனவரி 26இல் நடத்தினார்.

ஜான் மர்டாக்கின் விவிலியப் பணிக்காகவும், அவருடைய பொதுச் சேவைக்காகவும், அவரைப் பாராட்டி 1889ஆம் ஆண்டு "LIFE GOVERNER OF SOCIETY" என்ற அமைப்பு கௌரவித்தது. கிளாஸ்கோ பல்கலைக்கழகம் LL.D. என்ற பெரிய பட்டத்தை வழங்கியது.

கிறித்தவ அமைப்பின் சார்பாக இந்தியா முழுவதிலும் இருந்து அழைக்கப்படும் பல்வேறு நிறுவனங்களின் நிர்வாகிகளுடனும் சில வெளிநாட்டினருடனும் "UNITED CONFERENCE IN INDIAN CHRISTIANS" என்ற பெயரில் கூட்டம் நடக்கும். இதில் திருநெல்வேலி, பஞ்சாப், வங்காளம், மும்பாய் போன்ற இடங்களில் உள்ள அமைப்புகளும் கலந்துகொண்டன. இதில் ஐரோப்பியர்களும் சேர்ந்து விவாதம் செய்தனர்.

1894ஆம் ஆண்டு நடந்த மாநாட்டுக் கூட்டத்தில் இந்தியா - இலங்கை மற்றும் பிற நாடுகளுக்காகத் தன் வாழ்வையே அர்ப்பணித்துப் பணி செய்த ஜான் மர்டாக் அவர்களுக்கு 50ஆம் ஆண்டு பொன்விழா கொண்டாடிச் சிறப்பிக்கப்பட்டது.[18] தன் ஆயுளை இந்தியா - இலங்கை ஆகிய இரு நாடுகளின் வளர்ச்சிக்காகவே செலவிட்டார். ஊழியங்கள் மற்றும் அதன் தொடர்பான புத்தகங்களையும் எழுதி வெளியிட்டுள்ளார்.

அவருக்கு மிகவும் பிடித்தமான செயல்களில் ஒன்று சென்னைக் கடற்கரையில் தனிமையாக நடந்துகொண்டு அங்குள்ள நண்டுகளையும், கடல்வாழ் உயிரினங்களையும் கண்டு இரசிப்பதாகும். அதன் மூலமாகத் தன்னுடைய கற்பனை வளத்தைப் பெருக்கிக் கொண்டு அதன் மூலம் செய்திகளைப் பக்குவமாகக் கையாண்டு எழுத்துப் பணி செய்தார். அப்படிச் சேகரித்து எழுதிய செய்திகளை "ESSAYS ON THE BIBLE" என்ற பெயரில் வெளியிட்டுள்ளார். இது இவருடைய அயராத உழைப்பைக் குறிக்கும் அடையாளச் சின்னமாகும்.

இலங்கையில் கிறித்தவ மதத்தையும் அதைச் சார்ந்த பிற பணிகளையும் செய்து வந்தமையால் அங்கு முக்கியமாக இருந்த புத்த மதங்களும், இந்து மதங்களும் இவர் பணிக்கு எதிராகக் கிளம்பின. இதனைச் சிறிதும் பொருட்படுத்தாமல் தன்னுடைய முயற்சியைக் கைவிடாமல் முழுமூச்சோடு செயல்பட்டார். அந்த எதிர்ப்பைத் தவிர்க்கும் வகையில் அதனைப்பற்றி இதழ்களிலும், நூல்களிலும் எழுதி வெளியிட்டார். புத்தகங்களும், பிள்ளைகளுக்கான நூல்களும் தேவைப்பட்டதால் பிரிட்டன் நிறுவன அமைப்புக்கு கடிதம் மூலம் தொடர்பு கொண்டு தேவையான நூல்களைக் கேட்டுப் பெற்றுக் கொண்டார்.

1859இல் இலண்டன் சென்று கிறித்தவ இலக்கியக் கூட்டம் (Christian Literary Meeting) நடத்தி அமைப்பினில் காணப்படும் குறை, நிறைகளைப் பற்றி ஆராய்ந்தார். இந்தச் சமயத்தில் அவருடைய தங்கை இறந்துபோனது அவருக்கு மிகுந்த வேதனை அளிக்கக் கூடியதாய் இருந்தது. இருப்பினும் தான் வந்த பணியில் உறுதியுடன் செயல்பட்டார்.

1896ஆம் ஆண்டில் ஜான் மர்டாக்கின் பதிப்புப் பணிக்காகவும், இந்தியாவில் அவர் செய்த சேவைக்காகவும் இந்திய அரசாங்கம் இவருக்கு வெள்ளிப் பதக்கம் பரிசளித்தது. அவர் எப்பொழுதும், எங்கேயும் எழுதுகிறவராகவே இருந்தார். தன் வாழ்நாள் முழுமையும் பயணத்திலேயே கழித்தமையால் அப்பயண அனுபவங்கள், சேகரித்த தகவல்கள் என்று எழுதி சேகரித்தார்.

1898 இக்கும் 1899 இக்கும் இடைப்பட்ட காலத்தில் 'இந்திய தேசியக் காங்கிரஸ்' என்ற அமைப்பானது வருடாந்திரக் கூட்டம் ஒன்றை ஒழுங்கு செய்திருந்தது. அதில் ஜான் மர்டாக் கலந்துகொண்டு சிறப்புரை வழங்கினார். பின்னர் 200 பக்க அளவிலான கைப்பிரதிகள் வைசிராய் லார்ட் கெர்சன் முன்னிலையில் அவரிடம் அளிக்கப்பட்டன. இவர் தன்னுடைய முதுமையையும் பொருட்படுத்தாமல் உழைத்தது சிறிதளவு தளர்வைக் கொடுத்தது. ஆகவே 84ஆம் வயதில் இவருடைய பணியை ஹென்றி குல்லிபோர்டு ("HENRY GULLIFORD") என்பவருக்கு நியமனம் செய்தனர்.

1900ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 12ஆம் தேதி வைசிராய் அவர்கள் சென்னை வர நேர்ந்தது. அப்போது ஜான் மர்டாக் அவர்களைப் பற்றிக் கேள்விப்பட்டு அவர் செய்த பணிகளையும், பரந்த மனப்பான்மையையும் கண்டு வியந்தவராய் அவரைப் பார்த்து உரையாடினார்.

அவரைத் தொடர்ந்து பல பெரிய பதவியிலிருந்த ஆட்களும் இவருடைய சேவைக்கு நன்றி கூறும் வகையில் இவரைச் சந்தித்தார்கள். அதில் சென்னைக் கவர்னர் லார்டு அம்ட்கில் (LORD AMPTHILL) சற்று நேரம் உரையாடியமையும் குறிப்பிடத்தக்கது.

1904 ஆம் ஆண்டு அரசாங்கம் இவருக்குத் தங்கப்பதக்கம் வழங்கிச் சிறப்பித்தது.[19] ஆனால் அதனைப் பெற்றுக்கொள்ள அவர் உயிருடன் இல்லை. அவர் சுகவீனமாய் இருந்தபோதே 1904ஆம் ஆண்டில் ஜூலை மாத இடையில் பெங்களூர் சென்றார். அங்கே மிகுந்த பலவீனமடைந்து எழுந்திருக்கவும், நடக்கவும் கூட முடியவில்லை. உடனே அவர் சென்னைக்குப் புறப்பட்டார். உடல்நிலை சரியில்லாதபோதும் பயணம் மேற்கொண்டது. இவருக்கு ஆபத்தாகிப் போனது. இவர் சென்னைக்கு வந்ததும் ஜூலை 15ஆம் தேதி இவரை மருத்துவமனையில் சேர்த்துத் தீவிரமான சிகிச்சை அளித்தனர்.

தான் இந்திய நாட்டுக்காக ஆற்றிய அனைத்துக் காரியங்களையும், சேவை நிறுவனங்களையும் இந்தியர்கள் நன்முறையில் போற்றிப் பேணிக்காத்து, பேணி வளர்த்து செம்மைப்படுத்த வேண்டும் என்பதே இவரின் கடைசி விருப்பமாகக் கூறப்பட்டது. இவர் தன்னுடைய இன்ப துன்பங்களைக் கடவுளுக்காகச் சகித்துக் கொண்டார். கடைசி வரையில் திருமணம் செய்துகொள்ளவில்லை. மிகவும் எளிமையோடே இருப்பார். அமைதியாகப் பேசுவார், செயல்படுவார். தன் மனதிலே எப்படிப்பட்ட எண்ணங்கள் தோன்றினாலும், அதை ஒருவரிடமும் பகிர்ந்து கொள்ள மாட்டார். சிறு பிள்ளைகள் என்றால் இவருக்குக் கொள்ளைப் பிரியம். அவர் பேசுவதைவிட எழுதுவதில்தான் மிகவும் ஆர்வமுடனும், முழுமூச்சாயும் இருந்தார்.

'ஜான் மர்டாக்கை' "LITERARY EVANGILIST OF INDIA" என்று அழைக்க மிகவும் பொருத்தமுடையவர் என்று பல சான்றோர்கள் கூறினர்.

ஜான் மர்டாக் கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் பொதுச் செயலாளராக இருக்கும்பொழுது கிறித்தவக்கம்பர் **எச்.ஏ.கிருஷ்ணபிள்ளை** தமிழ்ப் பதிப்பாசிரியராகப் பணியாற்றினார். அருள்திரு.சாமுவேல் பவுல் ஐயரிடம் ஜான் மர்டாக் நெருங்கிய தொடர்பு வைத்திருந்தார். ஜான்மர்டாக் தன் வாழ்நாள் முழுவதும் கிறித்தவ இலக்கியச் சங்கத்திற்காகப் பணியாற்றினார். தமது உணவுக்காக மட்டும் ஊதியத்தினைப் பெற்றுக் கொள்வார். தமக்குக் கிடைக்கும் வருமானத்தையெல்லாம் நூல் வெளியிடுவதற்காகச் செலவழித்தார். தமிழுக்காகப் பெரிதும் பணி செய்த அவர் கி.பி.*1904* ஆண்டு சென்னையில் அச்சுப்பிழைகளைத் திருத்திக் கொண்டிருக்கும்பொழுது இயற்கை எய்தினார். கிறித்தவ இலக்கியச் சங்கம் ஜான் மர்டாக்கின் வாழ்க்கை வரலாற்றினை ஆங்கிலத்தில் நூலாக வெளியிட்டுள்ளது.

சமய வேறுபாடின்றி அனைவருக்கும் நலன் பயக்கம் வகையில் பாடநூல்களையும் அறநெறி சார்ந்த நூல்களையும் கிறித்தவ நூல்களோடு ஆங்கிலத்திலும் தென்னக மொழிகளிலும் அவர் வெளியிடலானார். கிறித்தவத் தமிழக் கவிஞர்களையும் எழுத்தாளர்களையும் ஊக்குவித்ததோடு கிறித்தவ இதழ்களையும் தோற்றுவித்த பெருமை அவருக்கு உண்டு.[20]

**கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் ஆட்சிக்குழுத் தலைவர்கள்**

கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் ஆட்சிக்குழுத் தலைவர்களின் பெயர்கள் பணிபுரிந்த ஆண்டுவாரியாகக் கீழே தரப்பட்டுள்ளன.

| | | | |
|---|---|---|---|
| 1. | ஏ.எம். ஹலிஸ் | - | 1953-1954 |
| 2. | குருவில்லா ஜேக்கப் | - | 1954-1964 |
| 3. | ஜான் தேவன் | - | 1964-1970 |
| 4. | ஆர்.சி. | - | 1970-1971 |
| 5. | ஆர்.டி. யேசுதாசன் | - | 1972-1973 |

| | | | |
|---|---|---|---|
| 6. | ஏ.கே. தம்பி | - | 1974-1981 |
| 7. | சந்திரன் டி.எஸ். தேவநேசன் | - | 1981-1983 |
| 8. | எம்.ஏபல் | - | 1983-1984 |
| 9. | வி.எச். தேவதாஸ் | - | 1985-1986 |
| 10. | விக்டர் பிரேம்மசாகர் | - | 1986-1992 |
| 11. | வி.பி. தண்டின் | - | 1992 |

**பதிப்பாசிரியர்**

பதிப்பகங்களின் அடிப்படையாக இருப்பவர்கள் பதிப்பாசிரியர்களாவர். நூல்களை அச்சிட்டுவிட்டால் போதாது. அச்சிற்குப் போகும் முன் அவற்றில் காணப்படும் பிழைகளை நீக்குதல், ஏடுகளை ஆராய்ந்து அறிதல், பாடத்திருத்தம் செய்தல், பாட வேறுபாடுகளைக் களைதல் முதலிய பல பணிகளையும் செய்து பதிப்பித்தால்தான் வெளியிடப்படும் நூல் சிறப்புறும், பதிப்பகங்களும் புகழ்பெறும். இத்தகு முக்கியமான பணிகளைச் செய்பவரே பதிப்பாசிரியர்.

உண்மையான நூலை எழுதுவது ஒருவகையான ஆற்றலேயாயினும், அதன் பிரதியை அச்சிற்குத் தருகின்றவரையில் ஒழுங்குபடுத்துவது வேறு ஒரு வகையான ஆற்றலாகும். தம்முடைய நூல் அச்சில் எப்படி வந்தால் நன்றாக இருக்கும் என்று ஆசிரியர் நினைக்கின்றாரோ அப்படி அதனைக் கொணர்வதுதான் பதிப்பாசிரியரின் பணி[21] ஆகும்.

**கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் தமிழ்ப்பதிப்பாசிரியர்கள்**

கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் தமிழ்ப்பதிப்பாசிரியர்கள் அவர்கள் பணிபுரிந்த ஆண்டு வாரியாகக் கீழே தரப்பட்டுள்ளன.

| | | | |
|---|---|---|---|
| 1. | எச்.ஏ. கிருஷ்ணப்பிள்ளை | - | 1892-1900 |
| 2. | ஏ.சி. கிளேட்டன் | - | 1923-1934 |

| | | | |
|---|---|---|---|
| 3. | தானியேல் | - | 1953-1954 |
| 4. | கோயில்பிச்சை | - | 1954-1968 |
| 5. | ராஜதுரை | - | 1968-1970 |
| 6. | பாக்கியமுத்து | - | 1971-1979 |
| 7. | ராஜ்குமார் | - | 1980-1985 |
| 8. | சத்தியசாட்சி | - | 1986-1987 |
| 9. | ஸ்வீட்லின் பிரபாகரன் | - | 1987- |

1900 முதல் 1922 ; 1945 முதல் 1952 எனும் ஆண்டுகளுக்கிடையில் தமிழ்ப் பதிப்பாசிரியர்களாகப் பணிபுரிந்தவர்கள் பற்றிய குறிப்புகள் கிடைக்கவில்லை. இக்காலகட்டங்களில் குழுவாக இருந்து ஆசிரியர்கள் செயல்பட்டிருக்கலாம்.[22]

**முதல் தமிழ்ப் பதிப்பாசிரியர்**

கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் முதல் தமிழ்ப் பதிப்பாசிரியர் கிறித்தவக் கம்பர் என்று அழைக்கப்படும் எச்.ஏ. கிருஷ்ணப்பிள்ளை. கிறித்தவ இலக்கியச் சங்கத்தை நிறுவிய ஜான் மர்டாக்கால் எச்.ஏ.கிருஷ்ணப்பிள்ளை கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் முதல் தமிழ்ப் பதிப்பாசிரியரானார். கிருஷ்ணப்பிள்ளை கி.பி.1892 முதல் 1900 வரை தமிழ்ப் பதிப்பாசிரியராகப் பணியாற்றினார்.

எச்.ஏ. கிருஷ்ணப்பிள்ளை திருநெல்வேலி மாவட்டம் ரெட்டியாபட்டி என்னும் ஊரில் 1827 ஏப்ரல் மாதம் 23ஆம் நாள் பிறந்தார். தந்தையார் சங்கரநாராயண பிள்ளை, தாயார் தெய்வநாயகி அம்மாள். வைணவ சமயத்தில் இருந்து கிறித்தவச் சமயத்தைத் தழுவினார். பின்னர் அவர் ஹென்றி ஆல்பர்ட் என அழைக்கப்பட்டார். திருநெல்வேலியிலும் சாயர்புரத்திலும் கல்லூரிப் பேராசிரியராகப் பணிபுரிந்தார். தமிழுக்கும், கிறித்தவத்திற்கும் பெரும் தொண்டு புரிந்துள்ளார்.

எச்.ஏ. கிருஷ்ணபிள்ளை இயற்றிய நூல்கள் இரட்சணிய யாத்திரிகம், இரட்சணிய சமயநிர்ணயம், இரட்சணிய மனோகரம், இரட்சணிய குறள் என்பன. இவற்றில் இரட்சணிய குறள் தவிர்த்து, பிற மூன்று நூல்களையும் கிறித்தவ இலக்கியச் சங்கம் வெளியிட்டுள்ளது. எச்.ஏ. கிருஷ்ணபிள்ளை 1900ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் மூன்றாம் நாளில் இவ்வுலக வாழ்வை நீத்தார்.

**அச்சு, நூற்பதிப்பு, வெளியீடு, விற்பனை**

கிறித்தவ இலக்கியச் சங்கம் அச்சு, நூற்பதிப்பு, வெளியீடு, விற்பனை எனும் நான்கு முக்கியமான நிலைகளின் கீழ் தனது மொழி மற்றும் இலக்கியப் பணியைச் செய்து வருகிறது.

**கிறித்தவ இலக்கியச் சங்க அச்சகம்**

கிறித்தவ இலக்கியச் சங்கம் செய்து வரும் தமிழ்ப்பணிகளுள் அச்சுப்பணி ஒன்று. நூற்பதிப்புப் பணி சிறப்பாய் நடைபெற அச்சுப்பணி அடிப்படையாகிறது. எழுத்துக்கோப்போரே பதிப்பு வேலையின் பெரும்பகுதியையும் செய்கின்றவராவர். இவ்வெழுத்துக் கோப்போரும் நுண்ணறிவு படைத்தவர்களாக இருத்தல் வேண்டும். பதிப்புத்தாளில் எழுத்துப் பிழைகள் இன்றி ஒழுங்காக இருப்பதற்கும் இவர்களே காரணர்கள் ஆவார்கள்.[23] எனவே பதிப்புப் பணிக்கு அச்சுப்பணி எத்துணை இன்றியமையாததாகிறது என்பதை அறிந்துகொள்ள முடிகிறது. கிறித்தவ இலக்கியச் சங்கமும் தனது ஆரம்ப காலத்திலிருந்தே இப்பணியைச் சிறப்புடன் நடத்தி வருகின்றது. இச்சங்கம் தனக்குச் சொந்தமாகத் தற்போது இரண்டு அச்சகங்களைக் கொண்டுள்ளது. இவற்றின் வாயிலாகவே அச்சுப்பணி மேற்கொள்ளப்படுகிறது.

அச்சுத்துறையின் மூலம் கிறித்தவ இலக்கியச் சங்கம் செய்து வரும் தமிழ்ப்பணியைக் குறிப்பிடும்பொழுது டயோசிசன் அச்சகத்தைப்பற்றி

குறிப்பிடுதல் அவசியம். ஏனெனில் கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் அதிகமான நூல்கள் இங்குத்தான் அச்சிடப்படுகின்றன.

கி.பி.1930 வரையிலும் கிறித்தவ இலக்கியச் சங்கத்திற்கு உடைமையான சிறு அச்சகம் ஒன்று சென்னை பூங்கா நகர் பகுதியில் அமைந்திருந்தது. 1930இல் இச்சங்கம் டயோசிசன் அச்சகத்தை மேற்கொண்ட பிறகு இவ்விரு அச்சகங்களும் ஒன்றாய் இணைக்கப்பட்டு வேப்பேரியில் இருந்து செயல்பட்டு வருகிறது.[24]

கி.பி.1781இல் சர். அயர்கூட் என்னும் ஆங்கிலேயரால் பாண்டிச்சேரி பிரெஞ்சுக்காரர்களிடம் இருந்து கைப்பற்றப்பட்டபோது அங்கிருந்த ஆளுநர் மாளிகையில் கண்டுபிடிக்கப்பட்ட அச்சு இயந்திரங்களும் அச்சு எழுத்துக்களும் சென்னைக்குக் கொண்டுவரப்பட்டன. தங்களிடத்தில் சரியான அச்சடிப்பாளர் இல்லாமற் போனதால் ஆங்கிலேயர்கள் அதனை வேப்பேரியில் வசித்துவந்த தமிழ்ப்புலமை மிக்க மேனாட்டுக்காரரான பெப்ரிசியஸ் என்பவரிடம் தங்களின் எதிர்கால தேவை கருதி ஏதேனும் அச்சிட வேண்டி வந்தால் அதை அச்சிட்டுத் தரவேண்டும் எனும் நிபந்தனையுடன் ஒப்படைத்தனர் என்று கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் முன்னாள் பொதுச் செயலாளர் டபிள்யூ.எச். வாரன் குறிப்பிடுகிறார்.[25]

பெப்ரிசியசுக்குப்பின் அச்சகம் இலண்டன் எஸ்.பி.சி.கே.யின் பொறுப்பில் இருந்தது. பின்னர் சென்னை ஆதீனத்தின்கீழ் வந்தது. இறுதியாக 1930ஆம் ஆண்டு இதைக் கிறித்தவ இலக்கியச் சங்கம் விலைக்கு வாங்கியது. இந்த அச்சகமே வேப்பேரி அச்சகம் என்றும் எஸ்.பி.சி.கே. அச்சகம் என்றும் டயோசிசன் அச்சகம் என்றும் பல பெயர்களில் வழங்கப்பெற்று வந்தது.[26] பெப்ரிசியசுக்குப்பின் இதில் பணிபுரிந்தவர்களுள் அண்டும் அவரது குடிவழியினரும் ஆவர்.

தற்போது இந்நிறுவனத்தில் சுமார் 275 ஊழியர்கள் பணிபுரிகிறார்கள். பெப்ரிசியஸ் பணிபுரிந்தபோது தமிழ் அகராதி, இலக்கண நூல் முதலிய நூல்களை அச்சிட்டு வெளியிட்டார். விவிலியத்தின் புதிய ஏற்பாடு, தமிழ்க்கிறித்தவ

பாமாலைகள் முதலிய பக்தி இலக்கிய வகைகளை அச்சிட்டு வெளியிட்டார். வின்ஸ்லோவின் தமிழ் - ஆங்கில அகராதியும் இங்கேதான் அச்சிடப்பட்டது. முற்காலக் கிறித்தவ வெளியீடுகளைக் காண்கிறபோது அவை அக்காலத்தில் நிலவிய தமிழ் வரிவடிவ முறைக்கு நல்ல எடுத்துக்காட்டுகளாக விளங்குகின்றன. தமிழ் எண்களும், தமிழ் மாதங்களின் பெயர்களும் கிறித்தவ நூல்களில் தொடர்ந்து கையாளப்பட்டுள்ளன.[27] இதன் வாயிலாக அந்நாட்களில் அச்சுப்பணியின் மூலம் கிறித்தவர்கள் செய்த தமிழ்த் தொண்டினை அறிந்துகொள்ள முடிகிறது. கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் அச்சுப்பணியும் இதில் அடங்கும்.

இந்தியாவிலேயே இரண்டாவது பெரிய, மிகப்பழமையான அச்சகம் கிறித்தவ இலக்கியச் சங்க அச்சகமாகும். இங்குதான் கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் பெரும்பாலான நூல்கள் அச்சாகின்றன. தமிழ் மொழி மட்டுமின்றி, பல மொழிகளிலும் இங்கு நூல்கள் அச்சடிக்கப்படுகின்றன. தமிழ்நாடு பாடநூல் நிறுவனம், வேதாகமச் சங்கம், மற்றும் பல நூல் வெளியீட்டாளர்கள் இங்குத் தங்கள் நூல்களை அச்சிடுகின்றனர்.[28] இவ்வச்சகம் மட்டுமின்றி பெங்களூரில் உள்ள சி.எல்.எஸ். அச்சகமும் இச்சங்கத்திற்குச் சொந்தமானது.

மேற்கண்ட அச்சகங்களின் மூலம் கிறித்தவ இலக்கியச் சங்கம் நூல்களைக் குறிப்பாக தமிழ் நூல்களை அச்சிட்டு வருகிறது. சமய நூல்களே அன்றி பொதுவான நூல்களும், கிறித்தவத் தமிழ் இலக்கியங்களும், கவிதை நூல்களும், நாவல்களும் சிறுகதைகளும் இவற்றில் செம்மையுற அச்சிடப்படுகின்றன. பிற வெளியீட்டு நிறுவனங்களின் தமிழ் நூல்களையும் இவ் அச்சகம் அச்சிட்டு வருவது கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் தமிழ்ப்பணிக்குச் சான்றாகும். இவ்வாறு கிறித்தவ இலக்கியச் சங்கம் அச்சுப்பணியின் மூலம் மொழிக்கும் தமிழிலக்கியத்திற்கும் தொண்டு செய்து வருகிறது.

**அச்சகக் கண்காணிப்பாளர்கள்**

கிறித்தவ இலக்கியச் சங்கம் தனக்குச் சொந்தமாக தற்போது இரண்டு அச்சகங்களைக் கொண்டுள்ளது. அதன் கண்காணிப்பாளர் விவரம் பின்வருமாறு:

- வேப்பேரியில் உள்ள அச்சகத்தின் கண்காணிப்பாளராக தாமஸ் ஸ்டீபன் செயல்பட்டு வருகிறார்.
- பெங்களூரில் உள்ள சி.எல்.எஸ். அச்சகத்தின் நிர்வாகக் கண்காணிப்பாளராக மார்டின் செயல்பட்டு வருகிறார்.

**கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் நூற்பதிப்புப்பணி**

செய்தித்தாள்களையும் நூல்களையும் அச்சுப்பொறி கொண்டு உருவாக்கி வெளியிடும் இடங்களைப் பதிப்பகம் எனலாம். அச்சுக் கூடங்கள் இல்லாமற் போனாலும் நூல்களை அச்சுக்கூடத்திற்குக் கொண்டுபோய் பதிப்பித்து அவற்றை விற்பனை செய்துவரும் இடங்களும் பதிப்பகங்கள் எனப்படுகின்றன. இவற்றை நூல் வெளியீட்டு நிலையங்கள் என்று கூறுவதே பொருத்தமானதாகும். கிறித்தவ இலக்கியச் சங்கம் தனக்கெனச் சொந்தமான அச்சகங்களையும், விற்பனை நிலையங்களையும் கொண்டு இயங்கி வரும் நிறுவனம் ஆகும்.

கிறித்தவ இலக்கியச் சங்கம் ஒரு குழுமமாகச் செயல்பட்டு வருகிறது. நூற்பதிப்புப் பணியும் வெளியீடும் சிறந்த முறையில் நடத்தப்படுகின்றன. இச்சங்கம் பல மொழிகளிலும் நூல்களை வெளியிட்டு வந்தாலும் தமிழுக்கெனத் தனிப் பதிப்புத்துறையும், பதிப்பாசிரியரும், பதிப்புக்குத் துணை செய்யும் குழுவினரும் தமிழ்ப்பதிப்புப் பணியைச் செய்து வருகின்றனர். இத்துடன் பல்வேறு உள்நாட்டு, வெளிநாட்டு வெளியீட்டு நிறுவனங்களும் அச்சகங்களும் தொடர்பு கொண்டுள்ளன.

**வெளியீடு**

கிறித்தவ இலக்கியச் சங்கம் செய்து வரும் பணிகளில் சிறப்பான பணி நூல் வெளியீடு. ஒரு புத்தகச்சாலை திறக்கப்படும்போது பத்துச் சிறைகளின் கதவுகள் அடைக்கப்படுகின்றன.[29] நூலகப் பிரிவுகள் திறக்கப்படுவதன் பயன்பாட்டினை வெளிப்படுத்தும் பட்டயமாக விவேகானந்தர் வாக்கு திகழ்கின்றது எனலாம்.

நூல்கள் மக்களுக்கு விழிப்புணர்ச்சியையும், அறிவையும் ஊட்டவல்லவை. மக்கட் சமுதாயத்திற்கென்றே படைக்கப்பட்டவை. புத்தகம் என்பது, மக்களுடைய மக்களால் மக்களுக்காக இருக்க வேண்டும்[30] எனச் சொல்லப்பெறும் கருத்தின் ஆழத்தை உணர்ந்து கொள்ள வேண்டும்.

நூற்பதிப்புக் கழகங்கள் நாட்டிலே எவ்வளவு மிகுதியாகத் தோன்றுகின்றனவோ அவ்வளவும் மகிழ்வுடன் வரவேற்கக்கூடியதேதான். ஏனெனில் இக்கழகங்களால் நூல்கள் பல வெளியிடப்படுவது கல்வி வளர்ச்சிக்குப் பெரிதும் துணையாகும். ஒவ்வொரு கழகமும் தகுந்த நூல்களை வெளியிட்டால் தான் சீரும் சிறப்பும் அடையும்.[31] என்பதற்கேற்ப சிறப்பான நூல் வெளியீட்டுப் பணியை கிறித்தவ இலக்கியச் சங்கம் செய்து வருகிறது.

தகுந்த நூல்களை தகுந்த முறையில் பேரூதியம் பெறவேண்டும் என்னும் பேராசையின்றி வெளியிடுவது தான் வெளியிடுவோர் வாங்குவோர் ஆகிய இருசாராருக்கும் பயன்படக்கூடிய வழி ஆகும் என்பதைக் கருத்தில் கொண்டு கிறித்தவ இலக்கியச் சங்கம், தான் தொடங்கப்பட்ட நாளில் இருந்தே இலாப நோக்கமற்ற நிறுவனமாகத் தமிழ்ப்பணியைச் செய்து வருகிறது.

**வெளியீட்டுத்துறை**

கிறித்தவ இலக்கியச் சங்கம் தமிழ், ஆங்கிலம், மலையாளம், தெலுங்கு, கன்னடம், இந்தி ஆகிய மொழி நூல்களை வெளியிட்டுப் பக்திக்கும் இலக்கியத்திற்கும் மொழி வளர்ச்சிக்கும் சிறப்பான பணியைச் செய்து வருகின்றது.

**தமிழ்**

சமயநூல்கள், நாவல்கள், சிறுகதைகள், கட்டுரைகள், பொதுநூல்கள், பள்ளிப்பாட நூல்கள், சிறுவர் நூல்கள் முதலிய பலவகை நூல்களை வெளியிடுகிறது. ஆண்டுக்கு மறுபதிப்புக்கள் உட்பட 15 முதல் 20 நூல்கள் வெளி வருகின்றன. எஸ்.பி.சி.கே. முதலிய வேறு சபைகள் இவற்றுடன் இணைந்தும் நூல்களை வெளியிடுகின்றது.

**ஆங்கிலம்**

சமய நூல்கள், தியான நூல்கள், நாவல்கள், பொது நூல்கள், பாட நூல்கள், சிறுவர் நூல்கள் இவற்றுடன் பல இறையியல் நூல்களும் ஆங்கில மொழியில் வெளியிடப்படுகின்றன. சொந்த வெளியீடுகளைத் தவிர, பெங்களூர் சி.ஐ.எஸ்., ஆர்.எஸ்., எஸ்.பி.சி.கே. செராம்பூர் சென்ட், தேசிய கிறிஸ்தவ கவுன்சில், திருச்சபைகள் இவற்றுடன் இணைந்தும் நூல்களை வெளியிடுகின்றன.

**மலையாளம்**

கிறித்தவ இலக்கியக்குழு 1952ஆம் ஆண்டிலிருந்து மலையாள நூல்களை வெளியிட்டு வருகிறது. 1952ஆம் ஆண்டு கிறித்தவ இலக்கியக்குழு கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் கிளை அங்கமாகியது, மலையாளப் பதிப்புத்துறையின் செயலகம் திருவல்லாவில் உள்ளது. கேரளாவிலுள்ள சிரியன் கிறித்தவர்களுக்கு மிகவும் முக்கியமான மையமாக இது விளங்குகிறது. ஆண்டொன்றுக்குச் ஏறத்தாழ

20 சமயச்சார்புடைய நூல்கள் வெளியிடப்படுகின்றன. ஓய்வு நாட்பள்ளி மாணவர்களுக்கான நூல்களும் இதில் அடங்கும்.

**தெலுங்கு**

1970ஆம் ஆண்டு டிசம்பரிலிருந்தே தெலுங்கு பதிப்புத்துறை ஐதராபாத்தில் செயல்பட்டு வருகிறது. ஆந்திரா கிறித்தவக் கவுன்சிலுடன் இணைந்தும் தனியாகவும் நற்செய்தி, நாடகம், சிறுவர் பாடல், நாவல் ஆகியவற்றை வெளியிட்டு வருகிறது.

தமிழ், ஆங்கிலம், மலையாளம், தெலுங்கு ஆகிய மொழிகளில் மட்டுமின்றி கன்னடம், இந்தி மொழிகளிலும் ஒரு சில நூல்களை வெளியிட்டு வருகிறது.

**நூல் விற்பனை**

கிறித்தவ இலக்கியச் சங்கம் செய்துவரும் தமிழ்ப்பணிகளில் நூல் விற்பனையும் ஒன்று. பதினாறாம் நூற்றாண்டில் பெரும்பாலும் அச்சகத்தார் பலர் வெளியிடுவோராகவும் இருந்தனர். ஆயின் எல்லா வெளியிடுவோரும் அச்சகம் உடையவராய் இருந்ததில்லை. தாம் வெளியிட விரும்புகின்றவற்றை அச்சகத்தாரிடம் தந்து அச்சிட்டு வாங்கி விற்பனையாளர் வாயிலாக மக்களுக்கு வழங்கினர். இங்ஙனமே பத்தொன்பதாம் நூற்றாண்டு முதலாகத்தான் வெளியிடுவோர் தாமே புத்தகத்தை விற்காமல் விற்பனையாளர் மூலம் விற்கும் நிலை பரவலாயிற்று.[32] இதன்மூலம் 16ஆம் நூற்றாண்டிலும், 19ஆம் நூற்றாண்டிலும் நூல் விற்பனை எவ்வாறு இருந்தது என்பதை அறிய முடிகிறது.

அச்சுக்கூடங்களில் அச்சாகும் நூல்கள் அக்காலத்தில் பெருமளவில் விற்பனை செய்யப்படவில்லை. மேலும் இப்பணியைச் செய்யப் போதுமான பொருளாதார மற்றும் அரசியல் வசதிகள் அப்போது இல்லை என்று தெரிகிறது. இந்தியாவைப் பொருத்தமட்டில் முற்காலங்களில் படிப்போர் தொகை குறைவாக

இருந்த காரணத்தினாலும் குறைவான எண்ணிக்கையில் நூல்கள் அச்சிடப்பட்டு வந்ததினாலும், நூல்களை வெளியிட்டு விற்பனை செய்வதற்கு என்று தனியே பதிப்பகங்களோ, விற்பனை நிலையங்களோ ஏற்படவில்லை. அடுத்து இப்பணியை அச்சகங்களே பெரும்பாலும் செய்து வந்தன. பின்னர் சென்னைக் கல்விச்சங்கமும் (1812) கிறித்தவத்தாய்மொழிக் கல்விச்சங்கமும் (1858) கிறித்தவ இலக்கியச் சங்கமும் (1891) சென்னைப் பாடப் புத்தகச் சங்கமும் (1856) புத்தக விற்பனைத்துறையில் முன்னோடிகளாக இருந்துள்ளன.[33] இவ்வாறு புத்தக விற்பனையில் முன்னோடியாகத் திகழ்ந்த கிறித்தவ இலக்கியச் சங்கம் தற்போது பல நூல் விற்பனை நிலையங்களைக் கொண்டு விற்பனைப் பணியைச் செய்து வருகிறது.

**நூல் விற்பனை நிலையங்கள்**

தமிழ்நாட்டில் சென்னை, மதுரை, கோவை, கொடைக்கானல் ஆகிய இடங்களிலும், கர்நாடக மாநிலத்தில் பெங்களூரிலும் மைசூரிலும், கேரளத்தில் கொச்சி, திருவனந்தபுரம் ஆகிய நகரங்களிலும், ஆந்திராவில் ஐதராபாத்திலும் இச்சங்கத்திற்குச் சொந்தமான நூல் விற்பனை நிலையங்கள் உள்ளன. சமயச்சார்பான நூல்கள் மட்டுமின்றி, மொழி இலக்கியம் மற்றும் பொது நூல்களும் இந்நிலையங்களில் பெருமளவில் இடம்பெற்றுள்ளன. சென்னை, மதுரை முதலிய நகரங்களில் அமைந்துள்ள விற்பனை நிலையங்கள் மக்களுக்குப் பெரிதும் தொண்டு செய்து வருகின்றன.

கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் தலைமைச் செயலகத்திற்கு அருகில் அமைந்துள்ள சென்னை நூல் விற்பனை நிலையத்தில் தமிழ் தொடர்பான நூல்கள் உள்ளன. இந்தியாவிலேயே சிறந்த புத்தக நிலையம் இது என்று பிரிட்டிஷ் நூல்கள் முன்னேற்றக் குழு 1979இல் பாராட்டியுள்ளது.[34] இங்கே அஞ்சல் மூலம் நூல்கள்

வேண்டுவோருக்கு அனுப்பி வைக்கும் பிரிவும் செயல்படுகிறது. பள்ளிப் பிள்ளைகளுக்கான பாட நூல்களும் விற்கப்படுகின்றன.

சமயச்சார்புள்ள நூல்கள், குறிப்பாகக் கிறித்தவ இலக்கியச் சங்க வெளியீடுகள் மட்டுமின்றி தமிழ்நாட்டின் பிற பதிப்பகங்களின் நூல்கள் இடம்பெற்றுள்ளன. தனிநபராக அச்சிட்டு வெளியிடுவோரின் நூல்களை விற்பனைக்காக வாங்குவதின் மூலம் ஏராளமான தமிழ் எழுத்தாளர்களுக்கு இந்நிறுவனம் உதவி செய்து வருகிறது. சென்னையில் உள்ள நூல் விற்பனை நிலையத்தில் தமிழ் நாட்டின் பல மாவட்டங்களில் வெளியிடப்படும் நூல்கள் இடம்பெற்றுள்ளன. கவிதை, புதினம், குறுநாவல், சிறுகதை, திறனாய்வு நூல்கள், தமிழாக்கம் செய்யப்பட்ட அறிவியல், புவியியல் வெளியீடுகள், முதியோருக்கான நூல்கள், இளைஞருக்கானவை, மகளிருக்கானவை, சிறுவர் நூல்கள் எனப் பலதரப்பட்ட நூல்கள் இங்கே காணப்படுகின்றன. இவ்வாறு மதுரையில் உள்ள நூல் விற்பனை நிலையமும் விளங்குகிறது.

ஆந்திரம், கர்நாடகம், கேரளா ஆகிய மாநிலங்களில் உள்ள விற்பனை நிலையங்களில் தமிழ் இலக்கிய வகைகளை இடம்பெறச் செய்து தமிழ்க் கிறித்தவர்களுக்கும் பிற சமயத்தைச் சார்ந்த தமிழ் மக்களுக்கும் இந்நிறுவனம் தொண்டாற்றி வருகிறது. இது தவிர புத்தகக் கண்காட்சிகள் மூலம் சலுகை விலையில் நூல் விற்பனை ஆண்டுதோறும் நடைபெற்று வருகின்றது. 1980ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் டில்லியில் நடந்த அகில உலக புத்தகக் கண்காட்சியிலும் இந்நிறுவனம் பங்குபெற்றுள்ளது.

**பயிற்சிகள்**

கிறித்தவ இலக்கியச் சங்கம் செய்துவரும் தமிழ்ப்பணிகளுள் எழுத்தாளர்கள், மொழிபெயர்ப்பாளர்கள், அச்சிடுவோர்கள், நூற்விற்பனை யாளர்கள் ஆகியோருக்காக நடத்தப்படும் பயிற்சி வகுப்புகள் குறிப்பிடத்தக்கவை.

மேலை நாடுகளிலிருந்து சிறந்த பயிற்சி பெற்ற நிபுணர்களை வருவித்தும் இப்பயிற்சிகளை இச்சங்கம் அடிக்கடி நடத்துகிறது. இப்பயிற்சியின் மூலமாகப் பல புது இலக்கிய அணுகுமுறைகள் உருவாக வழி ஏற்படுகிறது. புதிய இலக்கியங்களும் தோன்ற இப்பயிற்சிகள் வகை செய்கின்றன.

இவ்வாறு அச்சு, நூற்பதிப்பு, வெளியீடு, விற்பனை, இலக்கியப் பயிற்சிகள் ஆகிய நிலைகளிலும் கிறித்தவ இலக்கியச் சங்கம் தனது சமயப்பணியோடு தமிழ்ப்பணியையும் மேற்கொண்டு வருகிறது.

**நூல் விற்பனைப் பொறுப்பாளர்கள்**

கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் நூல் விற்பனைப் பொறுப்பாளர்கள் விவரம் அவர்கள் பணிபுரியும் இடத்திற்கு ஏற்ப கீழே தரப்பட்டுள்ளன.

| | | | |
|---|---|---|---|
| 1. | சென்னை | - | ஜீன்ஸ் ஜெயச்சந்திரன் |
| 2. | மதுரை | - | ஜெ.ஏ.வி. பிரின்சு |
| 3. | கோவை | - | தியாகராஜன் |
| 4. | கொடைக்கானல் | - | எஸ்.எம்.ஞானசேகரன் |
| 5. | சூளைமேடு | - | லூயிஸ் கிறிஸ்டோபர் |
| 6. | பெங்களூர் | - | ஜெ. செல்வஜெயகரன் |
| 7. | மைசூர் | - | ராஜேந்திர வசந்தகுமார் |
| 8. | கொச்சி | - | ரேச்சல் பால் |
| 9. | திருவனந்தபுரம் | - | டோனால்டுலால் |
| 10. | ஐதராபாத் | - | ராஜீ |

**கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் குறிக்கோள்**

மக்களின் இலக்கியத் தேவைகளை முழுமை செய்வதும் மக்களுக்குத் தேவையான மறுபதிப்புகளை வெளிக்கொணர்வதும் இலக்கியப்பணி ஆற்றும்

பிற கிறித்தவப் பதிப்பகங்களுடன் இணைந்து செயல்படுவதும், கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் குறிக்கோள்களாகும். கிறித்தவ இலக்கியச் சங்கம் இந்திய திருச்சபைகள், உலகக் கிறித்தவத் திருச்சபை மன்றம் ஆகிய பல உயர்மட்ட அமைப்புகளோடு தொடர்பு கொண்டுள்ளது.

கிறித்தவ இலக்கியச் சங்கம் தனது 125 ஆவது ஆண்டு விழாவினை 1983ஆம் ஆண்டு கொண்டாடியது. தற்பொழுது 150 ஆம் ஆண்டு விழாவினை எதிர்நோக்கியிருக்கிறது.

கிறித்தவ இலக்கியச் சங்கம் புகழ்பெற்ற கிறித்தவ எழுத்தாளர்கள், கவிஞர்கள், தமிழ் நாவலாசிரியர்கள், தமிழ் அறிஞர்களின் இலக்கியப் படைப்புகளை வெளியிட்டுத் தமிழுக்குத் தொண்டாற்றி வருகிறது.

**சென்னை பாடநூல் நிறுவனம்**

கிறித்தவ இலக்கியச் சங்கம் **சென்னை பாடநூல் நிறுவனம்** என்ற பெயரில் பரிசுத்திட்டம் ஒன்றை நடத்தி வருகிறது. இலக்கிய நயமுடைய நூல்களைத் தேர்ந்தெடுத்து நூல் ஆசிரியர்களுக்கும், பதிப்பகத்தார்க்கும் உதவித்தொகை வழங்கி வருகிறது. இத்திட்டம் ஆகஸ்ட் 15ஆம் தேதி 1983இல் ஆரம்பிக்கப்பட்டது. இதுவரை சுமார் 1850 நூல்களுக்குப் பரிசு வழங்கப்பட்டுள்ளது. தமிழ், தெலுங்கு, இந்தி, மலையாளம், கன்னடம், ஆங்கிலம், சமஸ்கிருதம் ஆகிய மொழிகளில் உள்ள நூல்களுக்குப் பரிசு கொடுக்கப்படுகிறது. பல புகழ்பெற்ற தமிழ்ப் பேராசிரியர்கள் பாடநூல் பரிசுத் திட்டத்தின் தலைவர்களாகப் பணிபுரிந்துள்ளனர். 1983இல் இருந்து 1999 வரை சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் சி. **பாலசுப்பிரமணியன்** தலைவராக இருந்துள்ளார். தற்பொழுது சென்னைக் கிறித்தவக் கல்லூரியின் முன்னாள் தமிழ்த் துறைத்தலைவர் **பேராசிரியர் வடிவேலாயுதம்** தலைவராகச் செயல்பட்டு வருகிறார்.

**இலக்கிய நண்பர் வட்டம்**

வளர்ந்து வரும் தமிழ் இலக்கியத்தில் திறனாய்வு நூல்களும் அதிகம் இடம்பெற வேண்டும் என்ற நோக்கத்துடன் கிறித்தவ இலக்கியச் சங்கமும், கிறித்தவ இலக்கியக் குழுவும் இணைந்து இலக்கிய நண்பர் வட்டம் என்ற இலக்கிய அமைப்பைத் தொடங்கியது. அவ்விலக்கிய அமைப்பில் தமிழ்நாட்டிலுள்ள தலைசிறந்த எழுத்தாளர்களையும், அறிஞர்களையும் இடம்பெறச் செய்து தமிழ் இலக்கிய வகைகளில் திறனாய்வு மேற்கொள்ளச் செய்ய வேண்டும் என்ற நோக்கத்தில் 'இலக்கிய நண்பர் வட்டம்' என்ற அமைப்பினை ஏற்படுத்தியது கிறித்தவ இலக்கியச் சங்கமும், கிறித்தவ இலக்கியக் குழுவும்.

கிறித்தவ இலக்கியக்குழு என்றொரு அமைப்பு இதனை நடத்துவதற்குத் துணைசெய்தபோதிலும் இவ்விலக்கிய வட்டம் கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் முழு ஆதரவிலேயே நடத்தப்பட்டு வருகிறது.

நண்பர் வட்டம் முதன் முதலில் 1969ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் கிறித்தவ இலக்கியச் சங்கத்தால் தொடங்கப்பெற்று, இன்றுவரை நடைபெற்று வருகிறது. நண்பர் வட்டத்தின் முதல் கருத்தரங்கை அமைத்து நடத்தியவர் கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் முன்னாள் தமிழ்ப்பதிப்பாசிரியர் ராஜதுரை. இவரைத் தொடர்ந்து தி.பாக்கியமுத்து இப்பொறுப்பினை ஏற்றார். 1982 முதல் தி. தயானந்தன் பிரான்சிஸ் பொறுப்பேற்று நடத்தி வருகிறார்.

இலக்கிய நண்பர் வட்டத்தில் தமிழகத்தின் தலைசிறந்த நாவலாசிரியர்களும், சிறுகதை எழுத்தாளர்களும், திறனாய்வாளர்களும் தங்கள் கருத்துக்களை வழங்கி வருகின்றனர்.

**பூக்கூடை**

கிறித்தவ இலக்கியச் சங்கத்தால் வெளியிடப்பட்டு வந்த சத்திய தூதன், கிறித்தவ ஊழியர்தோழன், கிரகமணி முதலிய இதழ்கள் பல்வேறு காரணங்களால் தொடர்ந்து வெளியிடப்படாமல் போய்விட்டன. இக்குறையைப் போக்கும் விதத்தில் பூக்கூடை என்ற இதழ் தற்போது வெளியிடப்பட்டு வருகிறது. தமிழ்க் கிறித்தவச் சமுதாயத்திற்குச் சபைப் பாகுபாடற்ற ஒரு பொதுவான குடும்பப் பத்திரிகை தேவை என்பதை உணர்ந்த கிறித்தவ இலக்கியச் சங்கம் பூக்கூடை இதழை வெளியிட்டது. 1979ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்களில் பூக்கூடை துவக்கப்பட்டது. நூறாண்டுகளுக்கும் மேலாக அச்சில் இருந்து வரும் பூக்கூடை என்னும் குறுநாவலை நினைவுகூறும் விதத்தில் கிறித்தவ இலக்கியச் சங்கம் இவ்விதழுக்கு பூக்கூடை என்று பெயரிட்டது. பூக்கூடை இதழின் தொடக்ககால ஆசிரியர் எச்.பி.ராஜ்குமார். தற்போது அருள்திரு. தி. தயானந்தன் பிரான்சிஸ் சிறப்பு ஆசிரியராகவும், திருமதி. ஸ்வீட்லின் பிரபாகரன் பொறுப்பாசிரியராகவும் இருந்து பூக்கூடை இதழை நடத்தி வருகின்றனர். பூக்கூடை இதழ் கிறித்தவ மதம் சார்ந்த இதழாக இருந்தாலும் தமிழ் இலக்கியங்களையும் கிறித்தவ இலக்கியங்களையும் மையமாகக் கொண்டு செயல்பட்டு வருகின்றது. கிறித்தவர் அல்லாத எழுத்தாளர்களின் மனிதநேயம் சார்ந்த படைப்புகளுக்கும் வரவேற்பு அளிக்கப்படுகிறது.

**சிற்றாலயம்**

கிறித்தவ இலக்கியச் சங்கத்தில் முதன் முதலாக 1998ஆம் ஆண்டு நவம்பர் 11ம் தேதி சாது சுந்தர்சிங் என்ற பெயரில் ஒரு சிற்றாலயம் அமைக்கப்பட்டுள்ளது. இங்கு வாரந்தோறும் வழிபாடு, திருவிருந்து, சிறப்பு வழிபாடுகள் நடைபெறுகின்றன. பயிற்சி நிலையத்திலும் சிறப்புக்கூட்டம், குழுக்கூட்டம், ஜெபக்கூட்டம், திருவிருந்து நடைபெறுவதற்கு ஒரு அறையும் உள்ளது.

**விருதுகள்**

கிறித்தவ இலக்கியச் சங்கம் பல்வேறு விருதுகளைப் பெற்றுள்ளது. வி.ஜி.பி. விருது, மேனாட்டு கிறித்தவ அமைப்புகள் மூலம் பெற்ற விருதுகள் ஆகியவை குறிப்பிடத்தக்கன. கிறித்தவ இலக்கியச் சங்கம் சென்னைப் பல்கலைக்கழகத்துடனும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்துடனும் தமிழ் இலக்கிய வகையில் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளது.

**கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் தமிழ்ப் பணியில் தி.தயானந்தன் பிரான்சிஸ் பங்களிப்பு**

தி.தயானந்தன் பிரான்சிஸ் 1979 ஆம் ஆண்டு பொதுச் செயலாளராகப் பொறுப்பேற்று கிறித்தவ இலக்கியச் சங்கத்தை திறம்பட நடத்தி வருகின்றார். இவரது இலக்கிய ஆர்வத்தினால் இன்று கிறித்தவ இலக்கியச் சங்கம் சிறப்பாக செயல்பட்டு வருவதுடன் தமிழ்ப்பணியும் ஆற்றி வருகின்றது. தமிழ் இலக்கிய வரலாற்றில் கிறித்தவ இலக்கியச் சங்கம் தனி இடம் பெறுவதற்கு தி.தயானந்தன் பிரான்சிஸ் காரணமாவார். கிடைப்பதற்கரிய நூல்களைக் கண்டுபிடித்தால் உடனே பதிப்பித்து வெளியிடுவது இவரது வழக்கம்.

தமிழ் இலக்கியத்திற்குத் தொண்டு செய்யும் வகையிலும் படைப்பாளர்களை அறிமுகப்படுத்தி ஊக்குவிக்கும் முறையிலும் பூக்கூடை எனும் இதழை அறிமுகப்படுத்தினார். எழுத்தாளர்களுக்கு எழுத்துப் பட்டறைகளும், பயிற்சி முகாம்களும், கருத்தரங்குகளும் வைத்து அவர்களை எழுத ஊக்குவித்த பெருமை தயானந்தன் பிரான்சிஸைச் சாரும்.

இலக்கிய நண்பர் வட்டம், கிறித்தவ இலக்கியப் படைப்பாளர் இயக்கம், பூக்கூடை இதழ் மற்றும் பிற இதழ்கள், புத்தக வெளியீடுகள் வாயிலாக தமிழ்ப் பணியாற்றி கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் பெருமையை நிலைநாட்டி வருகிறார்.

ஆண்டுதோறும் இலக்கியக் கருத்தரங்கு நடத்துவது மட்டுமின்றி அக்கருத்தரங்குகளில் படிக்கப்பட்ட கட்டுரைகளை நூல்களாக வெளியிடுவதில் மிகுந்த ஆர்வம் உடையவர். திரு.வி.க., பாரதிதாசன், தமிழ் ஒளி, விந்தன், நாரண துரைக் கண்ணன், வல்லிக் கண்ணன் போன்றவர்களின் வரலாறுகளைத் தொகுத்து நூல்களாக வெளியிட்டுள்ளார். மேலும், கிறித்தவ இலக்கியம் பற்றி விரிவாக தெரிந்து கொள்வதற்கு இவரது நூல்கள் பயன்படுகின்றன.

இலக்கிய நண்பர் வட்டக் கருத்தரங்கின்போது மூத்த கவிஞர்களுக்கும் எழுத்தாளர்களுக்கும் பொற்கிழி வழங்கிக் கவுரவித்து வருவதன் மூலம் கிறித்தவ இலக்கியச் சங்கம் தமிழ்ப் படைப்பாளர் மீது கொண்டிருக்கும் மதிப்பினை அறிய முடிகிறது.

தமிழில் புலமை படைத்த தயானந்தன் பிரான்சிஸ் தொண்டைப் பாராட்டி பல நிறுவனங்கள் பரிசும், பாராட்டு இதழ்களும் வழங்கியிருக்கின்றன. சிறப்பாக முன்னாள் நீதிபதி.மு.இஸ்மாயில் தலைமையில் கம்பன் கழகம் 1991 இல் தயானந்தன் பிரான்சிஸுக்கு பரிசும் பாராட்டிதழும் வழங்கியது.

கிறித்தவர்களின் தமிழ்ப் பற்றினை உலகிற்கு உணர்த்தும் தமிழ்த் தொண்டராகிய தயானந்தன் பிரான்சிஸின் தமிழ்ப் பணியும் அரும்பணியும் தமிழ் மொழியில் வெளிவந்த அச்சு நூல்களின் வகைப்பட்டியலை வெளியிட்ட ஜான் மர்டாக்கின் தொண்டுகளுக்கு மேலானவை என்கிறார் த.இயேசுதாஸ்.[35] அப்படிக் கூறினாலும் தி.தயானந்தன் பிரான்சிஸின் தொண்டு அதற்கு ஈடானது என்று கொள்ளலாம். கிறித்தவ நற்செய்திப் பணி, கிறித்தவ இலக்கியப் பணி, கிறித்தவ சமுதாயப் பணி ஆகிய மூன்று பணிகளையும் மகிழ்ச்சியுடன் செய்து வருகிறார்.

**தொகுப்புரை**

கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும் என்னும் இயலில் இதுகாறும் கூறப்பட்டவற்றிலிருந்து கீழ்க்காணும் கருத்துக்கள் தொகுத்துத் தரப்படுகின்றன.

இயேசுகிறிஸ்துவின் சீடர்களுள் ஒருவரான புனித தோமையரால் இந்தியாவிற்கு வந்த கிறித்தவம் ஐரோப்பியர்களின் வருகையால் நாடு முழுவதும் பரவியது. இந்தியக் கிறித்தவ வளர்ச்சியில் மிகச்சிறந்த தொண்டாற்றியவர் சீகன்பால்கு ஐயர் ஆவார். தமிழ்நாட்டில் அச்சு, பள்ளிகள், நூல்கள் ஆகியவற்றின் தோற்றத்திற்கு வித்திட்டவர் சீகன்பால்கு ஐயர்.

சீகன்பால்கு ஐயரைத் தொடர்ந்து அச்சுப்பணியை கிறித்தவ இலக்கியச் சங்கம் சிறப்புடன் செய்து வருகிறது. தமிழகத்தில் பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் பொதுமக்கள், ஆசிரியர், மாணவர் ஆகியோரின் நலனை மனதில் கொண்டு பல நூல் வெளியீட்டு நிறுவனங்கள் தொண்டாற்றி வந்தன.

தாய் மொழி வாயிலாக கல்வி கொடுக்க வேண்டும் எனும் நோக்கத்தில் 1858இல் கிறித்தவ தாய்மொழிக் கல்விச்சங்கம் தோற்றுவிக்கப்பட்டது.

கிறித்தவ தாய்மொழிக் கல்விச் சங்கம் 1890ஆம் ஆண்டு இந்திய கிறித்தவ இலக்கியச் சங்கம் எனும் பெயரைப் பெற்றது. இதன் முதல் பொதுச்செயலாளராக டாக்டர் ஜான் மர்டாக் 1858 முதல் 1904 வரை பணியாற்றினார்.

ஜான் மர்டாக்கின் பதிப்புப் பணிக்காகவும், இந்தியாவில் அவர் செய்த சேவைக்காகவும் இந்திய அரசாங்கம் அவருக்கு தங்கப்பதக்கம் வழங்கி சிறப்பித்தது. ஜான் மர்டாக்கைத் தொடர்ந்து எச்.கிரிப்போர்ட், பாஸ்மோர், வில்லியம் ஹென்றிவாரன், பிலிப்பென்னிங், ஏ.டி.மனுவேல், அலெக்சாண்டர் ஜான் ஆகியோர் கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் பொதுச் செயலாளர்களாகப் பணியாற்றியுள்ளனர்.

1979ஆம் ஆண்டு முதல் அருள்திரு தயானந்தா பிரான்சிஸ் பொதுச் செயலாளராகப் பொறுப்பேற்று கிறித்தவ இலக்கியச் சங்கத்தை நடத்தி வருகின்றார். இலக்கிய நண்பர் வட்டம் கிறித்தவ இலக்கிய படைப்பாளர் இயக்கம், பூக்கூடை இதழ், புத்தக வெளியீடு வாயிலாக தமிழ்ப் பணியாற்றி கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் பெருமையை நிலைநாட்டி வருகிறார்.

கிறித்தவ இலக்கியச் சங்கத்தின், முதல் தமிழ்ப்பதிப்பாசிரியராக கிறித்தவக் கம்பர் என்று அழைக்கப்படும் எச்.ஏ.கிருஷ்ணபிள்ளை பணியாற்றினார். 1987 முதல் திருமதி. ஸ்வீட்லின் பிரபாகரன் தமிழ்ப் பதிப்பாசிரியராக பணியாற்றி வருகின்றார். இவரைத் தொடர்ந்து ஏ.சி.கிளேட்டன், தானியேல், கோயில்பிச்சை, ராஜதுரை, பாக்கியமுத்து, ராஜ்குமார், சத்தியசாட்சி ஆகியோர் தமிழ்ப் பதிப்பாசிரியர்களாகப் பணியாற்றினர்.

இச்சங்கம் எட்டு உறுப்பினர்களைக் கொண்ட ஓர் ஆட்சிக்குழுவினால் நிர்வகிக்கப்பட்டு வருகிறது. இச்சங்கத்தின் நிர்வாகப் பொறுப்பு பொதுச் செயலாளரிடம் உள்ளது.

கிறித்தவ இலக்கியச் சங்கம் அச்சு, நூற்பதிப்பு, வெளியீடு, விற்பனை எனும் நான்கு முக்கியமான நிலைகளின்கீழ் தனது மொழி மற்றும் இலக்கியப்பணியைச் செய்து வருகிறது. கிறித்தவ இலக்கியச் சங்கத்தில் தமிழ்மொழியில் மட்டுமின்றி ஆங்கிலம், மலையாளம், தெலுங்கு, கன்னடம், இந்தி ஆகிய மொழிகளிலும் நூல்கள் அச்சடிக்கப்படுகின்றன.

கிறித்தவ இலக்கியச் சங்கம் சென்னை பாடநூல் நிறுவனம் என்ற பெயரில் பரிசுத்திட்டம் ஒன்றை நடத்தி வருகிறது. நல்ல இலக்கிய நயமுடைய நூல்களைத்

தேர்ந்தெடுத்து நூல் ஆசிரியர்களுக்கும் பதிப்பகத்தார்க்கும் உதவித்தொகை வழங்கி வருகிறது. எழுத்தாளர்கள், மொழி பெயர்ப்பாளர்கள், நூல் விற்பனையாளர் களுக்குப் பலவிதமான பயிற்சிகளை அளித்து வருவதன் மூலம் புதுவிதமான இலக்கிய அணுகுமுறைகள் ஏற்பட இந்நிறுவனம் துணை செய்கிறது. இச்சங்கம் மனிதநேயம், சமத்துவம், சகோதரத்துவம் என்ற நோக்கில் செயல்பட்டு வருவது குறிப்பிடத்தக்கது.

# அடிக்குறிப்புகள்

1. இரா. கோதண்டபாணி, இதழியல், ப.10.

2. மேற்படி, ப.11.

3. எஸ். லாரன்ஸ், டி. அருள்தாஸ், இந்தியாவின் விடிவெள்ளி சீகன்பால்கு ஐயர், ப.24.

4. மேற்படி, ப.59.

5. மேற்படி, பக்.59-60.

6. T. Ambrose Jeyasekaran, **Education Policies of Protestent Christian Mission in South India till the end of the 19th Century,** p.10.

7. ரம்போலாமாஸ்கரேனஸ், கிறித்தவத் தமிழ்த் தொண்டர்கள், ப.67.

8. வல்லிக்கண்ணன், "இலக்கியத்தில் முற்போக்குப் பார்வைகள்", தற்கால இலக்கியத்தில் முற்போக்குப் பார்வைகள், தி. பாக்கியமுத்து (ப.ஆ.), ப. 11.

9. தி. தயானந்தன் பிரான்சிஸ், "நூல் வெளியீட்டில் நூற்றியிருபத்தைந்து வருடங்கள்", தினமணிகதிர், 22.12.1983, ப.12.

10. மேற்படி, ப.12.

11. எச்.பி. ராஜ்குமார், "கிறித்தவ இலக்கியச் சங்கம்", பூக்கூடை, மே-ஜூன் 1980, ப.77.

12. T. Dhayanandan Francis, "The C.L.S. Yesterday - Today - Tomorrow", **The Christian Literature Society 125th Anniversary Sourvenir,** p.45.

13. Ibid, p.45.

14. சு.அ. ராமசாமி, எழுத்தாளர்களும் பதிப்பகங்களும், ப.46.

15. K. Henry Morris, **The Life of John Murdoch,** P.67.

16. Ibid., P.75.

17. Ibid., P.94.

18. Ibid., P.140.

19. J. Mangamma, **Book Printing in India,** p.19.

20. தி.தயானந்தன் பிரான்சிஸ், **பூக்கூடை,** ப.15.

21. அ. விநாயகமூர்த்தி, **பதிப்புக்கலை,** ப.12.

22. கிறித்தவ இலக்கியச் சங்கப் பொதுச் செயலாளர் டாக்டர் தி.தயானந்தன் பிரான்சிஸ் அவர்களுடன் 11.8.2000 அன்று ஆய்வாளர் உரையாடிய போது கிடைத்த செய்தி.

23. சு.அ. ராமசாமி, மு.நூ., ப.50.

24. T. Dhayanandan Francis, **N.C.C.I. Review,** p.p.336-337.

25. J. Mangamma, Op.Cit., p.47.

26. மா.சு. சம்பந்தன், **அச்சுக்கலை,** ப.148.

27. மா.சு. சம்பந்தன், **எழுத்தும் அச்சும்,** ப.61.

28. எச்.பி. ராஜ்குமார், மு.இ., ப.80.

29. யு.எம். உசேன் (க.ஆ.) **அறிவு மலர்,** ப.1.

30. ஆர். இராதாகிருஷ்ணமூர்த்தி, ''நியூ செஞ்சுரி புத்தக நிறுவனம் - ஒரு பார்வை'', **ஜனசக்தி,** ப.3.

31. சு.அ. ராமசாமி, மு.நூ., ப.43.

32. மேற்படி, ப.46.

33. அ. விநாயகமூர்த்தி, **பதிப்புப்பார்வைகள்,** ப.154.

34. மா.சு. சம்பந்தன், மு.நூ., ப.63.

35. த. இயேசுதாஸ், இலக்கிய போதருக்கு வாழ்த்து, **டாக்டர் தயா மணிவிழா மலர்,** தி.தயானந்தன் பிரான்சிஸ் (ப.ஆ.), ப.80.

# நூல் வெளியீட்டுப்பணி

**முன்னுரை**

தமிழியல் குறித்து அரிய உதவும் முக்கியமான தரவுகளாக இலக்கிய, இலக்கணங்கள் திகழ்கின்றன. இவை 19ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் அச்சுக்குக் கொண்டுவரப்பட்டன. அச்சில் வந்த இவ்விலக்கிய இலக்கணங்கள் குறித்து ஆய்வுகள் நிகழ்ந்தன. இவ்வாய்வுகள் மூலம் தமிழ் ஆய்வியலில் பல புதிய மாற்றங்கள் உருவாகின. இவற்றுள் தமிழ்ப்பதிப்பு வரலாறும் நூல் வெளியீடும் குறிப்பிடத்தக்க ஒன்றாக அமைகிறது. தாய்மொழி வாயிலாகக் கல்விப்பணி செய்ய வேண்டும் என்ற நோக்கத்துடன் துவக்கப்பட்ட தமிழகக் கிறித்தவ இலக்கியச் சங்கம் தமிழ்மொழிக்கும் தமிழ் இலக்கியத்திற்கும் பணி செய்து வருகிறது. கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் இத்தகைய தமிழ் நூல் வெளியீட்டுப் பணியைக் குறித்து ஆய்வதாக இவ்வியல் அமைகிறது.

**நூற்பதிப்புப்பணி**

அச்சுப்பணி வளரத் தொடங்கிய நாளில் நூல்களை அச்சேற்றிப் பதிப்பித்து வெளியிடும் பணி அவசியமானதாக அமைந்தது. முற்காலத்தில் அச்சிடுபவரே வெளியிடுபவராகவும் விற்பனையாளராகவும் இருந்து வந்துள்ளனர். கி.பி.1522இல் அக்ஸ்பர்க் என்னும் இடத்தில் காலமான ஜான்ரைமன் என்பவரே முதலாவது நூற்பதிப்புப் பணியையும் விற்பனையையும் மேற்கொண்டவர்[1] என்பதை அறியும்போது நூற்பதிப்புப் பணியும், நூல்வெளியீடும் கி.பி.16ஆம் நூற்றாண்டில் தோன்றியிருப்பது புலப்படுகிறது. தமிழகத்தைப் பொறுத்தவரையில் நூற்பதிப்புப்பணி ஐரோப்பியர்களாலேயே அறிமுகம் செய்யப்பட்டது.

கி.பி.1818இல் தோற்றுவிக்கப்பட்ட **சென்னை சமயத்துண்டுப்பிரதி** மற்றும் பாடநூல் சங்கமும், கி.பி.1854இல் துவக்கப்பட்ட **தென்னிந்தியப் பாடநூல் நிறுவனமும்**, கி.பி.1858 இல் டாக்டர் ஜான் மர்டாக் தோற்றுவித்த **கிறித்தவ தாய்மொழிக் கல்விச்சங்கமும்** நூற்பதிப்புப் பணியை 19ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் செய்து வந்துள்ளன. இந்த மூன்று நிறுவனங்களன்றி தமிழ்நாட்டில் தோன்றிய பல அறிஞர்களும் இப்பணியைச் செய்து வந்துள்ளனர்.

ஆறுமுகநாவலரின் **ஆறுமுகநாவலர் பதிப்பகமும், உ.வே.சா.வின் பதிப்பகமும்** பதிப்புத் தொண்டில் தங்களை ஈடுபடுத்திக் கொண்டன. இப்பதிப்பகங்களின் அடிச்சுவட்டில் வேறுபல பதிப்பகங்களும் தோன்றலாயின. மறைமலையடிகளின் **திருமுருகன் அச்சுக்கூடம்**, திரு.வி.க.வின் **முருகவேள் புத்தகசாலையும்**, தங்கள் கருத்துக்களை மக்கள் அறியவேண்டும் என்ற நோக்கத்திற்காகவே ஏற்படுத்தப்பட்டன.

கி.பி.1920ஆம் ஆண்டில் ஆரம்பிக்கப்பட்ட **சைவ சித்தாந்த நூற்பதிப்புக்** கழகம் இதுவரை 2062 நூல்களை வெளியிட்டுள்ளது. 1946ஆம் ஆண்டில் ஆரம்பிக்கப்பட்ட **பாரிநிலையம்** சுமார் 1800 நூல்களை வெளியிட்டுள்ளது. 1960ஆம் ஆண்டில் ஆரம்பிக்கப்பட்ட **மணிவாசகர் பதிப்பகம்** இதுவரை 1085 நூல்களை வெளியிட்டுள்ளது. இந்த மூன்று நிறுவனங்கள் மட்டுமின்றி இவைபோன்று பல நிறுவனங்களும் நூல் வெளியிட்டுப் பணியைச் செய்து வருகின்றன. இவற்றின் முன்னால் தொடங்கப்பட்ட கிறித்தவ இலக்கியச் சங்கமும் நூல் வெளியீட்டுப்பணியில் முன்னோடியாகத் திகழ்கின்றது.

**தமிழ் நூற்பதிப்பு முன்னோடிகள்**



நூற்பதிப்பு என்பது இருவகையில் அமைகின்றது.

- சுவடியிலுள்ள இலக்கிய இலக்கணங்களை ஒருவர் பார்த்தெழுதி அதைச் சரிபார்த்து மூலபாட ஆய்வு செய்துபின் அதை நூலாக வெளியிடுவது.

- ஒருவர் எழுதிய நூலை அச்சேற்றி வெளியிடுவது.

முதல்வகையில் அமைந்தவர்கள் பதிப்பு முன்னோடிகள் என அழைக்கப்படுகின்றனர்.

ஐரோப்பியர்கள் நூற்பதிப்புப்பணி செய்துவரும் வேளையில் யாழ்ப்பாணத்தில் தோன்றிய ஆறுமுக நாவலர் (1822) தமிழகத்தைச் சார்ந்தவர்களான சி.வை. தாமோதரம் பிள்ளை (1832) டாக்டர் உ.வே. சாமிநாதையர் (1855) வெள்ளகால் ப. சுப்பிரமணிய முதலியார் (1857) வ.உ.சிதம்பரம் பிள்ளை (1872) நமச்சிவாய முதலியார் (1876) மு.இராகவையங்கார் (1878) வையாபுரிப்பிள்ளை (1891) முதலியோர் தமிழ் நூற்பதிப்புப் பணியை முற்காலத்தில் செய்தனர். இவர்கள் தமிழ் நூற்பதிப்பின் முன்னோடிகளாகக் கருதப்படுகின்றனர்.

தமிழ்ப்பதிப்பு வரலாற்றில் முக்கிய படிநிலைகளானவர்களாக ஆறுமுக நாவலர், சி.வை. தாமோதரம்பிள்ளை, உ.வே. சாமிநாதையர் ஆகிய மூவரைக் குறிப்பர். இம்மூவருடைய பதிப்பு அனுபவங்களையும் உள்வாங்கி, பொதுவான பதிப்பு முறைகள் ஆகியவற்றையும் அறிந்து தமிழ் நூல்பதிப்பில் ஈடுபட்டவர் வையாபுரிப்பிள்ளை.

யாழ்ப்பாண ஆறுமுக நாவலர் தமிழ் இலக்கிய இலக்கணங்களையும் சைவசமய நூல்களையும் பதிப்பித்துள்ளார். இவரது பதிப்பை இன்றும் போற்றுபவர் உண்டு. ஆறுமுக நாவலர் இலக்கண, இலக்கிய நூல்கள் பலவற்றைப் பதிப்பித்துள்ளார். இவ்வகையில் நன்னூல் விருத்தியுரை, நன்னூல்

காண்டிகையுரை, தொல்காப்பியம் எழுத்ததிகாரம் சேனாவரையருரை, இலக்கணக் கொத்து, இலக்கண விளக்கச் சூறாவளி, இலக்கண வினா விடை, தொல்காப்பியச் சூத்திர விருத்தி, இலக்கணச் சுருக்கம், சூடாமணி நிகண்டு, ரத்தினச்சுருக்கம், உவமான சங்கிரகம், திருக்கோவையார், திருக்குறள், திருவாசகம், சைவசமய நெறி, கோயிற்புராணம் ஆகிய நூல்கள் அவரால் பதிப்பிக்கப்பட்டுள்ளன. திருக்குறளை முதலிற் பதிப்பித்தவர் ஆறமுக நாவலரே என்பது இவண் அறியத்தகும்.[3]

தமிழ் நூல்களின் பதிப்பு வரலாற்றின் சிறப்புக்குரியவராகப் போற்றப்படுகின்றவர் டாக்டர் உ.வே. சாமிநாதையர். எனினும் அவருடைய பதிப்புப் பணிக்கு முன்னோடியாக இருந்தவர் யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலர் ஆவார்[4] என்பது ஏ.வி. சுப்பிரமணிய ஐயரின் கருத்து.

சி.வை. தாமோதரம் பிள்ளை தமிழ்ப்பற்றின் காரணமாகக் கலித்தொகை முதலிய கையேட்டுப் படியிலிருந்த நூல்களை அச்சிட்டுப் பதிப்பித்த முதல் பெருமகனாராவார்.[5] சி.வை. தாமோதரம் பிள்ளை தொல்காப்பியப் பொருளதிகார உரையினையும், சூளாமணியையும் பதிப்பித்துள்ளார்.

பதிப்புத்துறையில் சென்ற நூற்றாண்டின் மத்தியப் பகுதியை நாவலர் காலம் என்று சொல்லலாம். அவர் மக்களை வாழ்வாங்கு வாழவைக்கும் முறையில் வசன நூல்களை எழுதியும், நல்லுரைகள் செய்தும், பழைய நூலுரைகளை வெளிப்படுத்தியும் அச்சில் பதிப்பிக்கும் துறையைப் பயன்படுத்தினார். நாவலரையடுத்து பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதி தாமோதரம் பிள்ளையவர்களின் காலமேயாகும். அதனைத் தொடர்ந்து இருபதாம் நூற்றாண்டுத் தொடக்கமான பகுதி சாமிநாதையர் காலம் ஆகும்.[6]

உ.வே. சாமிநாதையர் சிறப்புப் பற்றி திரு.வி.கல்யாணசுந்தரனார், சாமிநாதையர் தமிழிலே பிறந்தார், தமிழிலே வளர்ந்தார், தமிழிலே வாழ்ந்தார், அவர் பிறப்புந்தமிழ்,

வளர்ப்புந்தமிழ், வாழ்வுந்தமிழ், அவர் மனம் மொழி மெய்களெல்லாம் தமிழே ஆயின; அவர் தமிழாயினர்; தமிழ் அவராயிற்று, அவர் தமிழ்; தமிழ் அவர் என்பர்[7].

ஒரு நூலின் ஏட்டுப்பிரதி கிடைத்தால், இந்நூலின் வேறு பிரதிகள் கிடைக்குமா என்று, பலவிடங்களிலும் பொறுமையோடும் ஊக்கத்தோடும் ஐயர் தேடுவார். கிடைக்கின்ற பிரதிகளை ஒருங்கே தொகுத்துக் கொண்டு, மாணவர்கள் துணையுடன், ஒப்பிட்டுப் பாடவேறுபாடுகளைக் குறித்துக் கொள்வார். இவ்வாறு பலமுறை ஒப்பிட்டு மூலம், உரை, குறிப்பு என்பவற்றின் சரியான வடிவங்களை உறுதிப்படுத்திக் கொள்வார். உரையில் வரும் மேற்கோள் பாடல்களைத் தனியே எழுதி அவற்றின் மூல நூல்களோடு ஒப்பிட்டுப் பார்ப்பார். பிரதிகளில் காணப்படும் பாடங்களில் சிறந்ததாகத் தோன்றுவதை மூலத்தில் அமைப்பார். பிறவற்றைப் 'பிரதி பேதம்' என்ற பகுதியில் காட்டுவார். இது பிற்கால ஆராய்ச்சியாளர்க்கு உதவுவதாக அமையும் என்பது உ.வே.சா. கருத்து.[8]

உ.வே.சா. கையில் சங்கநூல்கள் முதலியன கிடைக்காமல் போயிருந்தால், இப்பொழுது அந்நூல்கள் சிதல் வாய்ப்பட்டுப் பெரும்பாலும் அழிந்திருக்கும் என்பது உறுதி. அவ்வாறு அழிந்தொழியாதபடி பிரதிகளைப் பாதுகாத்து, அவற்றைத் தமிழ் மக்களுக்குச் செம்மையாக்கி உதவிய ஐயருக்கு நாம் என்றென்றும் கடமைப்பட்டிருக்கிறோம்[9] என்று பாராட்டுகிறார் வையாபுரிப்பிள்ளை.

உ.வே.சா. பதிப்பு, படிப்போருக்கு முழு நிறைவைத் தரவல்லது. ஒரு நல்ல பதிப்பிற்கு எவை எவை இருக்க வேண்டுமென ஓர் ஆய்வாளர் கருதுகின்றாரோ அவையெல்லாம் பெரும்பாலும் இருக்கின்றன. உ.வே.சா. அவர்களின் இத்தகு பதிப்புக்கள் தமிழகத்தில் பதிப்புத்துறையின் பல்வேறு புது மாற்றங்களைப் புகுத்தின, ஆய்வுப் போக்கில் புதுத் திருப்பங்களை ஏற்படுத்தின.[10]

ஆராய்ச்சியாளருக்கு இவரது பதிப்பு பெரிதும் பயன்படுகிறது. உ.வே.சா. பதிப்பித்த எல்லா நூல்களிலும் முன்னும், பின்னும் ஆராய்ச்சிக் குறிப்புக்கள் நிறைந்திருக்கும். நூலாசிரியர், உரையாசிரியர் பற்றிய வரலாறுகள் இடம் பெற்றிருக்கும், உரையில் காட்டப்பட்ட மேற்கோள் நூல்களின் பட்டியல் சேர்ந்திருக்கும்; செய்யுள் அகராதியும் அரும்பத அகராதியும் தரப்பட்டிருக்கும். ஒரு பெரிய தமிழ்ப் பேரவையில் பல புலவர்கள் கூடிப்பல ஆண்டுகள் பொறுமையாக ஆய்ந்து பதிப்பித்திருக்க வேண்டிய பல நூல்களை இவர் ஒருவரே பதிப்பித்துப் பெருந்தொண்டு ஆற்றியுள்ளார்.[11]

உ.வே.சாமிநாதையர் பதிப்பித்துள்ள நூல்களின் எண்ணிக்கை ஏனைய பதிப்பாசிரியர்களை விடவும் மிகுதி. அவரது **என் சரித்திரம்** என்ற நூலில் அவர் பதிப்பித்து வெளியிட்டுள்ள நூல்களின் அகர வரிசைப் பட்டியல் காணப்படுகிறது. 'அழகர் கிள்ளைவிடுதூது' (1938) முதல் 'வேணுவனலிங்க விலாசச்சிறப்பு' (1878) இறுதியாக மொத்தம் 100 நூல்கள் அதில் காட்டப்பட்டுள்ளன.[12] ஆனால் உ.வே.சாவின் பதிப்புப் பணியினை முனைவர் பட்டத்திற்காக ஆய்வு செய்துள்ள பூ. சொல்விளங்கும் பெருமாள் அவர்கள், உ.வே.சா. பதிப்பித்த நூல்கள் 74; எழுதி வெளியிட்ட உரைநடை நூல்கள் 18; அவர் காலத்திற்குப் பின் பிறர் பதிப்பித்து வெளியிட்ட அவரது உரைநடை நூல்கள் மூன்று என்று வகைப்படுத்தியுள்ளார்[13].

வ.உ.சிதம்பரம்பிள்ளை, தொல்காப்பியம் - பொருளதிகாரத்தின் - (இளம்பூரணர்) முதல் இரு இயல்களை 1928ஆம் ஆண்டு பதிப்பித்துள்ளார்.

தமிழ் இலக்கண வரலாற்றுக்கு வையாபுரிப்பிள்ளையின் பங்களிப்பு மிக ஆழமானதாகும். தமிழக வரலாற்று வரைவிற்குப் பயன்படும் அடிப்படைத் தரவுகளான மொழி, இலக்கிய வரலாறுகள் சரியாக வரையப்படாதிருந்த காலகட்டத்தில் அதில் ஈடுபட்ட வையாபுரிப்பிள்ளை பதிப்பிக்கப்படாதிருந்த தமிழ்

நூல்களின் பதிப்பில் கவனம் செலுத்தியதோடு ஏற்கனவே பதிப்பிக்கப்பட்ட இந்த நூல்களின் குறைகளை நீக்கி ஆராய்ச்சிப் பதிப்புகளாக உருவாக்கினார். பதிப்புகளில் சிறந்த முன்னுரைகளை அமைத்தார். அவற்றில் முக்கியமாகக் கால ஆய்வை மேற்கொண்டார். ஆசிரியரது நூலின் காலம் நிர்ணயிக்கப்படாமல் அது தொடர்பான எதையும் புரிந்து கொள்ளுதல் இயலாது என்பதை வையாபுரிப்பிள்ளை உணர்ந்திருந்தார். ஆசிரியர், இடம், காலம், பெயர் ஆகியவற்றிலும் சிறப்பான கவனம் செலுத்தியுள்ளார். படைப்பின் மீதான இப்படிப்பட்ட ஆய்வுகள் மூல பாட ஆய்வுக்குப் பெருந்துணையாய் அமைவனவாகும். வையாபுரிப்பிள்ளைக்கு முற்பட்ட பதிப்பாளர்கள் இப்படிப்பட்ட புரிதலோடு பதிப்பில் ஈடுபட்டவர்கள் என்று கருத முடியவில்லை.[14] களவியற் காரிகை (1931), தொல்காப்பியம் - பொருளதிகாரம் - நச்சினார்க்கினியம் (1934), தொல்காப்பியம் - பொருளதிகாரம் - இளம்பூரணர் (1935), நவநீதப்பாட்டியல் (1943) ஆகியவை வையாபுரிப்பிள்ளையால் பதிப்பிக்கப்பட்ட குறிப்பிடத்தக்க நூல்களாகும். தமிழ்ப்பதிப்புலகில் சிறந்த பதிப்பாளராக வையாபுரிப்பிள்ளையை உருவாக்கியதில் தமிழ்ப்பேரகராதிக்குப் பெரும் பங்குண்டு.

**பதிப்பாசிரியர்**




சுவடியிலுள்ள இலக்கண இலக்கியங்களைச் சிறந்த முறையில் திருந்திய பதிப்பாகக் கொண்டு வருபவரும் பதிப்பாசிரியர் என அழைக்கப்படுகின்றார். ஒருவர் எழுதிய நூலை அச்சேற்றும்போது பிழைகளைத்திருத்தம் செய்து பதிப்பித்து

வெளியிடுபவரும் பதிப்பாசிரியர் என அழைக்கப்படுகின்றார். கிறித்தவ இலக்கியச் சங்கம் இரண்டாம் வகையைச் சார்ந்ததாகும்.

**கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் நூல் வெளியீட்டுப்பணி**

கிறித்தவச் சமயத்தைப் பரப்ப வந்த ஐரோப்பியர்கள் தங்கள் சமயத்தைப் பரப்புவதற்குத் தமிழ்மொழியை ஒரு கருவியாக எடுத்துக் கொண்டார்கள். கிறித்தவ இலக்கியச் சங்கம் தொடக்க காலத்தில் சமயம் சார்ந்த நூல்களை மட்டும் வெளியிட்டு வந்தது. பின்னர் தமிழிலக்கியத்திற்கும் இடம் கொடுத்து அவற்றையும் வெளியிட்டது.

கிறித்தவ இலக்கியச் சங்கம் இந்திய விடுதலைக்கு முன், சமுதாய நலனை முன்னிட்டு பல்வேறு தமிழ் நூல்களும் கையேடுகளும், முதியோர்களுக்காகவும் பெண்களுக்காகவும் இளைஞர்கட்காகவும் மாணவருக்காகவும் வெளியிட்டுள்ளது. இந்திய விடுதலைக்குப் பிறகே தமிழ் இலக்கிய வளர்ச்சியில் கிறித்தவ இலக்கியச் சங்கம் ஆர்வம் காட்டியுள்ளது.

1980ஆம் ஆண்டு முதல் கிறித்தவ இலக்கியச் சங்கம் தனது சமயச்சார்பற்ற வெளியீடுகளைப் பூக்கூடைப் பதிப்பகம் என்னும் பெயரில் வெளியிட்டுள்ளது. தற்போது கிறித்தவ இலக்கியச் சங்கம் ஆண்டுக்கு சுமார் 10 முதல் 15 வரையிலான நூல்களை வெளியிட்டு வருகின்றது. இவற்றுள் மறுபதிப்பு நூல்களும் அடங்கும். இதில் 50 விழுக்காடு சமயச் சார்பான நூல்கள் ஆகும். இவ்விதம் வெளியிடப்படும் நூல்களை வகைப்படுத்தி ஆராய்வதன் மூலம் கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் தமிழ்ப்பணியை அறிந்துகொள்ள முடியும். கிறித்தவ இலக்கியச் சங்கம் வெளியிட்டுள்ள நூல்களைப் பின்வருமாறு பாகுபடுத்தலாம். அவை:

1. அகராதிகள்
2. இலக்கணங்கள்






3. மொழிப்பயிற்சி நூல்கள்
4. களஞ்சியம்
5. செய்யுள் இலக்கியம்
6. புதுக்கவிதைகள்
7. சிறுகதைகள்
8. நாவல்கள்
9. நாடகங்கள்
10. சிறுவர் இலக்கியம்
11. கட்டுரை இலக்கியம்
12. வாழ்க்கை வரலாற்று நூல்கள்
13. நலவாழ்வு வரிசை
14. தேசிய ஒருமைப்பாட்டு நூல் வரிசை
15. தேசிய வளர்ச்சி நூல் வரிசை
16. கணித நூல்கள்
17. பள்ளிப்பாட நூல்கள்
18. சமய நூல்கள்
19. மொழி பெயர்ப்பு நூல்கள்

என்பனவாகும்.

சில சான்றுகள் மூலம் மேற்குறிப்பிட்ட வகைகள் விவரிக்கப்படுகின்றன.

## 1. அகராதிகள்

அகராதிகள் மொழி வளர்ச்சிக்குப் பெரிதும் துணைபுரிகின்றன. அகர வரிசையில் சொற்கள் கோர்க்கப்பட்டுப் பொருள் உணர்த்தப்படும். அகராதிகள் ஐரோப்பியர் தொடர்பால் ஏற்பட்டன.[15] தமிழில் தோன்றிய முதல் அகராதி வீரமாமுனிவரால் உருவாக்கப்பட்ட சதுரகராதி ஆகும். கிறித்தவ இலக்கியச் சங்கம் தமிழ்மொழியில் அகராதிக்கலை வளர்ச்சி அடைவதற்குப் பெரிதும் துணைபுரிந்துள்ளது. இச்சங்கத்தின் தொடக்க காலத்தில் வின்ஸ்லோ (1900),

பெப்ரிசியஸ் (1902), பெர்சிவல் (1902) ஆகியோரின் தமிழ்வாக்கிய அகராதிகள் வெளியிடப்பட்டுள்ளன.

எ.சி. கிளேட்டன் ஐயர் எழுதிய **வேத அகராதி** கிறித்தவ இலக்கியச் சங்கத்தால் கி.பி.1923இல் வெளியிடப்பட்டுள்ளது. 200 பக்கங்களைக் கொண்ட இவ்வகராதி விவிலியத்தில் உள்ள சொற்களுக்குப் பொருள் உணர்த்தும் முறையில் அமைந்துள்ளது.

1943இல் டி.ஏ. துரோவர் என்பவரால் எழுதப்பட்ட **தமிழ் வேதாகம ஒத்த வாக்கிய அகராதி** கிறித்தவ இலக்கியச் சங்கத்தால் வெளியிடப்பட்டது. இவ்வகராதி 1956இல் மறுபதிப்பாகவும், 1982இல் திருத்திய பதிப்பாகவும் வெளிவந்துள்ளது. இந்நூலில் விவிலியத்தைப் பயன்படுத்தும் முறை விளக்கப்பட்டுள்ளது.

இவ்வகராதியில் சுமார் 8400 பொருள்களும், பெயர்களும் 17,000 ஒத்த வாக்கியங்களும் அடங்கியுள்ளன. நமது தமிழ் மக்களின் நன்மையை அனுசரித்தே இந்த அகராதி இவ்வித நூதன முறையில் அமைக்கப்பட்டுள்ளது. ஆகவே அதிக விலையுள்ள வேறு நூல்களை வாங்க இயலாத நிலைமையுள்ளவர்க்கு இது மிகவும் ஏற்றது[16] என்ற செய்தி இந்நூலில் காணப்படுகிறது.

தமிழ்நாடு கிறித்தவ இறையியல் இலக்கியக் குழுவுக்காக 1961இல் **இறையியல் சொல் அகராதி** எனும் நூலையும் கிறித்தவ இலக்கியச் சங்கம் வெளியிட்டுள்ளது. இந்நூல் தமிழ், ஆங்கிலம் என்ற இரு மொழிகளில் வெளிவந்துள்ளது. **தமிழ் வேதாகம ஒத்த வாக்கிய அகராதியின்** இரண்டாம் பாகம் 1960, 1961, 1962ஆம் ஆண்டுகளில் வெளிவந்தது. இந்நூலை எல்.டி. பெஞ்சமின் எழுதியுள்ளார்.

**2. இலக்கண நூல்கள்**

எ.எச். ஆர்டனின் **தமிழ்மொழியின் முன்னேற்ற இலக்கணம்** என்ற நூல் முதன் முதலில் 1891இல் வெளிவந்துள்ளது. இதுவரை ஐந்து முறை மறுவெளியீடு செய்யப்பட்டுள்ளது. மேல் நாட்டவரும் தமிழ் மொழியின் அமைப்பையும், உச்சரிப்பையும் எளிதில் புரிந்துகொள்ளும் விதத்தில் இந்நூல் அமைந்துள்ளது. ஆங்கிலமும் தமிழும் கலந்த நடையில் செய்திகள் எழுதப்பட்டுள்ளன. இந்நூல் 342 பக்கங்களைக் கொண்டது.

தமிழ்மொழிக்குத் தேவையான அடிப்படை இலக்கணங்களைக் கொண்ட எ.எச்.ஆர்டனின் **பொதுத் தமிழ் முன்னேற்ற இலக்கணம்** என்ற நூலும் கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் வெளியீடுகளில் ஒன்று. இந்நூல் 1930ஆம் ஆண்டு வெளிவந்தது. இந்நூல் 1954ஆம் ஆண்டு ஐந்தாவது முறையாகப் பதிப்பிக்கப்பட்டது.

200 பக்கங்களைக் கொண்ட **தமிழ் இலக்கணச் சுருக்கம்** இரண்டு பகுதிகளாக 1936ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டுள்ளது. தமிழ் மொழியை உச்சரிக்கும் விதத்தையும் தமிழ் மொழியின் அமைப்பு முறையையும் இந்நூல் விளக்குகிறது.

**3. மொழிப்பயிற்சி நூல்கள்**

கிறித்தவ இலக்கியச் சங்கம் வெளியிட்டுள்ள மொழிப்பயிற்சி நூல்களில் சிறந்ததாக விளங்குவது **தமிழ் வாசகம்** எனும் நூலாகும். இந்நூல் சிறுவர்களுக்குத் தமிழ் போதிப்பதற்காகவே உருவாக்கப்பட்டுள்ளது. 1926இல் வெளிவந்த இந்நூல் 1973, 1977, 1980 ஆகிய ஆண்டுகளில் மறுபதிப்பாகவும் வெளியிடப்பட்டுள்ளது.

**ஐரோப்பிய பள்ளிகளுக்கான தமிழ்ப் பயிற்சி** எனும் நூல் 1933 ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டுள்ளது. பெர்ஸிசி - கார்ஸ்லாக் ஆங்கிலத்தில் எழுதிய இந்நூலை

நாராயணசுவாமி ஐயர் தமிழில் மொழிபெயர்த்துள்ளார். இந்நூலை 1966ஆம் ஆண்டில் எட்டாவது பதிப்பாகவும், 1978 ஆம் ஆண்டில் பத்தாவது பதிப்பாகவும் கிறித்தவ இலக்கியச் சங்கம் வெளியிட்டுள்ளது.

டெய்சி இராசையா எழுதிய **புதுமுறைத் தமிழ்ப் பயிற்சிகள்** என்ற நூலும் மொழிப் பயிற்சி நூலாக விளங்குகின்றது. இந்நூலின் முதல் பாகம் 1971ஆம் ஆண்டிலும் இரண்டு, மூன்று, நான்கு ஆகிய பாகங்கள் 1972ஆம் ஆண்டிலும், ஐந்தாம் பாகம் 1973ஆம் ஆண்டிலும் வெளிவந்துள்ளன.

## 4. களஞ்சியம்

கிறித்தவ இலக்கியச் சங்கம் சில கலைக்களஞ்சியங்களையும் வெளியிட்டுள்ளது. **தினப்பிரசாதக் களஞ்சியம்** என்ற நூலின் ஆசிரியர் நாகலிங்க ஞானப்பிரகாச ஐயர். இக்களஞ்சியம் 1923இல் வெளிவந்துள்ளது.

'**கிறிஸ்மஸ் களஞ்சியம்**' (1987) டிசம்பர் மாதத்தில் கொண்டாடப்படுகின்ற கிறிஸ்மஸ் விழாவுக்காக இந்நூல் வெளியிடப்பெற்றது. இந்நூலில் கவிதை, கதை, கட்டுரை, துணுக்குகள் மட்டுமின்றி, கிறிஸ்மஸ் தாத்தா, கிறிஸ்மஸ் மரம், வாழ்த்து அட்டைகள் தோன்றிய விதம் ஆகியவையும் இடம்பெற்றுள்ளன. இந்நூலின் தொகுப்பாசிரியர்கள் ஸ்வீட்லின், பிரியா, பத்மா ஆகியோராவர். இந்நூல் மூன்று பதிப்புக்களாக வெளிவந்துள்ளது.

'**சிறுவர் களஞ்சியம்**' (1990) சிறுவர்களுக்கென்றே பதிப்பித்து வெளியிடப்பட்டதாகும். இந்நூலில் சிறுவர்களுக்குப் பயன்படும் துணுக்குகள், விளையாட்டுக்கள், பொன்மொழிகள் , சிறுவர்களுக்கான கதை, கட்டுரை, கவிதை, சில கண்டுபிடிப்புகள் ஆகியவை இடம்பெற்றுள்ளன. இந்நூலின் பதிப்பாசிரியர்கள் ஸ்வீட்லின், பிரியா ஆகியோர்.

## 5. செய்யுள் இலக்கியம்

கிறித்தவ இலக்கியச் சங்கம் தொடக்கக் காலத்திலிருந்து செய்யுள் இலக்கியங்களை வெளியிட்டுள்ளது. கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் தமிழ் வெளியீட்டுத் துறையின் முதலாவது பதிப்பாசிரியராக **எச்.ஏ. கிருஷ்ணபிள்ளை** (1892-1900) பணிபுரிந்துள்ளார். இவர் கிறித்தவ இலக்கியச் சங்கத்தில் பணி செய்ய வருவதற்கு முன்னரே இவரது **இரட்சண்ய யாத்திரிகம்** (1884) எனும் நூல் கிறித்தவ இலக்கியச் சங்கத்தால் வெளியிடப்பட்டுள்ளது. மேலும், கி.பி.1898இல் **இரட்சண்ய சமய நிர்ணயம்** என்ற நூலும், கி.பி.1899இல் **இரட்சண்ய மனோகரம்** என்ற நூலும் வெளியிடப்பட்டுள்ளன.

1884இல் வெளிவந்துள்ள **இரட்சண்ய யாத்திரிகத்தின் சுருக்கம்** 1977இல் மறு வெளியீடாக வெளிவந்துள்ளது. 3800 பாட்டுக்கள் அடங்கிய இந்நூலிலிருந்து 874 பாக்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு இரட்சண்ய யாத்திரிகச் சுருக்கமாக வெளியிடப்பட்டுள்ளது. பொன்னு. ஆ. சத்தியசாட்சி இதன் சுருக்கத்தையும் குறிப்புரையையும் எழுதியுள்ளார். இந்நூல் கிருஷ்ணபிள்ளையின் 150ஆம் ஆண்டு பிறந்த நாளின்போது வெளியிடப்பட்டுள்ளது. எச்.ஏ. கிருஷ்ணபிள்ளையின் **இரட்சணிய சரிதம்** என்ற நூல் 1924ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது.

**இயேசுநாதர் சரிதை** என்ற நூலை சுவாமி சுத்தானந்த பாரதியார் எழுதியுள்ளார். இது 1926ஆம் ஆண்டு முதல் பதிப்பாகவும், 1963ஆம் ஆண்டு மறுபதிப்பாகவும் வெளியிடப்பட்டுள்ளது.

வேதநாயக சாஸ்திரியாரின் **தேவதோத்திரப் பாடல்கள்** 1957இல் வெளியிடப்பட்டுள்ளது. 1964இல் வேதநாயக சாஸ்திரியாரின் **பெத்தலேகங் குறவஞ்சி** வெளிவந்துள்ளது. இந்நூல் குறவஞ்சி இலக்கியத்தில் சிறப்பாகக் கருதப்படுகிறது.

எச்.ஏ. கிருஷ்ணபிள்ளையின் இரட்சண்ய மனோகரம் என்ற தொகுப்பு நூலில் இருந்து எடுக்கப்பட்ட பாடல்களே முக்திவழிப் பாமாலை என்னும் நூலாகும். வீ.ப.கா. சுந்தரம் எழுதிய குறிப்புரைகள் அடங்கிய இந்நூல் 1977ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது.

ஜான் மில்டனால் ஆங்கிலத்தில் இயற்றப்பட்ட சொர்க்க நீக்கம் என்னும் நூலின் முதல் இரு காண்டங்களின் தமிழாக்கமான பூங்காவனப்பிரளயம், சாமுவேல் வேதநாயகம் தாமஸ் என்பவரால் 1978இல் வெளியிடப்பட்டுள்ளது. கு.அருணாசலக்கவுண்டரும், தி. பாக்கியமுத்துவும் இதன் பதிப்பாசிரியர்கள் ஆவர்.

தி. தயானந்தன் பிரான்சிஸ் வாழ்வளிக்கும் வள்ளல் என்ற கவிதை நூலினை 1981இல் வெளியிட்டுள்ளார். இது பூக்கூடைப் பதிப்பக வெளியீடாக வந்துள்ளது. இது புதிய ஏற்பாட்டில் உள்ள யோவான் எழுதிய நற்செய்தி நூலை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்ட நூல். தயானந்தன் பிரான்சிஸின் மற்றொரு நூல் அன்பழைப்பு. இது 1981இல் வெளியிடப்பட்டுள்ளது. இது இயேசுவின் அன்புக்குத் தலைவணங்கும் ஒரு தமிழ் நெஞ்சத்தின் படப்பிடிப்பு என்கிறார் ஆசிரியர்.

ஜி.எஸ். வேதநாயகரின் அமலகுருசதகம் 1982இல் வெளிவந்துள்ளது. இதன் உரையாசிரியர் வீ.ப.கா. சுந்தரம். இது பன்னிருசீர் விருத்தப் பாக்களால் ஆனது. ஆண்டவரின் உண்மை நிலை, பாவ அறிக்கை, திருச்சபைக் கோளாறுகள் என்று பல நிலைகளையும் உள்ளடக்கிய நூறு பாடல்களைக் கொண்டது.

சுவீகரனார் எழுதிய முக்தி வழி அம்மானை என்ற செய்யுள் நூல் 1983இல் வெளிவந்துள்ளது. கு. அருணாசலக் கவுண்டர் இதன் பதிப்பாசிரியர். இந்நூல், கிறித்தவக் கோட்பாட்டையும், வழிபாட்டையும் தமிழ்ப்பண்பாட்டின் பின்னணியிலே விளக்குவதால் அது கிறித்தவ - இந்து சமய நண்பர்கள்

தங்களுக்குள் கலந்து உரையாடி ஆன்மானுபதிகளைப் பகிர்ந்துகொள்ள அடித்தளம் அமைத்துத் தருகிறது[17] என்கிறார் பதிப்பாசிரியர். இந்நூல் ஜான்பனியன் எழுதிய பில்கிரிம் பிராகிரஸ் எனும் நூலை அடிப்படையாகக் கொண்டு தமிழில் அம்மானை வடிவில் எழுதப்பட்டது.

சாமுவேல் பவுலின் மோட்சப் பிரயாணத்திலே ஆழங்கால்பட்டதால் சுவீகரனார் அதன் வசன நடையைக் கவிநடையாக மாற்றி முக்திவழி அம்மானை என்று கதைக் காப்பியமாய்ப் பாடியிருக்கிறார். உரைநடைக்குக் கவிதையின் வடிவமோ, மந்திர சக்தியோ இல்லை. கவிதைக்கு யாப்பு வடிவம் உண்டு. முக்திவழி அம்மானை யாப்பு இலக்கணத்திற்குக் கட்டுப்பட்டதாய்இருப்பதால் மர்மமான ஒரு தாளகதிக்கு உட்பட்டு மூலநூலின் உணர்ச்சி பாவங்களை எடுத்து இயம்பக்கூடிய இசை அமைதி பெற்று உயரிய உணர்ச்சிகளை எழுப்பக் கூடியதாய் இருக்கிறது. உயிரோட்டம் உள்ள துடிதுடிப்பான பழகு தமிழைச் சாதுரியமாய்ப் பயன்படுத்தி பேச்சு மொழிக்குத் தமது கவிதையில் சாகாவரம் தந்திருக்கிறார் சுவீகரனார்.

பொன்னு. ஆ. சத்தியசாட்சியின் **நெஞ்சில் சுரந்த நீரோடைகள்** *1984*இல் வெளிவந்துள்ளது. இந்நூல் பாடுபொருளாலும், வடிவத்தாலும் சிறந்து விளங்குகின்றது.

கவியரசர் மில்டனின் Paradise Lost, Paradise Regained எனும் நூல்களைத் தழுவி **ஆதிநந்தாவனப் பிரளயம், ஆதிநந்தாவன மீட்சி** என்ற நூல்களாகத் தமிழில் அ.வேதக்கண் எழுதியுள்ளார். இந்நூல் *1992*ஆம் ஆண்டில் மறுபதிப்பாக வெளிவந்துள்ளது. இவ்விரண்டு கிறித்தவக் கீர்த்தனை நாடகங்களும் தமிழ் இலக்கியத்திற்கு கிடைக்கப் பெற்ற அரும்பெரும் நூல்கள் ஆகும். இந்நூல்கள் அக்காலத்தில் கதாகாலட்சேபம் நடத்துவதற்கு ஏற்ற வண்ணம் பாடப்பட்டுள்ளன. பிறநாட்டு நல்லறிஞரான மில்டனின் நூல்களைத் தமிழில் கீர்த்தனை நாடகமாக்கி,

கதாகாலட்சேபமாகப் பாடி, தமிழகத்தின் பாமர மக்களும் மில்டனின் கதையை அறியும்படிச் செய்தார் வேதக்கண்.

அருள்திரு ஜி.எஸ்.வேதநாயகரால் எழுதப்பட்ட **சற்குரு சதகம்** இரண்டாவது பதிப்பாக 2000 ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டது. ஆண்டவராகிய இயேசு கிறித்துவின் வாழ்க்கை வரலாறு, அவருடைய உரைகள், உவமைகள் மற்றும் அவர் நிகழ்த்திய அற்புதங்கள் ஆகியவற்றை பன்னிரு சீர்களால் ஆன நூறு விருத்தங்களில் பாடி வழங்கியுள்ளார் ஆசிரியர். ஆண்டவரைப் பாவங்களைப் போக்கி புனித உள்ளத்தை அருள்பவராகக் கவிஞர் விளித்து மகிழ்கிறார். அவருடைய சொல் தேர்வுகளிலிருந்தும் நடையழகிலிருந்தும் விருத்தப்பா போன்ற பாவகைப் பாடல்களை எழுதுவதில் அவருக்கிருந்த பயிற்சியும், திறனும் நன்கு புலனாகின்றன. ஆண்டவருடைய வாழ்க்கை வரலாற்றினைப் பாவடிவில் வழங்கியுள்ள கவிஞர்களின் வரிசையில் அருள்திரு ஜி.எஸ்.வேதநாயகம் சிறப்பிடத்தைப் பெற்றுக் கொண்டுள்ளார் என்பதை இந்நூலினை ஊன்றி வாசிப்போர் அறிந்து மகிழ்வர்.

## 4. புதுக்கவிதைகள்

கிறித்தவ இலக்கியச் சங்கம் செய்யுள் இலக்கியங்களை மட்டுமின்றி புதுக்கவிதை நூல்களையும் வெளியிட்டுள்ளது.

இ. முத்துராமலிங்கத்தின் **வெளிச்சம் தேடும் விளக்குகள்** என்ற புதுக்கவிதை நூல் 1981இல் வெளிவந்துள்ளது. கலைஞர் மு. கருணாநிதியின் அணிந்துரையுடன் வெளிவந்திருக்கும் இந்நூலில் காணப்படும் கவிதைகள் பல்வேறு இதழ்களில் வெளிவந்தவை. ஆரம்பம் முதல் இறுதி வரை பல்சுவைக் கவிதைகள் இடம்பெற்றுள்ளன. சோசலிசப்பார்வைக் கவிதைகள் அதிகமாக இடம்பெற்றுள்ளன.

சக்திக்கனல் இயற்றிய நீங்கள் கேட்டவை என்னும் புதுக்கவிதை 1982இல் பூக்கூடைப் பதிப்பக வெளியீடாக வந்துள்ளது. இந்நூல் கவியரங்கம் மற்றும் இதழ்களில் வெளியான 50 கவிதைகளின் தொகுப்பு.

இயேசுவின் அற்புத உவமைப்பாடு என்ற கவிதை நூலினை நல்லைக்கவி அ.இளங்கோ எழுதியுள்ளார். இந்நூல் 1984ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. ஒரு பாதிரியின் பார்வையில் என்ற தயாவின் கவிதைத் தொகுப்பு 1986ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது.

தமிழன்பன் எழுதிய குடைராட்டினம் என்ற புதுக்கவிதை நூல் 1990ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. மயக்குறு மக்கள் என்ற இலெ. தங்கப்பாவின் கவிதை நூல் 1991ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. நெஞ்சத்தரசு எழுதிய மெழுகுவர்த்தி ஏன் அழுகிறது, தயாவின் பாதிரிப்பூக்கள் என்ற நூல்கள் 1991ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளன.

இங்குக் கோலங்கள் அலங்கோலங்கள் ஆகிற பொழுது என்ற கவிதை நூல் 1991ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. இதன் தொகுப்பாசிரியர்கள் பிளாரன்ஸ், ஸ்வீட்லின், பிரியா ஆகியோர்.

ஞா. மாணிக்கவாசகன் எழுதிய ஞான நிழல்கள் 1994ஆம் ஆண்டிலும் இலா. மோகப்பிரியன் எழுதிய கவண்கற்கள் 1995ஆம் ஆண்டிலும் வெளிவந்துள்ளன.

## 7. சிறுகதைகள்

தற்கால இலக்கியங்களில் வளர்ந்து வரும் இலக்கியப் பகுதி சிறுகதை. சிறுகதை வாழ்க்கையின் கூறுகளைப் பல கோணங்களில் காண்பதற்கும் கண்டவற்றைக் கலை வடிவில் படைப்பதற்கும் உரிய, சிறந்த இலக்கிய வகையாகும். சிறுகதைகளின் வளர்ச்சிக்கேற்பச் சிறுகதைகள் குறித்த ஆய்வுகளும்

வளர்ந்து வருகின்றன. இவ்வாய்வுகள் சிறுகதையைப் பற்றிய புதிய பார்வையைத் தருகின்றன.

கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் தொடக்கத்திற்கு முன்னால் தமிழ்நாட்டில் சென்னைச் சமயத் துண்டுப் பிரதி மற்றும் நூல்கள் சங்கம், தென்னிந்திய பாட நூல் நிறுவனம், கிறித்தவத்தாய்மொழிக் கல்விச் சங்கம் ஆகியவை பல தமிழ்ச் சிறுகதைகளை நூல் வடிவில் வெளியிட்டு வந்தன. இவை பெரும்பாலும் சிறுவர்களுக்கு ஏற்ற விதத்தில் அமைந்தவை. அவற்றுள் பல சிறுகதைகள் பிற மொழிகளில் இருந்து தமிழாக்கம் செய்யப்பட்டு வெளியிடப்பட்டுள்ளன. சான்றாக **ராபின்சன், யானையின் கதை** முதலியவற்றைக் குறிப்பிடலாம்.

கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் வெளியீடுகள் பலவும் சமய இலக்கிய வெளியீடுகளாகவே இருப்பதால் அவற்றில் விவிலியத்தில் காணப்படும் பல நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்ட சிறுகதைகள் இடம்பெறுகின்றன. எனவே அவை நூலாக வருவதற்கு வாய்ப்பில்லாமல் போகின்றன என்றாலும் அவ்வப்போது சிறுகதைத் தொகுப்பு நூல்களைக் கிறித்தவ இலக்கியச் சங்கம் வெளியிட்டு வந்துள்ளது. கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் சிறுகதை நூல் வெளியீட்டினைப் பார்க்கும்பொழுது குறைந்த அளவான சிறுகதை நூல்களையே வெளியிட்டுள்ளது.

1936இல் வெளிவந்துள்ள **தக்காணத்துப் பூர்வகதைகள்** - பாகம் ஒன்று. இது கதைத் தொகுப்பு நூல்களுள் ஒன்று. இச்சிறுகதைத் தொகுப்பினைக் கிறித்தவ இலக்கியச் சங்கம் வெளியிட்டுள்ளது. இந்நூலில் ஜவந்தியம்மாள் கதை, ராமனும் லட்சுமணனும், கற்றறிந்த கோட்டானும், அரக்கர் மாளிகை, நரியும் முதலையும் முதலிய கதைகள் அடங்கியுள்ளன. இந்நூல் 127 பக்கங்களைக் கொண்டது.

**இயேசு சொன்ன கதைகள்** 1944இல் வெளிவந்துள்ளது. இது விவிலியத்தில் உள்ள கதைகளின் தொகுப்பு நூல். இயேசுவைக் குறித்த சில சிறுகதைகள் 1945இல்

வெளிவந்துள்ளது. இந்த இரண்டு நூல்களையும் கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் ஆசிரியர் குழு வெளியிட்டுள்ளது.

தமிழ் மக்களின் எதிர்கால வாழ்க்கைக்குக் குன்றாத ஊக்கமும் உறுதியும் தேவை என்பதை வலியுறுத்தி எழுதப்பட்ட **தேசிங்கு ராஜன் கதை** 1957இல் வெளிவந்துள்ளது. இதன் ஆசிரியர் ஆர். பத்மநாபன். ந.ரா. தேவராஜனின் **சுடர்மணியும் பிற கதைகளும்** என்ற நூல் 1958இல் வெளிவந்துள்ளது. இந்நூல் 1960இல் மறுபதிப்பாக வெளியிடப்பட்டுள்ளது.

ர.சு. நல்லபெருமாள் எழுதிய **இதயம் ஆயிரம் விதம்** என்ற சிறுகதைத் தொகுப்பு 1970ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது.

1972 ஆம் ஆண்டு சோமலெ எழுதிய **ஒரு சில கதைகளும்**, 1976 ஆம் ஆண்டு தங்கமணி எழுதிய **ஒரு பூ மலர்கிறது** என்ற சிறுகதை நூலும் வெளியிடப்பட்டுள்ளன.

ஆர்.எஸ். ஜேக்கப்பின் **நூறு எடுத்துக்காட்டுக்கதைகள்** 1980 ஆம் ஆண்டு வெளிவந்துள்ளது. 1980ஆம் ஆண்டில் வெளிவந்த மற்றொரு கதைத் தொகுப்பு **இதய மலர்கள்** என்பதாகும். இந்நூலின் பதிப்பாசிரியர் எச்.பி. ராஜ்குமார். 1981ஆம் ஆண்டில் **அருளுரைக்கதைகள், நெஞ்சின் உணர்வுகள்** என்னும் இரண்டு சிறுகதைத் தொகுப்புக்கள் வெளிவந்துள்ளன. இந்நூல்களின் பதிப்பாசிரியர் எச்.பி. ராஜ்குமார்.

1981ஆம் ஆண்டில் வெளிவந்துள்ள **ஆண்டவன் படைத்த மலர்கள்** என்ற சிறுகதைத் தொகுப்பினை எச்.பி. ராஜ்குமார் பதிப்பித்துள்ளார். ஸ்வீட்லின் பிரபாகரன் எழுதியுள்ள **பிஞ்சு உள்ளங்கள்** என்ற சிறுகதைத் தொகுப்பு 1985ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. இந்நூலில் பல்வேறு இதழ்களில் வெளிவந்த பத்து சிறுகதைகளைக் கிறித்தவ இலக்கியச் சங்கத்தார் தேர்ந்தெடுத்து வெளியிட்டுள்ளனர்.

உள்ளத்தின் துடிப்புகள் என்ற சிறுகதைத் தொகுப்பு 1986ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. இதன் தொகுப்பாசிரியர்கள், ஸ்வீட்லின், பிரியா, எம்ஸி ஆகியோர் ஆவர். கார்த்திகா ராஜ்குமார் எழுதிய மனிதம் என்ற சிறுகதைத் தொகுப்பு 1987ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. டேவிட் சித்தையா எழுதிய டேவிட் சித்தையாவின் கதைகள் என்ற நூலும் 1989ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது.

ஸ்வீட்லின் பிரபாகரன் எழுதிய தண்ணீரும் இரத்தமும் என்ற சிறுகதை நூல் 1989ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டுள்ளது. கிராமங்களில் தாழ்த்தப்பட்ட இன மக்கள் கிணற்றில் தண்ணீர் இறைக்கக் கூடாது என்று ஒதுக்கி வைக்கப்பட்ட காலத்தில் தாழ்த்தப்பட்ட மக்களுக்காக உயர்குலப் பெண் ஒருத்தி போராடுவதே இந்தக் கதையின் கரு.

தி.தயானந்தன் பிரான்சிஸ் எழுதிய சிறுகதையின் தொகுப்பு டாக்டர் தயாவின் சிறுகதைகள் என்னும் நூல் 1990 ஆம் ஆண்டு வெளிவந்துள்ளது.

இச்சிறுகதைத் தொகுப்பில் அவரது 18 வயது முதல் எழுதப்பட்ட 31 சிறுகதைகள் இடம் பெற்றுள்ளன. 1950 முதல் 1989 ஆம் ஆண்டு வரை தேன்கூடு, போர்வாள், பொன்னி, காதல், சதங்கை, இமயம், சிரஞ்சீவி, முல்லை, பிரசண்டவிகடன், கலைமகள், தொடர்பு, இறையியல் மலர், பூக்கூடை, குங்குமச்சிமிழ் ஆகிய இதழ்களில் எழுதப்பட்ட கதைகளின் தொகுப்பே இந்நூல். வில்லவன் என்னும் புனைபெயரில் எழுதிய 20 சிறுகதைகளும், தயானந்தன் என்னும் பெயரில் எழுதிய ஒரு கதையும், பரிவின்பன் என்னும் புனைபெயரில் எழுதிய இரண்டு கதைகளும், தழலன் என்னும் பெயரில் எழுதிய நான்கு சிறுகதைகளும், இயற்பெயரில் எழுதிய நான்கு சிறுகதைகளும் இத்தொகுப்பில் இடம் பெற்றுள்ளன.

தயாவின் சிறுகதைகளில் சமூகப் பார்வையே அதிகமாகக் காணப்படுகின்றது. அவலம், ஏழ்மை, ஆண் பெண் உறவு நிலை, சாதி வேறுபாடு,

சமூகத்தின் இரு பக்கங்கள், மனிதர்களின் போலித்தன்மை, மனிதர்களின் நற்பண்பை வெளிப்படுத்துதல் முதலிய கருத்துகளின் அடிப்படையில் பகுக்கலாம்.

**மனக்கதவுகள்** என்று சிறுகதைத் தொகுப்பு 1991ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. இதன் தொகுப்பாசிரியர்கள் ஸ்வீட்லின், பிரியா ஆகியோர். 1992ஆம் ஆண்டில் **பனியைத்துரத்தும் சூரியன்** என்ற சிறுகதை நூலும் வெளிவந்துள்ளது. இதன் ஆசிரியர் இன்பவாணன்.

ரா. ராஜதுரை எழுதிய **மென்மலர்** என்ற சிறுகதை நூலும் பிரியா ஜெயசீலன் எழுதிய **அன்புக்கா** என்ற சிறுகதை நூலும் 1993ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளன. ஸ்வீட்லின் பிரபாகரன் எழுதிய **அர்பணிக்கிறேன்** என்ற கதைத்தொகுப்பு 1993ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. 137 பக்கங்களைக் கொண்ட இந்நூலில் பல்வேறு இதழ்களில் வெளிவந்த இருபத்தைந்து சிறுகதைகள் அடங்கியுள்ளன. இக்கதைத் தொகுப்பில் உள்ள கதைகள் பல்வேறு காலங்களில் பல்வேறு இதழ்களில் வெளிவந்தவை. மனிதனின் மனவியல் போராட்டம், வரதட்சணைக் கொடுமை, சகோதரத்துவம், தீமையை நன்மையினால் மேற்கொள்ளும் முறை, பிறருடன் அன்போடும், மனிதாபிமானத்தோடும் பழகும் முறை, தவிர்க்கப்பட வேண்டிய சில தீமை முறைகள், பின்பற்ற வேண்டிய பல நற்பண்புகள் ஆகியவை கதைகளின் கருக்களாக அமைந்துள்ளன.

கரந்தை பீர்முகம்மதுவின் **இன்றைய கண்ணாடியும் நாளைய முகமும்**, ஜே. ஆரிஸ் எழுதிய **பசியா? பாசமா?**, டி. செல்வராஜ் எழுதிய **டி. செல்வராஜ் கதைகள்** ஆகியன 1994ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளன.

## 8. நாவல்கள்

கிறித்தவ இலக்கியச் சங்கம் வெளியிட்டு வரும் இலக்கிய வகைகளில் நாவலும் ஒன்று. தமிழ் நாவல் இலக்கியத்திற்கு வித்திட்டவர் மாயூரம் வேதநாயகம்

பிள்ளை. வேதநாயகம் பிள்ளை எழுதிய பிரதாப முதலியார் சரித்திரம் என்ற நாவல் கி.பி.1879ஆம் ஆண்டு வெளிவந்த முதல் தமிழ்நாவல்.

1900 முதல் 1940 ஆண்டுகளுக்கு இடையே கிறித்தவ இலக்கியச் சங்கம் சில நாவல்களை வெளியிட்டது. எடுத்துக்காட்டாக சி.அருமைநாயகம் எழுதிய **என் தங்கை** திருமதி. ஜி. குமரேசன் எழுதிய **சுகிர்தமும் சுந்தரவல்லியும்** திருமதி.கிருபை சத்தியநாதன் எழுதிய **கமலா, சுகுணா** ஆகிய நாவல்களைக் குறிப்பிடலாம்.

1920ஆம் ஆண்டு கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் வெளியீடாக வந்த நாவல் **என் தங்கை** என்பதாகும். 63 பக்கங்களைக் கொண்ட இந்நாவல் 10 அதிகாரம் கொண்டது. ஒவ்வொரு அதிகாரமும் வெண்பாவுடன் ஆரம்பிக்கப்பட்டுள்ளது. நான்கு வயது சிறுமியான பகவதியின் தாய் இறந்ததால் தந்தை சிவசங்கரன் இரண்டாம் தாரமாக ஒன்பது வயதுப் பெண்ணைத் திருமணம் புரிகின்றார். பகவதி தன் சித்தியிடம் பல துன்பங்களை அனுபவித்தாள். சமூகத்திலும் ஒதுக்கி வைக்கப்பட்டாள். அவளது அண்ணன் பகவதிக்கு மறுமணம் செய்து வைக்கின்றான். **என் தங்கை** நாவலின் கதை அமைப்பு இது. இந்நாவலின் மூலம் குழந்தை மணம், சமூகத்தில் விதவைகளுக்கு இழைக்கப்படும் கொடுமை ஆகியவற்றை நாவலாசிரியர் சாடுகிறார். இறுதியில் விதவை மறுமணத்தை ஆதரித்து நாவலை முடிக்கின்றார் சி.அருமைநாயகம்.

விடுதலைக்குப் பிறகு கிறித்தவ இலக்கியச் சங்கம் எழுத்தாளர்களை ஊக்குவித்து நாவல்களை வெளியிட்டு வருகிறது. எனினும் 1965 இக்குப் பிறகுதான் நாவல் இலக்கிய வளர்ச்சியில் கிறித்தவ இலக்கியச் சங்கம் பெரிதும் ஈடுபட்டது. இதன் வாயிலாக கிறித்தவ நாவல் ஆசிரியர்களின் படைப்புகளைத் தமிழ் உலகிற்கு அறிமுகம் செய்து வருவதுடன் தமிழ் நாவல் இலக்கிய

வளர்ச்சிக்கும் சமுதாய மறுமலர்ச்சிக்கும் கிறித்தவ இலக்கியச் சங்கம் குறிப்பிடத்தக்க பணிகளைச் செய்து வந்துள்ளது.

ஜி.சி. பெடால் எழுதிய **பூக்கூடை** என்னும் நாவல் 1877ஆம் ஆண்டு வெளியாகியுள்ளது. த.பா. நித்தியானந்தம் எழுதிய **அமலா** என்ற குறுநாவல் 1947இல் வெளிவந்துள்ளது. 76 பக்கங்களைக் கொண்ட இந்நாவல் ஒரு பெண்ணின் வாழ்க்கையில் ஏற்படும் பல்வேறு மாற்றங்களை மையமாகக் கொண்டு எழுதப்பட்டுள்ளது. திருமதி. மேரி மாசில்லாமணி எழுதிய **தழைத்த மல்லிகை** என்ற நாவல் 1949-ஆம் ஆண்டு வெளிவந்துள்ளது.

ஜான்பனியன் ஆங்கிலத்தில் எழுதிய **திருப்போர்** தமிழாக்கம் செய்யப்பட்டு 1962ஆம் ஆண்டு கிறித்தவ இலக்கியச் சங்க ஆசிரியர் குழுவால் வெளியிடப்பட்டுள்ளது. சாலமன் அப்பாதுரை எழுதிய **மீகாளின் மணமகன்** என்னும் நாவல் விவிலியத்தின் சில நிகழ்வுகளைக் கொண்டு எழுதப்பெற்றது. இந்நாவல் 1963ஆம் ஆண்டு வெளிவந்துள்ளது.

ர.சு. நல்லபெருமாளின் **இதயம் ஆயிரம் விதம்** என்ற நாவல் 1970ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. 1972ஆம் ஆண்டு அவரின் மற்றொரு நாவலான **போராட்டங்கள்** வெளிவந்துள்ளது. 432 பக்கங்களைக் கொண்ட இந்த நீண்ட நாவல் நாட்டின் இன்றைய நடப்பியல் முறைகளையும் அதனையொட்டி நடைபெறும் போராட்டங்களையும் நிலைக்களனாகக் கொண்டு விளங்குகிறது.

அசோகமித்திரன் எழுதிய **தண்ணீர்** என்ற நாவல் 1973ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. 1975ஆம் ஆண்டு வெளிவந்த எம். டேவிட் சித்தையாவின் **புதிய வானம் புதிய பூமி, வெறும் சிலைகள்** என்ற இரண்டு நாவல்கள் குறிப்பிடத்தக்கவையாகும். நாகர்கோவிலுக்கு அருகில் அமைந்துள்ள புன்னைக்காடு என்னும் இடத்தில் வாழும் ஒரு கிறித்தவக் குடும்பத்தின் வாழ்க்கைப் பிரச்சினைகளை விளக்கியும் கம்யூனிச கொள்கைகளுக்குக்

கிறித்தவத்தில் ஆதரவு தேடும் வண்ணமும் அமைந்த ஐசக் அருமைராசனின் **கீறல்கள்** என்ற நாவல் 1965ஆம் ஆண்டு வெளிவந்துள்ளது.

தமிழ் நாவல் இலக்கியத்தின் தொடக்கக் கால வளர்ச்சிக்குக் காரணமானவர்களுள் ஒருவரான மாதவையாவின் ஆங்கில நாவல்களை கிறித்தவ இலக்கியச் சங்கம் மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளது. திருமதி. சரோஜினி பாக்கியமுத்துவால் மொழிபெயர்க்கப்பட்ட **கிளாரிந்தா** என்னும் வரலாற்று நாவல் 1976இல் வெளிவந்துள்ளது. குழந்தை மணம், சதி, மூடப்பழக்கம், மனிதன் மனிதனுக்குச் செய்யும் கொடுமைகள் முதலியவற்றை எடுத்துக்கூறிக் கல்வியும் விதவை மணமும், பெண்ணுக்கு விடுதலை அளிக்கும் வழிகள் என விளக்குகிறது இந்நாவல்.

டி. செல்வராஜின் **மலரும் சருகும்** என்ற நாவல் 1977இல் வெளிவந்தது. கிளர்ந்தெழும் புதிய சமூதாயத்தின் முன் பழமை நிற்க முடியாது என்னும் நோக்கில் முற்போக்குச் சிந்தனையுடன் படைக்கப்பட்டிருக்கும் நாவல் **மலரும் சருகும்**. சுரண்டும் சக்திகளுக்கு எதிராக உழைக்கும் விவசாயிகள் திரண்டெழுவதையும், அவர்களின் சமுதாய உணர்வையும், இளைய தலைமுறையினரின் எழுச்சியையும் விவரிக்கிறது இந்நாவல்.

சு. சமுத்திரம் எழுதிய **சோற்றுப்பட்டாளம்** 1979இல் வெளிவந்தது. 76 பக்கங்களைக் கொண்ட இக்குறுநாவல் ஓர் இளம் பெண் எவ்வாறு நடந்து கொள்கிறாள், எப்படி நடத்தப்படுகிறாள் என்ற இன்றைய நடைமுறையுடன் அவள் எப்படி இருக்க வேண்டும் என்ற கற்பனையையும் கலந்து படைக்கப் பட்டுள்ளது. சமுத்திரத்தின் **ஒரு கோட்டுக்கு வெளியே** 1979இல் வெளிவந்த மற்றொரு நாவலாகும். சாதிப் பிரச்சனை இந்நாவலில் சித்திரிக்கப்பட்டுள்ளது. கிராமங்களைப் பற்றிய நகரவாசிகளின் குறுகிய கண்ணோட்டத்தையும், பெண் விடுதலை பற்றியும் இந்நாவல் பேசுகிறது.

மாதவையாவின் மற்றொரு ஆங்கில நாவலான **சத்தியானந்தன்** 1979இல் சரோஜினி பாக்கியமுத்துவால் மொழிபெயர்க்கப்பட்டு வெளிவந்துள்ளது. உண்மை, அன்பு, அறிவு, ஒற்றுமை, உழைப்பு ஆகிய ஐந்து நற்பண்புகளையும் பெற்றிருப்போரே உயர்ந்தவர் ஆகலாம் என்றும் இவர்களே இறைவனின் அருளைப் பெறுவர் என்றும் இந்நாவலில் கூறப்பட்டுள்ளது. ஈழத்தின் தலைசிறந்த சிறுகதை எழுத்தாளர்களுள் ஒருவரான செ. யோகநாதனின் **கனவுகள் ஆயிரம்** என்ற குறுநாவல் 1981இல் வெளிவந்துள்ளது. ஐசக் அருமைராசனின் **கல்லறைகள்** என்ற நாவலை 1982இல் பூக்கூடைப் பதிப்பகம் வெளியிட்டது.

டி. செல்வராஜின் **மூலதனம்** என்னும் நாவல் பூக்கூடைப் பதிப்பக வெளியீடாக 1982இல் வெளிவந்துள்ளது. ஒரு மாற்றத்தை நோக்கிப் போய்க் கொண்டிருக்கும் சமுதாயத்தில் ஏற்பட்டு வரும் மாறுதல்களையும் அவலங்களையும் அவற்றின் அடியாக இச்சமுதாயம் பிறப்பித்து வரும் புதிய மனிதர்களையும் ஓரளவு இனம் காட்டுகிறது இந்நாவல். கார்த்திகா ராஜகுமாரின் **இது முதல் அத்தியாயம்** 1982இல் வெளியிடப்பட்டுள்ளது. சமுதாயத்தில் நிலவும் ஏற்றத்தாழ்வுகளையும் அதை அணுகும் முறைகளையும் புரட்சிகரமான எண்ணங்களின் மூலமே புதிய சமுதாயத்தைப் படைக்க முடியும் என்னும் கருத்தையும் இந்நாவலில் ஆசிரியர் வெளிப்படுத்துகிறார்.

பிரசாத் ரிச்சர்ட் எழுதிய நாவலான **ஒரு உள்ளம் உருகுகிறது** 1982இல் வெளிவந்துள்ளது. மன்னிப்பின் மாண்பை இந்நாவல் சிறப்பாக விளக்கிச் செல்கிறது. எச்.பி. ராஜ்குமாரின் **அன்பு மலர்கள் மணம் வீசுகின்றன** என்ற நாவல் 1982இல் பூக்கூடைப் பதிப்பக வெளியீடாக வெளிவந்துள்ளது. பிரியா ஜெயசீலன் எழுதிய **தாமதித்து வந்த அன்பு** என்ற நாவல் 1986ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. 197 பக்கங்களைக் கொண்ட இந்நாவல் வாழ்க்கையில் தவறான வழியில் சென்ற மனிதனைப்பற்றிக் கூறுகிறது. ஐசக் அருமைராசனின் **தவறான தடங்கள்** என்ற நாவல் 1989ஆம் ஆண்டு வெளி வந்துள்ளது. குடும்பத் தலைவன்

சரியில்லாமல் போனால் ஒரு குடும்பம் எவ்வாறு சீரழிந்துப் போகும் என்பதை மையமாகக் கொண்டு இந்நாவல் படைக்கப் பட்டுள்ளது.

என்.எஸ். நாதன் எழுதிய **போக்கிரி பாலு** என்ற சிறுவர் நாவல் 1990 ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. சந்திரா எழுதிய **உலகம் இனியதுதான்** என்ற நாவலும் 1990ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. வல்லிக்கண்ணன் எழுதிய **மன்னிக்கத் தெரியாதவர்** என்ற குறுநாவல் 1991ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. கே. மனுவேல் எழுதிய **இன்ப ஊற்று** என்ற நாவல் 1988ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. இந்நாவல் வாழ்க்கையில் ஏற்படும் போராட்டங்களைச் சகிக்க வேண்டும் என்ற கருத்தை மையமாகக் கொண்டு எழுதப்பட்டுள்ளது. டி. செல்வராஜ் எழுதிய **அக்கினி குண்டம்** என்ற நாவல் 1988ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. இவை மட்டுமின்றி மேலும் பல நாவல்களை இந்நிறுவனம் வெளியிட்டுள்ளது.

அரசியல் விடுதலை பெற்ற பின்னர் தோன்றிய படைப்பு இலக்கியங்கள் சமுதாய முரண்பாடுகளையும் தனிமனிதப் போக்குகளையும் உள்ள உணர்வுகளையும் பாலியல் குறியீடுகளையும் காதல் வாழ்வையும் நெறி பிறழ்ந்த ஒழுக்கங்களையும் இவை போன்ற சமுதாயச் சார்புடைய சிந்தனைகளையும் வெளிப்படுத்தி விளக்கிக் காட்டி வருகின்றன. இக்கருத்திற்கு ஏற்ப பல நாவல்களை அறிமுகப்படுத்தி சமுதாய மறுமலர்ச்சிக்கும் தமிழ் நாவல் இலக்கிய வளர்ச்சிக்கும் கிறித்தவ இலக்கியச் சங்கம் தனது பணிகளைச் செய்து வந்துள்ளது.

## 9. நாடகங்கள்

தமிழ்மொழியைப் பொறுத்தவரையில் நாடகங்கள் வளர்ந்துவரும் இலக்கியமாகவே இருக்கின்றன. கிறித்தவ இலக்கியச் சங்கம் வெளியிட்டுள்ள நாடகங்கள் பெரும்பாலும் சமயச்சார்புடையனவாகும்.

கி.பி.1938ஆம் ஆண்டு எ.சி. கிளேட்டன், டி. தங்கராஜ், ஜே. நித்தியானந்தம் ஆகியோர் படைத்த **ஜோதிக்கிரீடம்** என்ற நூல் வெளிவந்துள்ளது. **ஒரு கிறிஸ்மஸ்** நாடகம் கிரேஸ் டேனியல் என்பவரால் எழுதப்பட்டு 1948இல் வெளிவந்துள்ளது. இந்நாடகம் இயேசு பெருமானின் வாழ்க்கை வரலாற்றை உணர்த்துகிறது.

ஜாய்ராபர்ட் எழுதிய **கிறிஸ்மஸ் இனாம்** என்ற நாடகம், 1949ஆம் ஆண்டு வெளியான சிறு நாடக நூலாகும். இது 1954ஆம் ஆண்டு மறுபதிப்பாக வெளியாகியுள்ளது.

ஜே. சுந்தர்ராஜ் எழுதிய **உண்மைப்பிதா** என்ற நாடகம் 1952ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. 39 பக்கங்களைக் கொண்ட இந்நாடகம் இயேசு பெருமானின் வாழ்க்கை வரலாற்றைக் கூறும் நாடகம். டேனியல் எழுதிய **சவுலும் பவுலும்** என்ற நாடகம் 1953ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது.

எல்.சி. ரிச்சர்ட் எழுதிய **சிலுவையும் மகிமையும்** என்னும் ஈஸ்டர் நாடகமும், எஸ்.எம். பக்தவச்சலத்தின் **செல்லமும் தங்கமும்** என்ற கிராம முன்னேற்ற நாடகமும், ஆர்.எஸ். மெக்கனிக்கால் எழுதிய **அருள்விருந்து** என்ற நாடகமும் கிறித்தவ இலக்கியச் சங்கத்தால் 1953ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டுள்ளன.

ஆர்.வி. அற்புதநாதன் எழுதிய **மரணமே! உன் கூர் எங்கே** என்ற நாடகம் 1955ஆம் ஆண்டிலும், இரா. மாயாண்டி எழுதிய **சிசிலித்தீவின் மன்னன்** என்ற நாடகம் 1956ஆம் ஆண்டிலும் வெளிவந்துள்ளன.

ஏ.எச். தானியேல் அம்மையார் எழுதிய **விண்ணொளி உதயம்** என்ற நாடகமும் பவுல்ராசேந்திரன் எழுதிய **பக்தன் பவுல்** என்ற நாடகமும் 1957ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளன.

**பக்தன் பேதுரு** என்ற 66 பக்கங்களைக் கொண்ட நாடகம் 1963ஆம் ஆண்டு என்.எம். துரைசிங் என்பவரால் எழுதப்பட்டுள்ளது. **இன்பப் பயணம்** என்ற

ஆங்கில நாடகம் தார்ன்டன் வைல்டர் என்பவரால் எழுதப்பட்டு தமிழில் எல்.சி. ரிச்சர்ட் என்பவரால் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. இது 1964ஆம் ஆண்டு வெளிவந்துள்ளது. ஜாய்ஸ்பீல் என்ற அம்மையார் சில கிறித்தவ நாடகங்களை எழுதியுள்ளார். அவை, **அரசு உம்முடையதே, விடியா இருளினுள் வீழ்ச்சி, நடுத்தீர்வை** என்பனவாகும். அவை 1966ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளன.

குடும்பச்சூழல் என்ற நாடகம் 1966ஆம் ஆண்டு ஜெ. வின்சென்ட் என்பவரால் எழுதப்பட்டுள்ளது. அலுவலில் அமர்ந்துள்ள தாயும் அவள் குடும்பமும் பிள்ளைகளும் படும் பாடுகள் பற்றிய குடும்ப நாடகம். 1974ஆம் ஆண்டு தி. பாக்கியமுத்து படைத்த **வழிகாட்டி** எனும் நாடக நூல் வெளிவந்துள்ளது. இந்நாடகம் கிறித்தவ உலகத்தின் முதல் இந்தியப் பேராயராக பணியாற்றிய வேதநாயகம் சாமுவேல் அசரியாவின் வாழ்க்கை வரலாற்றை விளக்கும் நாடகமாகும். பேராயரின் வாழ்க்கையில் பல்வேறு காலக் கட்டங்களையும் அவற்றின் பல்வேறு நிகழ்ச்சிகளையும் நாடகமாக்கியுள்ளார் ஆசிரியர்.

**தாசில்தார்** என்ற நாடகம் எஸ்.பொன். இரத்தினம் என்பவரால் 1974இல் எழுதப்பட்டது. இது சமூக அநீதிகளை எதிர்க்கும் நாடகம். இந்நாடகத்தில் நகைச்சுவையும் பாடல்களும் இடம்பெற்றுள்ளன. தி. பாக்கியமுத்து எழுதிய **கிறிஸ்மஸ் புடவை, தெய்வத்திருமைந்தன்** என்ற இரண்டு நாடகங்களும் 1976ஆம் ஆண்டு வெளியிடப்பட்டுள்ளன.

தி. தயானந்தன் பிரான்சிஸ் எழுதிய **கண்கள் திறக்கின்றன** என்ற நாடகத் தொகுப்பு நூல் 1979ஆம் ஆண்டு வெளியிடப்பட்டுள்ளது. இந்நாடகத் தொகுப்பில் கண்கள் திறக்கின்றன, அப்பாவுக்கு அஞ்சலி, சந்திப்புக்கள், ஏற்றுக்கொள்கிறேன், கற்கள் என்னும் தலைப்பிலான ஐந்து நாடகங்கள் இடம்பெற்றுள்ளன. இவற்றுள் ஏற்றுக்கொள்கிறேன் தவிர பிற அனைத்தும் கிறித்தவக் கலைத் தொடர்பு நிலையத்தால் வானொலியில்

நடிக்கப்பெற்றவையாகும். இந்நூல் 1992ஆம் ஆண்டில் **டாக்டர் தயாவின் நாடகங்கள்** என்ற பெயரில் மறு வெளியீடாக வந்துள்ளது.

வரலாறு, விவிலியம், சமூகம் ஆகிய கதைக்கருக்களை அடிப்படையாகக் கொண்டு தயாவின் நாடகம் படைக்கப்பட்டுள்ளன. காட்சி அமைப்பில் நிகழ்ச்சிகளை வரிசையாகக் கூறல், பின்வெட்டுக் காட்சியின் மூலம் கூறுதல், நாடக களத்தை இரு கூறுகளாகப் பகுத்துக் கொண்டு மாறிமாறிக் கூறுதல் என மூன்று முறையினை தயா கையாண்டுள்ளார். தயாவின் நாடகங்களில் உச்சநிலை என்பது பண்பட்ட கலைஞர்களின் அறிவுக்கு விருந்தளிக்கும் வகையில் அமைந்துள்ளன. உரையாடல்கள் பாத்திரங்களின் தன்மையைப் பொருத்தும், பேசப்படும தன்மையைப் பொருத்தும் அமைந்துள்ளன. இறையியலைப் புதுமை நோக்கில் இந்நாடகங்களில் காணமுடிகின்றது. தமிழ் நாடகங்களில் உண்மை பக்தியில்லாது சடங்குகள் செய்வதைக் கண்டித்துள்ளார். சடங்குகளை விட மனித நேயமும் இறையன்பும் முக்கியம் என்பதை விளக்கியுள்ளார்.

சு. சமுத்திரம் எழுதிய **லியோ டால்ஸ்டாய்** என்ற நாடகம் 1979ஆம் ஆண்டு வெளியிடப்பட்டுள்ளது. இந்நாடகம் உருசியப் பேரறிஞரும் உலகம் புகழும் இலக்கியப் படைப்பாளருமான லியோ டால்ஸ்டாய் வாழ்க்கையைச் சித்திரிக்கும் நாடகம். இந்நாடகம் பல இடங்களில் நடிக்கப்பட்டுள்ளது. சந்திரன் டி. தேவநேசனால் எழுதப்பட்டு சரோஜினி பாக்கியமுத்துவால் தமிழாக்கம் செய்யப்பட்ட **நீதியின் முழக்கம்** என்ற நாடகம் 1980ஆம் ஆண்டு வெளிவந்துள்ளது.

1979ஆம் ஆண்டு **பகவத்தஜ்ஜூக அங்கதம்** என்ற நாடகமும் 1981ஆம் ஆண்டில் **மத்தவிலாச அங்கதம்** என்ற நாடகமும் கிறித்தவ இலக்கியச் சங்கத்தால் வெளியிடப்பட்டுள்ளன. மகேந்திரவர்ம பல்லவனால் எழுதப்பட்ட இந்நாடகங்களை பேராசிரியர் மைக்கேல் லாக்வுட் வடமொழியிலிருந்து

ஆங்கிலத்தில் மொழிபெயர்த்ததை பேராசிரியர் இ.ஜாண் ஆசீர்வாதம் தமிழாக்கம் செய்து நாடகங்களாக ஆக்கியுள்ளார்.

சந்திரன் தேவநேசன் எழுதிய **நீதியின் முழக்கம்** என்ற ஆங்கில நாடகத்தை சரோஜினி பாக்கியமுத்து தமிழில் மொழிபெயர்த்துள்ளார். இந்நூல் 1980ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது.

தி. தயானந்தன் பிரான்சிஸ் எழுதிய **தமிழகத்தில் தோமையர்** என்ற நாடகம் 1985ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. 65 பக்கங்களைக் கொண்ட இந்நாடகம் ஒரு வரலாற்று நாடகமாகும்.

எஸ். பொன்ரத்தினம் எழுதிய **அந்த நாட்களின் வரலாறு** என்ற நாடகம் 1985ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. எஸ். பொன்ரத்தினம் எழுதிய **அந்த இரண்டாம் கற்பனை** என்ற நாடகமும் இ. சௌந்தரராஜன் எழுதிய **உறங்கிவிட்ட உணர்வுகள்** என்ற நாடகமும் 1988ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளன.

## 10. சிறுவர் இலக்கியம்

கிறித்தவ இலக்கியச் சங்கம் வெளியிட்டு வரும் நூல்களில் சிறுவர் இலக்கியம் குறிப்பிடத்தக்கது. செல்வமற்ற ஏழைகளின் செல்வம் குழந்தைகளே; உலகத்தின் திறவுகோல் குழந்தைகளே[18] என்று குழந்தைச் செல்வத்தின் மேன்மை குறிக்கப்படுகின்றது. இத்தகுச் சிறப்புமிக்க குழந்தைகளை வீரம், நீதி, வாய்மை, நாட்டுப்பற்று, இறைப்பற்று முதலிய அறநெறி ஒழுக்கங்களில் வளர்க்க வேண்டியது அவசியமானதாகும். இவ்விதப் பண்பு நலன்களைப் பண்டைக்காலம் முதல் நம் முன்னோர்களும், தாய்மார்களும், கதைகளாகவும், பாடல்களாகவும் போதித்து வந்தனர். வாய்மொழியாகப் பல்லாண்டு காலம் வழங்கப்பட்டு வந்த இக்கதைகளும் பாடல்களும் 21வது நூற்றாண்டில் தரமாக வளர்ந்து வருகின்றன. குழந்தைகள் பெரும்பாலும் தங்களையும் தங்களின் அன்றாட வாழ்க்கை

நிகழ்ச்சிகளையும் முன்னிலைப்படுத்தி அமைக்கப்படும் இலக்கியங்களை ஆர்வமாகப் படிக்கின்றனர்.

குழந்தையாக இருக்கும்போதே நல்ல பழக்கவழக்கங்களைப் புகட்டிவிடுதல் நல்லது என்ற நிலையைத்தான் 'ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையாது' என்னும் ஒரு முதுமொழி குறிப்பிடுகின்றது. இந்த முறையில் ஒருவருக்கு அறிவுரை கூற வேண்டுமானால் அவர் மனம் மகிழ முன்னிலைப்படுத்தி அதன் பின்னரே கூற வந்த அறிவுரையை அவர் மனம் கொள்ளும்படி குறிப்பிட வேண்டும்.[19] இக்கருத்தினைக் கருத்தில்கொண்டு கிறித்தவ இலக்கியச் சங்கம் தனது சிறுவர் இலக்கிய வெளியீடுகளை வெளியிட்டுள்ளது.

கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் தொடக்கக் காலத்தில் சிறுவர் வெளியீடுகள் அதிகமாக வெளிவரவில்லை. வெளிவந்த சில சிறுவர் வெளியீடுகளும் சமயச் சார்புடையனவாகவே அமைந்துள்ளன. இருபதாம் நூற்றாண்டில் சிறுவர் வெளியீடுகளில் பாடத்தை அல்லது கருத்தைவிடப் படங்களுக்கு அதிக முக்கியத்துவம் அளித்துள்ளார். இவை அதிகமான பக்கங்களைக் கொண்டதாக அமைந்துள்ளன. இவற்றில் காணப்படும் படங்கள் பெரியதாகவும் அழகாகவும் காணப்படுகின்றன.

ஆரம்பகாலக் கதை நூல்களான ராபின்சன் குருசோ, யானையின் கதை, சித்திரவாசகம், சித்திரவிஞ்ஞானம் முதலிய நூல்களையும் சிறுவர் வெளியீடுகளில் அடக்கலாம்.

1918இல் வெளியான ஜி.இ. காண்ட்லர் எழுதிய சிறுவர் சிங்காரவனம் 1936இல் வெளிவந்த தக்காணத்துப் பூர்வ கதைகள் முதலியனவும் சிறுவர்களுக்காக வெளியானவையாகும். கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் சிறுவர் வெளியீடுகளில் சிறப்பாக அமைந்துள்ள நூற்கள் சில பின்வருமாறு அமைகின்றன. அவை, பவுலின் சரிதை (1949), மேய்ப்பர் கேட்ட பாடல் (1956), இராஜநட்சத்திரம் (1981), இயேசுவின்

இளமைப்பருவம் *(1961)*, மோட்சப்பிரயாணம் சிறுவர் பதிப்பு *(1962)*, சவுலும் பவுலும் *(1954)*, சுடர்மணியும் பிற கதைகளும் *(1955)*, தேசிங்குராஜன் கதை *(1957)*, எலிசபெத் பிளாக்வெல் *(1958)* முதலியனவாகும்.

யோசேப்பின் வரலாறு, சாமுவேல் வரலாறு, இயேசு கேட்கிறார் எனும் இந்த மூன்று கதைகளும் *1969*இல் வெளிவந்துள்ளன.

மேலும் வள்ளியும் தோழரும் என்ற நூலினை பிரேமலதாவும், மோகனின் தோழர்கள் என்ற நூலினை மேரிடேவிட்டும், டெர்லின் ஷர்ட் என்ற நூலினை ஜஸ்டின்ராஜ் என்பவரும், மணிகட்டியாது யார் என்ற நூலினை டி.வி. ஜானும் எழுதியுள்ளார்கள். இந்த நான்கு நூற்களும் *1970*ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளன.

*1980*ஆம் ஆண்டில் அரும்புகள் என்ற சிறுகதை நூல் வெளிவந்துள்ளது. இதில் பத்து சிறுகதைகளைப் பதினாறு வயதுக்குட்பட்ட சிறுவர் சிறுமியர்கள் படைத்துள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது. *1981*ஆம் ஆண்டில் வெளிவந்த ஆண்டவன் படைத்த மலர்கள் என்ற சிறுகதை நூலில் பத்து சிறுகதைகள் இடம்பெற்றுள்ளன. *1980, 1981*ஆம் ஆண்டில் வெளிவந்த சிறுகதைத் தொகுப்புகள் இரண்டும் அகில உலகக் குழந்தைகள் ஆண்டை முன்னிட்டுக் கிறித்தவ இலக்கியச் சங்கம் நடத்திய சிறுவர் சிறுமியருக்கான சிறுகதைப் போட்டியின் தொகுப்பாகும். இப்போட்டி தமிழகத்தின் பல மாவட்டங்களிலும் நடத்தப்பட்டு அதிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட கதைகளை நூலாக்கியுள்ளனர்.

திருச்சி வாசுதேவனின் பாலர் பாடல்கள் என்ற நூல் *1982*இல் வெளிவந்துள்ளது. இந்நூலில் மகிழம்பூ, பாரதியார், பாரதிதாசன், செந்தமிழ், கோலாட்டம், பலாப்பழம், கோழிக்குஞ்சு, பொம்மை ஏற்றம் முதலிய பல்வேறு பாடல்களும் குழந்தைகளின் நெஞ்சை அள்ளுவதாக அமைந்துள்ளன. *1983*இல் தங்கப்பா எழுதிய மழலைப் பூக்கள் என்னும் பாடல் தொகுப்பு வெளியிடப்

பட்டுள்ளது. **தீரன் செம்புலிங்கம்** என்னும் கதை நூல் சிறுவர் பதிப்பாக 1983இல் வெளிவந்துள்ளது.

1998ஆம் ஆண்டு ஸ்வீட்லின் பிரபாகரன் எழுதிய **மிக்கிமௌஸ் சொன்ன பைபிள் கதைகள்** என்ற நூல் வெளிவந்துள்ளது. இந்நூல் விவிலியத்தில் வரும் கதை மாந்தர்களை எளிமையாகவும் நகைச்சுவையாகவும் குழந்தைகளுக்கு எடுத்துரைக்கின்றது.

கிறித்தவ இலக்கியச் சங்கம் தமிழ் இலக்கியம் வளர்ச்சி அடையச் செய்து வரும் பணிகளுள் குறிப்பிடத்தக்கதாக அமைவது இந்நிறுவனம் நடத்திவரும் போட்டிகள் ஆகும். சிறுவர்களுக்கான கதைப்போட்டி, பாடல் போட்டி ஆகியவற்றை இச்சங்கம் பூக்கூடை இதழ் மூலமாகவும், நேரடியாகவும் நடத்திப் பரிசு அளித்து வருகிறது. தேர்ந்தெடுக்கப்பட்ட கதைகளை நூலாகவும் வெளியிட்டு வந்துள்ளது.

அகில உலகக் குழந்தைகள் ஆண்டை முன்னிட்டு கிறித்தவ இலக்கியச் சங்கம் பதினொரு வயதுக்கு உட்பட்ட சிறுவர் சிறுமியருக்காக நடத்திய எழுத்துப் போட்டியில் பரிசு பெற்ற எழுத்தோவியங்களின் தொகுப்பு அரும்பு (1980) என்னும் நூலாக வெளிவந்துள்ளது. சிறுவர்களின் எழுத்தாற்றலையும் அறிவையும் வளர்க்கும் நோக்கத்துடன் நடத்தப்பட்ட போட்டியினைக் கொண்டு இந்நூல் தயாரிக்கப்பட்டது. இவ்விதப் போட்டிகள் நடத்துவதின் மூலம் குழந்தைகளின் எண்ணம் அதை ஒட்டிய வெளிப்பாடுகள், அறிவாற்றல், எழுத்தாற்றல் ஆகியவற்றை ஊக்குவிக்க முடியும். இவ்வித உயர்ந்த நோக்கத்தோடு கிறித்தவ இலக்கியச் சங்கம் தமிழ்ப்பணி செய்து வருகின்றது.

சிறுவர் இலக்கிய வெளியீடுகள் அழகுறவும் பிழையறவும் அச்சிடப்பட வேண்டியது மிகவும் அவசியம். அச்சில் வெளிவருபவற்றை நம்புகின்ற இயல்பு சிறுவர்களுக்கு உண்டு. ஆகையால் அச்சுப்பிழை என்பது குழந்தைகளுக்கான

வெளியீட்டில் இருப்பது வருங்காலத்தில் நமது இலக்கியத்திற்கே முற்றுப் புள்ளி வைத்து விடக்கூடும்.[20] இதனைக் கருத்தில் கொண்டு கிறித்தவ இலக்கியச் சங்கம் தனது சிறுவர் வெளியீடுகளைச் சிறந்த முறையில் அச்சிட்டு வெளியிடுகின்றது.

## 11. கட்டுரை இலக்கியம்

கிறித்தவ இலக்கியச் சங்கம் வெளியிட்டு வரும் பல்வேறு நூல் வகைகளில் கட்டுரையும் ஒன்று. கட்டுரை என்பது ஏதேனும் ஒரு குறிப்பிட்ட பொருளைப் பற்றிய கலைப் படைப்பாகும். கட்டுரையாளர் தாம் தேர்ந்த பொருள் குறித்துத் தமக்கே உரிய மனப்போக்கிலும் கொள்கை நோக்கிலும் அப்பொருளை விளக்கிடச் செய்யும் முயற்சியினால் பிறப்பதே கட்டுரையாகும். கிறித்தவ இலக்கியச் சங்கம் வெளியிட்டுள்ள கட்டுரை நூல்கள் பின்வருமாறு அமைகின்றன.

ஜான்பனியன் ஆங்கிலத்தில் எழுதிய **மோட்சப்பிரயாணம்** 1924இல் வெளியிடப்பட்டது. இதனை மொழிபெயர்த்தவர் ராஜா சூடாமணி. 1951ஆம் ஆண்டில் சங்கை சா. பவுல் ஐயர் **மோட்சப்பிரயாணம்** நூலை மொழிபெயர்த்துள்ளார். இந்நூல் 1961இல் மறு பதிப்பாக வெளியிடப்பட்டுள்ளது.

**பிள்ளைத்தன்மை ஆராய்ச்சி** என்ற நூல் 1939ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. இதன் ஆசிரியர் சான்டலர். குழந்தைகளின் மனோபாவத்தை ஆராய்வதாக இந்நூல் அமைகிறது.

**நம் நாட்டுச் சமயங்கள்** என்ற நூல் 1965ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. இந்நூலினை ஆல்பர்ட் மனுவேல் பதிப்பித்துள்ளார். இந்தியாவில் உள்ள சமயங்களை அறிந்துகொள்ள இந்நூல் உதவுகிறது.

**கண்ணீரில் பூத்த கமலங்கள்** என்ற நூலினை கலைப்பித்தன் எழுதியுள்ளார். இந்நூல் 1968ஆம் ஆண்டு வெளிவந்துள்ளது.

மருத்துவக்கலை அன்றும் இன்றும் என்ற நூலினை ரா. ராஜதுரை எழுதியுள்ளார். இந்நூல் 1969ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது.

இந்தியாவில் தற்கால சமய இயக்கங்கள் என்ற நூல் 1971இல் வெளிவந்துள்ளது. இந்நூலினை ஞான இராபின்சன் பதிப்பித்துள்ளார். ஜெயகாந்தனின் நினைத்துப்பார்க்கிறேன் என்ற நூல் 1973ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது.

இக்கால கிறித்தவத் தமிழ் இலக்கியம் என்ற நூலினை இர. ஆரோக்கியசாமி எழுதியுள்ளார். இந்நூல் 1983ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. இந்நூல் கிறித்தவத் தமிழ் இலக்கிய நூல்களைப் பட்டியல் போட்டுக் காட்டுகிறது.

என் நினைவுகளில் பாவேந்தர் என்ற நூலினை த. கோவேந்தன் எழுதியுள்ளார். பூக்கூடைப் பதிப்பாக இந்நூல் 1983ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது.

கிறித்தவ அருட்கவிஞர்கள் என்ற நூலினை தி. தயானந்தன் பிரான்சிஸ் எழுதியுள்ளார். இந்நூல் 1984ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. கிறித்தவக் கவிஞர்களைப் பற்றி இந்நூல் விவரிக்கின்றது.

கிரேஸ் செல்வராஜ் எழுதிய வளரும் கிறித்தவத்தில் மலரும் தமிழ் என்ற கட்டுரை நூல் 1985ல் வெளியிடப்பட்டுள்ளது. கவிதை, நாவல், நாடகம் பற்றிய திறனாய்வுகளைக் கொண்ட நூல் இது. மேலும் இவ்வாசிரியரால் எழுதப்பட்ட முல்லை சிரித்தது என்ற இலக்கியக் கட்டுரை நூல் 1986ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. ஜாண் ஆசீர்வாதம் எழுதிய தமிழ் இலக்கியத்தில் அறிவியல் என்ற நூல் 1986ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. மேலும், இவர் தமிழிலக்கியத்தில் மனையியல் என்ற நூலினையும் எழுதியுள்ளார். இந்நூல் 1991ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. கிறித்தவத் தமிழ் நாடகங்கள் என்ற நூலினை

பெ. கோவிந்தசாமி எழுதியுள்ளார். இந்நூல் 1992ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. இதுவரை தமிழில் வெளிவந்துள்ள கிறித்தவத் தமிழ் நாடகங்கள் பற்றிய ஆய்வு நூலாக இது அமைகிறது.

**தி.க.சி.யின் திறனாய்வுகள்** என்ற நூலை தி.க. சிவசங்கரன் எழுதியுள்ளார். இந்நூல் 1993-ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. பி.வி.கிரி எழுதிய **இக்கால இலக்கியப் படைப்பாளர்கள்** என்ற நூல் 1994ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. டி.எஸ். ரவீந்திரதாஸ் எழுதிய **தமிழ்த்திரையின் திசைகாட்டிகள்** என்ற நூல் 1995ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. நெல்லை சு.முத்துவினால் எழுதப்பட்ட **கவிதையின் பரிமாணங்கள்** என்ற நூல் 1997ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. விந்தன் கட்டுரைகளை மு. பரமசிவம் தொகுத்து வெளியிட்டார். இந்நூல் 1998ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது.

**டாக்டர் தயாவின் இலக்கியப் பார்வைகள்** என்ற நூல் 2000 ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. விரிவான திறனாய்வுக் கட்டுரைகள் இந்நூலில் தொகுக்கப்பட்டுள்ளன. நாரண.துரைகண்ணன், க.நா.சு., கோவேந்தன், சாலை இளந்திரையன், ஆர்.எஸ்.ஜேக்கப், ஸ்வீட்லின் பிரபாகரன், மாணிக்கவாசகன், டி.செல்வராஜ், சித்தார்த்தன், நிலவன் முதலியோர் படைப்புகளைப் பற்றி படைப்புகளின் சிறப்பு வெளிப்படும் வகையில் தயா எழுதியுள்ளார்.

**கிறித்தவத் தமிழ் இலக்கியம் : சில செய்திகள்** எனும் நூலை தி.தயானந்தன் பிரான்சிஸ் எழுதியுள்ளார். இந்நூல் 2000 ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. கிறித்தவத் தமிழ் இலக்கியம் தொடர்பான 32 கட்டுரைகளின் தொகுப்பு நூலாக இது விளங்குகின்றது. இந்நூலில் சீகன் பால்கு எழுதிய பாடல்கள் இடம்பெற்றுள்ளது மிகவும் குறிப்பிடத்தக்கதாகும். மேலும், கிறித்தவச் சிற்றிலக்கியம், காப்பியம், புத்தெழுச்சிப் பாடல்கள், இறையியல் இலக்கியம் ஆகியவற்றை ஆராய்ந்து எழுதியுள்ளார்.

## 12. வாழ்க்கை வரலாற்று நூல்கள்

கிறித்தவ இலக்கியச் சங்கம் பல்வேறு அறிஞர்களின் வாழ்க்கை வரலாற்றினை நூலாக வெளியிட்டுள்ளது. இந்நூல்களின் மூலம் அறிஞர்களின் வாழ்க்கை வரலாற்றினை அறிந்துகொள்ள முடிகிறது.

ஜெ. பீட்டர் எழுதிய மார்ட்டின் லூதரின் சரித்திரம் 1909ஆம் ஆண்டு கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் வெளியீடாக வெளிவந்துள்ளது. ஜப்பானியப் பெரியார் தொயோசிக்கோ வாழ்க்கை வரலாற்றினை எச்.ஜெ. சாட்டர் எழுதியுள்ளார். இந்நூல் 1943ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. இந்நூல் 1948, 1954ஆம் ஆண்டுகளில் மறுபதிப்பாக வெளிவந்துள்ளது.

தஞ்சை வேதநாயக சாஸ்திரியாரின் வாழ்க்கை வரலாற்றினை தேவநேசன் எழுதியுள்ளார். இந்நூல் 1952 ஆம் ஆண்டில் வெறிவந்துள்ளது. ரேனியஸ் துரையப்பா பரிசுத்த தோமா என்ற தோமாவின் வாழ்க்கை வரலாற்றினை எழுதியுள்ளார்.

பில்லிகிரகாம் வாழ்க்கை வரலாற்றினை தா. கோயில்பிச்சை எழுதியுள்ளார். இந்நூல் 1954ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. மேலும், பில்லிகிரகாம் வாழ்க்கையினை 1977ஆம் ஆண்டில் எச்.பி. ராஜ்குமார் எழுதியுள்ளார்.

வெற்றி வீரன் தேசிங்கு ராஜன் வாழ்க்கை வரலாற்றினை ர. பத்மநாபன் எழுதியுள்ளார். இந்நூல் 1960ஆம் ஆண்டில் வெளி வந்துள்ளது. பண்டிதை ரமாபாய் வாழ்க்கை வரலாற்றினை எலிசபெத் சொர்ணம் அப்பாசாமி எழுதியுள்ளார். இந்நூல் 1962ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது.

எஸ். பரமானந்தம் வாழ்க்கை வரலாற்றினை கிறித்தவ இலக்கியச் சங்கக் குழு எழுதி 1966ஆம் ஆண்டில் வெளியிட்டது. விந்தன் வாழ்க்கை வரலாற்றினை மக்கள்

எழுத்தாளர் விந்தன் என்ற தலைப்பில் மு. பரமசிவம் எழுதியுள்ளார். இந்நூல் பூக்கூடை வெளியீடாக 1983ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது.

தீரன் செம்புலிங்கம் வாழ்க்கை வரலாற்றினை ஜெஸ்டின் பால்ராஜ் எழுதியுள்ளார். இந்நூல் 1983ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. கவிஞர் தமிழ்ஒளியின் வாழ்க்கை வரலாற்றினை மு. பரமசிவம் எழுதியுள்ளார். இந்நூல் 1987ஆம் ஆண்டில் எழுதப்பட்டுள்ளது.

நாரண துரைகண்ணன் வாழ்க்கை வரலாற்றினை மு. பரமசிவமும், தமிழ்த் தென்றல் திரு.வி.க.வின் நெஞ்சம் என்ற நூலினை மா. சேசையாவும் எழுதியுள்ளார். இந்த இரண்டு நூற்களும் 1989ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளன.

இந்தியாவின் விடிவெள்ளி சீகன்பால்கு என்ற நூலை எஸ். லாரன்ஸ், டி.அருள்தாஸ் ஆகியோர் எழுதியுள்ளார்கள். இந்நூல் 1990ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது.

எழுத்துச் செல்வர் வல்லிக் கண்ணன் என்ற நூலை மு. பரமசிவம் எழுதியுள்ளார். இந்நூல் 1991ஆம் ஆண்டு வெளிவந்துள்ளது. வல்லிக்கண்ணனிடம் ஆழ்ந்த பற்றும் மிகுந்த மதிப்பும் கொண்டவர். ஆதலால் அவரைப் பலமுறை அணுகி உரையாடல்களின் வழியே அரிய பல குறிப்புகளைத் திரட்டி இந்நூலில் வழங்குகிறார் பரமசிவம். ஓர் எழுத்தாளர் வாழ்க்கையில் வாசகர்களுக்கு அதிகமாகத் தெரியாமல் இருக்கக்கூடிய சில உண்மைகளைக் கண்டறிந்து கொள்வதற்கு எழுத்தாளர்களுக்கும், திறனாய்வாளர்களுக்கும் இந்நூல் பல வாய்ப்புகளைத் தருகிறது.

விசுவாசத்தினாலே மார்ட்டின் லூதர் என்ற நூலை தயானந்தன் பிரான்சிஸ் எழுதியுள்ளார். இந்நூல் 1991ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. எழுத்தாளர் கு.அழகிரிசாமியின் வாழ்க்கை வரலாற்றினை மு. பரமசிவம் எழுதியுள்ளார். இந்நூல்

1997இல் வெளிவந்துள்ளது. பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் வாழ்க்கை வரலாற்றினை ச. செந்தில்நாதன் எழுதியுள்ளார். இந்நூல் 1998ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது.

எஸ்.ஜி.தானியேல் எழுதிய சாமுவேல் பவுலின் வாழ்க்கை வரலாறு 1999ஆம் ஆண்டு வெளியிடப்பட்டுள்ளது. இந்நூலாசிரியர் சாமுவேல் பவுலின் மருமகன். கிறித்தவ இலக்கியத்தில் பல்வேறு துறைகளில் தம்முடைய தனி ஆற்றலை வெளிப்படுத்திய சாமுவேல் பவுலுக்கு அக்கால ஆங்கில அரசு ராவ் சாகிப் பட்டத்தை வழங்கியது குறிப்பிடத்தக்கது.

## 13. நலவாழ்வு வரிசை

கிறித்தவ இலக்கியச் சங்கம் நலவாழ்வு வரிசை என்ற தலைப்பின் கீழ் நூல்களை வெளியிட்டு வந்துள்ளது. இந்நூல்கள் அனைத்தும் அனைத்துப் பிரிவினருக்கும் பயன்படும் வகையில் அமைந்துள்ளன.

சொல் புதிது பொருள் புதிது என்ற பாரதியின் கூற்றுக்கு ஏற்ப, புதுமையான பொருள் கொண்ட நூல்களை வெளியிடுவதிலும் கிறித்தவ இலக்கியச் சங்கத்தார் தொடக்கக் காலம் முதல் ஆர்வம் காட்டி வருகின்றனர். கிறித்தவ இலக்கியச் சங்கம், சமுதாய நலனை முன்னிட்டுப் பல பொதுவான நூல்களை வெளியிட்டுள்ளது.

பிரசவ நேரத்தில் தாய்க்கு முதல் சிகிச்சை என்ற நூல் 1930ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. இந்நூலினைக் கேம்பல் எழுதியுள்ளார். பால்யபருவ சுகாதார விளக்கம் என்ற நூலை ஜாப் எழுதியுள்ளார். இந்நூல் 1936ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது.

இந்தியாவில் பைத்தியக்காரரை வீடுகளில் கவனிக்கும் முறை என்ற நூலை பேக்கின்ஹம் வால்ஷ் எழுதியுள்ளார். இந்நூல் 1942ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது.

1946ஆம் ஆண்டில் திருமதி. அசரியா வயதுக்கு வந்த கிறித்தவ வாலிபப் பெண்ணுக்குச் சமயோசித நற்போதனை, விவாகம் செய்துகொள்ளப் போகும் கிறித்தவப் பெண்ணுக்குச் சமயோசித நற்போதனை, தாய்மார் ஆகப் போகிறவர்களுக்குச் சமயோசித நற்போதனை என்ற மூன்று நூல்களை எழுதியுள்ளார்.

ரா. ராஜதுரை எழுதிய மணமகனுக்கு மணவாழ்க்கைக்கலை என்ற நூல் 1971ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. உடல் பருமன் காரணங்களும் தவிர்க்கும் வழிகளும் என்ற நூலினைச் சுசிகரன் தங்கசாமி எழுதியுள்ளார். இந்நூல் 1978ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது.

1980ஆம் ஆண்டில் வெளிவந்துள்ள சாதாரண வியாதிகளுக்குச் சிகிச்சை என்ற நூலினை கிறித்தவ இலக்கியச் சங்கம் வெளியிட்டுள்ளது. மக்கள் மருத்துவம் என்ற நூல் 1988ஆம் ஆண்டு கிறித்தவ இலக்கியச் சங்கத்தால் வெளியிடப்பட்டுள்ளது. இந்நூலை சந்திரா ஆசீர்வாதம், லீலாவதி லுத்தர் ஆகியோர் எழுதியுள்ளார்கள். மருத்துவத்தின் தேவையும் மக்களின் நலனையும் மையமாகக் கொண்டு இந்நூல் எழுதப்பட்டுள்ளது.

## 14. தேசிய ஒருமைப்பாட்டு நூல் வரிசை

இந்தியாவில் உள்ள மாநிலங்களைப் பற்றி வாசகர்கள் அறிந்துகொள்ள தேசிய ஒருமைப்பாட்டு நூல் வரிசை என்ற தலைப்பில் நூல்களைக் கிறித்தவ இலக்கியச் சங்கம் வெளியிட்டுள்ளது. இவ்வரிசை நூல்கள் அனைத்தும் சரஸ்வதி ராம் என்பவரால் எழுதப்பட்டுள்ளன.

முதன்முதலாக 1976ஆம் ஆண்டு கர்நாடக மாநிலம் என்ற நூல் வெளிவந்துள்ளது. அதைத் தொடர்ந்து கேரள மாநிலம் (1977), ஆந்திர மாநிலம் (1978), தமிழ்நாடு மாநிலம் (1978), மகாராஷ்டிரா மாநிலம் (1979), ஒரிசா (1979) என

ஆறு நூல்கள் இவ்வரிசையில் வந்துள்ளன. 1979 ஆண்டிற்குப் பிறகு தேசிய ஒருமைப்பாட்டு நூல் வரிசையில் நூல்கள் வெளிவரவில்லை.

தேசிய ஒருமைப்பாட்டு நூல்களின் உதவியால் ஒவ்வொரு மாநிலத்தின் இயற்கை அமைப்பு, இருப்பிடச் சிறப்பு, மக்கள், மொழியும் இலக்கியமும், அரசியல் வரலாறு, விளை பொருட்கள், ஆலயங்கள், சுற்றுலாத் தலங்கள், கலைச் செல்வங்கள், சமயமும் பண்பாடும் முதலிய செய்திகளைத் தெரிந்துகொள்ள முடிகின்றது. பரந்த பாரத நாட்டின் பல்வேறு இயற்கைவளம், பூவியியல் அமைப்புகள், மலைகள், நதிகள், நீரோடைகள் இவற்றின் சிறப்புகளைத் தமிழ் மொழியின் வாயிலாக சிறுவர்கள் உட்பட அனைவரும் தெரிந்துகொள்ள தேசிய ஒருமைப்பாட்டு நூல்கள் துணை செய்கின்றன.

## 15. தேசிய வளர்ச்சி நூல் வரிசை

தேசிய வளர்ச்சி நூல் வரிசையில் இடம்பெறும் நூல்கள் பெரும்பாலும் இளைஞருக்குப் பயன் உள்ளவையாக அமைந்துள்ளன.

ஏ.டி. ஜெகராஜ் எழுதிய கிராமக்கூட்டுறவு நாணயச் சங்கங்களின் துணைவன் என்ற நூல் 1956ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. இந்நூல் கிராம மக்களின் கூட்டுறவுத் தேவைகளை நிவர்த்தி செய்யும் வகையில் எழுதப்பட்டுள்ளது.

தொழிற்சங்கங்கள், ஓய்வும் ஓய்வு நேரமும், திருச்சபையும் தொழிற்சங்கங்களும் என்ற மூன்று நூலும் 1967ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளன.

எம்.ஏபல் ஆங்கிலத்தில் எழுதிய இந்திய அரசும் அரசியலும் என்ற நூல் 1971ஆம் ஆண்டு தமிழ் மொழியில் மொழிபெயர்க்கப்பட்டு வெளியிடப் பட்டுள்ளது. இந்நூலை தி. பாக்கியமுத்து மொழிபெயர்த்துள்ளார். வேற்றுமையில் ஒற்றுமை, ஜனநாயக அரசாங்கத்தின் தேவைகள், அரசியல் அமைப்புச் சட்டம், சமயச் சார்பற்ற ஜனநாயகம், ஜனநாயக நிறுவனங்கள், தேர்தலும் கட்சிகளும்,

ஜனநாயக அடித்தளங்கள், நமது ஜனநாயகமும் உலகமும் ஆகிய எட்டுத் தலைப்புகளின் கீழ் அமைந்துள்ளன. இந்நூலின் மூலம் இந்திய அரசையும் அரசியலையும் எளிதில் விளங்கிக் கொள்ள முடிகிறது.

எஸ்.ஆர்.என். சத்யா எழுதிய **வறுமையும் வேலை இல்லாத் திண்டாட்டமும்** 1982ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. இந்நூலில் ஏகாதிபத்தியத்தின் விளைவால் ஏற்பட்ட வளர்ச்சி குன்றிய மூலதன உருவாக்கம், பண வீக்கமும் விளைவுகளும், வேலையில்லாத் திண்டாட்டம், வறுமை நிலை ஆகியவை ஆராயப்பட்டுள்ளன.

1982இல் **கிராமங்களும் வளர்ச்சித் திட்டங்களும்** என்ற நூல் வெளிவந்துள்ளது. இந்நூலை எழுதியவர் எஸ்.ஆர்.என். சத்யா. கிராமங்களின் தோற்றம், கிராம அரசியல் அமைப்பு, எஜமானிய ஏற்பாடும் ஜாதிக் கட்டமைப்பும், கிராமத்திருவிழாக்கள், விவசாய அமைப்பு, கிராமத் தொழில் அமைப்பு, வளர்ச்சித் திட்டங்கள், நமது திட்டங்களின் எதிர்காலம் ஆகிய தலைப்புகளை உள்ளடக்கியது. இந்தியாவின் முன்னேற்றத்திற்கான படிகளை அறிந்துகொள்ள இந்நூல் உதவுகிறது.

1984ஆம் ஆண்டு எச்.பி. ராஜ்குமார் எழுதிய **இளைஞருக்கு வேலை வாய்ப்புக்கையேடு** என்ற நூல் வெளியிடப்பட்டது. இந்நூலில் பல்வேறு பணிகளுக்கும் விண்ணப்பிப்பது எப்படி? பணியில் சேருவது எப்படி? ஆகியவற்றை மையமாகக் கொண்ட செய்திகள் இடம்பெறுகின்றன. வங்கிகளில் பணிபுரிவது எப்படி? பொறியியல் துறைகளில் வாய்ப்புகள், விமானத்துறை, இராணுவம் இவற்றில் சேருவது எப்படி? முதலிய தலைப்புகள் இதில் இடம்பெற்றுள்ளன.

**சுரண்டல் பொருளாதாரம்** என்ற நூலினை மா.பா. குருசாமி எழுதியுள்ளார். இந்நூல் 1985ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. இந்நூலில் கிராம மக்களின் உழைப்பு எவ்வாறு சுரண்டப்படுகிறது என்பதையும் இன்றைய பொருளாதார

நாட்டின் நலனுக்கும், மக்களின் நலனுக்கும் உறுதுணையாக இல்லை என்பதையும் நூலில் ஆசிரியர் விரிவாக ஆராய்ந்துள்ளார்.

அகஸ்தின் திரியோகதாசன் எழுதிய **உங்கள் முன்னேற்றத்தில் வங்கிகளின் பங்கு** என்ற நூல் 1978இல் வெளிவந்துள்ளது. கிராமப்புற மக்களும் எழுதப்படிக்கத் தெரிந்த சராசரி மனிதரும் வங்கிகளை எப்படிப் பயன்படுத்துவது என்பதை அறிந்திடத் தக்கவகையில் இந்நூல் எழுதப்பட்டிருக்கிறது.

## 16. கணித நூல்கள்

கிறித்தவ இலக்கியச் சங்கம் தமிழ் இலக்கிய நூல்களை மட்டுமல்லாது கணித நூல்களையும் வெளியிட்டு வந்துள்ளது.

1941ஆம் ஆண்டில் **கணிதத் திறப்பு** என்ற நூலை கோதண்டராமன் எழுதியுள்ளார். 122 பக்கங்களைக் கொண்டஇந்நூலில் கணிதம் பற்றிய தொடக்க நிலைகளை வரிசையாக அமைத்துள்ளார் ஆசிரியர்.

1948இல் சி.டி.பிலிப் என்பவர் ஆங்கிலத்தில் எழுதிய **விஞ்ஞான வெளிப்பாட்டு வழி** என்ற நூல் ஜி. வேதநாயகம், ஜாப் என்பவர்களால் மொழி பெயர்க்கப்பட்டு வெளியிடப்பட்டுள்ளது. இந்நூல் கணித இயல் அறிஞர் சர்.சி.வி. ராமனின் முன்னுரையுடன் வெளிவந்துள்ளது.

**நவீன இலகு கணிதம்** என்ற நூல் 1954ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. இந்நூலின் ஆசிரியர் கே. கோதண்டராமன் இந்நூலில் எளிமையான முறையில் கணக்கு பயிற்றுவிக்கும் முறையைக் குறிப்பிட்டுள்ளார்.

எம்.பி. லோவிஸ் எழுதிய **பள்ளிப் புதுக்கணிதம் - எண்கருவிகள்** என்ற நூல் சுவாமிதாஸ் அவர்களால் ஆங்கிலத்தில் இருந்து தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு வெளியிடப்பட்டுள்ளது. இதன் முதற்பதிப்பு 1971ஆம் ஆண்டிலும், இரண்டாம்

பதிப்பு 1972ஆம் ஆண்டிலும் வெளிவந்துள்ளன. கணிப்பொறி பற்றிய செய்திகள் இதில் அடங்கியுள்ளன. எண் கருவிகள் எதற்காகப் பயன்படுகின்றன. எண் கருவியின் தலையாய பாகங்கள், இருமங்கள், எண் கருவியின் நினைவு அறை, விடைகள், அட்டவணை ஆகிய செய்திகள் இதில் இடம்பெற்றுள்ளன. இந்நூலை ஆங்கிலத்தில் வெளியிட்ட லண்டன் எட்வர்ட்டு அர்னால்டு நூல் வெளியீட்டகத்திடமிருந்து கிறித்தவ இலக்கியச் சங்கம் அனுமதி பெற்று இந்நூலை வெளியிட்டுள்ளது.

இந்திய கணித வரலாறு என்ற நூலினை கே.ஆர். ராஜகோபாலன், எஸ்.கோவிந்தராஜ், அப்துல்ஹக் ஆகியோர் எழுதியுள்ளார்கள். இந்நூல் 1980ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது.

## 17. பள்ளிப்பாடநூல்கள்

கிறித்தவ இலக்கியச் சங்கம் இலக்கியப் படைப்புகளை மட்டுமின்றி பள்ளிக் குழந்தைகளுக்கான பள்ளிப்பாட நூல்களையும் வெளியிட்டுள்ளது.

இந்திய நர்சுகளுக்கான பாடபுத்தகம் என்ற ஆங்கில நூல் தென்னிந்திய மெடிகல் மிஷனெரி அஸோசியேஷன் நர்சிங் கமிட்டியால் இயற்றப்பட்டு ப.சிதம்பரம் மொழிபெயர்த்துள்ளார். கிறித்தவ இலக்கியச் சங்கம் இந்நூலை 1926ஆம் ஆண்டில் வெளியிட்டுள்ளது. இந்நூலின் இரண்டாம் பாகம் 1947லும் மூன்றாம் பாகம் 1947லும் வெளிவந்துள்ளன.

செவிலியர்களுக்காகப் பாடநூல் ஒன்றை கிறித்தவ இலக்கியச் சங்கம் 1945ஆம் ஆண்டில் வெளியிட்டுள்ளது. இந்நூல்களைத் தவிர தமிழக அரசுக்கான சில பாட நூல்களையும் கிறித்தவ இலக்கியச் சங்கம் வெளியிட்டுள்ளது.

இளமைப் பருவம் கடந்தவர் என்னும் இந்நூலினை எஸ்.ஜி. டேனியல், கெ. டேனியல் ஆகியோர் எழுதியுள்ளார்கள். இந்நூல் 1953இல் வெளிவந்துள்ளது.

நவீன சித்திர வாசகம் என்ற நூல் ஐந்தாம் வகுப்புக்கானப் பாடநூலாக 1954ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. இந்நூலின் ஆசிரியர்கள் ஜெ.பி. மாணிக்கம், பெ.நா. அப்புசுவாமி.

பத்துச்சுவைகள் என்னும் நூலினை அ.கு. ஆதித்தர் எழுதியுள்ளார். ஒன்பதாம் வகுப்புக்கான பாடநூலாக 1959 ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது.

பூகோள அறிவுநூல் என்னும் நூலினை எஸ்.இ. ஜெயபாலன், ஜெ. வில்சன் ஆகியோர் எழுதியுள்ளார்கள். ஒன்பதாம் வகுப்புக்கான பாடநூலாக 1965இல் வெளிவந்துள்ளது. ஜெயபாலன் எழுதிய சரித்திர களஞ்சியம் என்ற நூல் ஐந்தாம் வகுப்புக்கான பாடநூலாக 1966ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது.

பூகோளம் என்னும் நூலினை ஜெ. பாலன் எழுதியுள்ளார். நான்காம் வகுப்புக்கான பாடநூலாக 1968ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. புகழ்மிகு புலவர்கள் என்னும் இந்நூலினை திருச்சி வாசுதேவன் எழுதியுள்ளார். இது எட்டாவது வகுப்புக்கான பாட நூலாக 1971ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது.

ஏ.எம். சாக்லே எழுதிய துணைச்செவிலி - மருத்துவப் பெண்கள் (1972) என்ற ஆங்கில நூலினை ரா. ராஜதுரை தமிழில் மொழிபெயர்த்துள்ளார். இந்நூல் 1998ஆம் ஆண்டில் மறுபதிப்பாக வெளியிடப்பட்டுள்ளது.

## 18. சமய நூல்கள்

தமிழ் இலக்கிய நூல்களையும் அறிவு வளர்ச்சிக்குத் தேவையான பொது நூல்களையும் வெளியிட்டு வரும் கிறித்தவ இலக்கியச் சங்கம் கிறித்தவச் சமயம் சார்ந்த தமிழ் நூல்களையும் வெளியிட்டு வருகிறது.

கிறித்தவ இலக்கியச் சங்கம் வெளியிட்டுள்ள கிறித்தவச் சமயம் சார்ந்த நூல்களைப் பின்வருமாறு வகைப்படுத்தலாம். அவை, தியான நூல்கள், திருமறை

விளக்கம், திருச்சபை வரலாறு, அருளுரைகள், லெந்து கால நூல்கள், நற்செய்திப் பணி, கிறித்தவக் கோட்பாடுகள், திருமறைத்துறை நூல்கள், பாமாலை, கீர்த்தனைகள், புத்தெழுச்சிப் பாடல், காலை மாலை ஆராதனை, திருவிருந்து ஆராதனை முறைமைகள், தியான மணிக்கோவை, கிறித்தவக் கீதங்கள், ஞானப்பாட்டுகள், தமிழ்க் கிறித்தவபாடல்கள், ஆராதனை முறை, கிறிஸ்து சபை பாமாலை, தினசரி தனி ஜெபங்கள், காலைத்தியானம், சிறுவர் கீதங்கள் என்பனவாகும். கிறித்தவ இலக்கியச் சங்கம் வெளியிட்டுள்ள சமயநூல்கள் பல மொழி பெயர்ப்புச் செய்து வெளியிடப்பட்டுள்ளன.

கிறித்தவ இலக்கியச் சங்கம் கிறித்தவ சமயம் சார்ந்த நூல்களை மட்டுமல்லாது பிற சமய நூல்களையும் வெளியிட்டுள்ளது. அராபியாவும் அதன் நபியும் என்ற தொகுப்பு 1902 ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. பிள்ளையார் சதுர்த்தி என்ற நூல் 1924இல் வெளிவந்துள்ளது. இஸ்லாம் என்ற நூலை சாலமோன் ராமலிங்கம் எழுதியுள்ளார். இந்நூல் 1928 இல் வெளிவந்துள்ளது.

இந்து மத சங்கிரகம் என்ற நூலை ஜேஎஸ். மாசிலாமணி எழுதியுள்ளார். இந்நூல் 1930 ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. சாலமோன் ராமலிங்கம் எழுதிய இந்து மத வரலாறு என்ற நூலினை தே. ராஜரீகம் எழுதியுள்ளார். இந்நூல் 1963 ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது.

இந்து சமயநெறி, இஸ்லாமிய நெறி என்ற இரண்டு நூலினையும் தி. தியானந்தன் பிரான்சிஸ் எழுதியுள்ளார். இந்நூல்கள் 1983 ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளன.

மனிதனின் வாழ்க்கையை சித்தரிப்பது இலக்கியம். மனிதனை உயர்ந்த நிலைக்குக் கொண்டுவருவது நல்ல நூல்களே இத்தகைய நல்ல நூல்களை வெளியிட்டுத் தமிழ்ப்பணியைச் செய்து வந்துள்ளது கிறித்தவ இலக்கியச் சங்கம்.

## 19. மொழிபெயர்ப்பு நூல்கள்

கிறித்தவ இலக்கியச் சங்கம் ஆங்கில நூல்களைத் தமிழில் மொழி பெயர்த்து வெளியிட்டு தமிழ்ப் பணியாற்றி வருவது குறிப்பிடத்தக்கதாகும்.

பிற நாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்
தமிழ் மொழியிற் பெயர்த்தல் வேண்டும்
இறவாத புகழுடைய புது நூல்கள்
தமிழ் மொழியில் இயற்றல் வேண்டும்.[21]

என்பது பாரதியின் வாக்கு. இவ்வாக்கிற்கேற்ப கிறித்தவ இலக்கியச் சங்கத்தால் சிறந்த பல நூல்கள் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டு வருகின்றன. தமிழ் இலக்கிய வரலாற்றில் நாவல் தோன்றுவதற்கு முன்னும், அதற்குப் பின்னும் சில ஆங்கில நாவல்கள் தமிழாக்கம் செய்யப்பட்டன. ஜி.ஸி.பெடால் எழுதிய Basket of Flowers என்ற ஜெர்மன் கதை புஷ்பக் கூடை என்ற தலைப்பில் 1877 ஆம் ஆண்டு கிறித்தவ இலக்கியச் சங்கத்தால் வெளியிடப்பட்டது.

இந்தியாவின் முதல் பெண் நாவலாசிரியர் திருமதி.கிருபை சத்தியநாதன் (1862-1894) அவர்களால் ஆங்கிலத்தில் எழுதப்பட்டு சென்னைக் கிறித்தவக் கல்லூரி இதழில் வெளியான கமலா, சுகுணா ஆகிய நாவல்களை அருள்திரு.சாமுவேல் பவுல் மொழி பெயர்த்தார். கமலா 1896-ஆம் ஆண்டும் சுகுணா 1898-ஆம் ஆண்டும் கிறித்தவ இலக்கியச் சங்கத்தால் வெளியிடப்பட்டுள்ளன.

ஜாண் பனியனின் The Pilgirim Progress எனும் நூல் **'மோட்சப் பிராயணம்'** எனும் தலைப்பில் 1924-ஆம் ஆண்டு கிறித்தவ இலக்கியச் சங்கத்தால் வெளியிடப்பட்டது. அ.மாதவையா, **சத்தியானந்தம், கிளாரிந்தா** ஆகிய நாவல்களை ஆங்கில மொழியில் எழுதியுள்ளார். அவற்றை திருமதி. சரோஜினி பாக்கியமுத்து

தமிழில் மொழி பெயர்த்தார். இவ்விரு நூல்களையும் கிறித்தவ இலக்கியச் சங்கம் வெளியிட்டுள்ளது. நீல பத்மாநாபனின் **பள்ளிகொண்டபுரம்** நாவல் தமிழிலிருந்து ஆங்கிலத்திற்கு மொழி மாற்றம் செய்யப்பட்டு வெளியிடப்பட்டுள்ளது.

**சங்கீதங்களை படிப்பது எப்படி? இன்றைய தேவைகளுக்கு வேதப் புத்தகம், இயேசு கிறிஸ்து விடுவிக்கிறார், ஒன்றுப்படுத்துகிறார், கண்ணீரைப் போக்கும் காலைப் பொழுது, சாது சுந்தர்சிங் அருளுரைகளும், அருள் மொழிகளும்** ஆகியநூல்கள் தமிழ் மொழிக்கு கொண்டு வரப்பட்ட நூல்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

## தொகுப்புரை

நூல் வெளியீட்டுப்பணி என்னும் இயலில் இதுகாறும் கூறப்பட்டவற்றிலிருந்து கீழ்க்காணும் கருத்துக்கள் தொகுத்துத் தரப்படுகின்றன.

தமிழகத்தைப் பொறுத்தவரையில் நூற்பதிப்புப்பணி ஐரோப்பியர்களாலேயே அறிமுகம் செய்யப்பட்டது. கி.பி.1818 இல் தோற்றுவிக்கப்பட்ட சென்னை சமயத்துண்டுப் பிரதி மற்றும் பாடநூல் சங்கமும், கி.பி1854 இல் துவக்கப்பட்ட தென்னிந்தியப் பாடநூல் நிறுவனமும், கி.பி.1858 இல் டாக்டர் ஜான்மர்டாக் தோற்றுவித்த கிறித்தவத் தாய்மொழிக் கல்விச்சங்கமும் நூற்பதிப்புப் பணியை 19ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் செய்து வந்துள்ளன. இந்த மூன்று நிறுவனங்களன்றி ஆறுமுகநாவலர், சி.வை.தாமோதரம்பிள்ளை, உ.வே.சாமிநாதையர், வையாபுரிப்பிள்ளை ஆகிய நால்வரின் தமிழ்ப்பதிப்புப் பணியும் குறிப்பிடத்தக்கது.

கிறித்தவ இலக்கியச் சங்கம் இந்திய விடுதலைக்கு முன் சமுதாய நலனை முன்னிட்டு முதியோர்களுக்காகவும், மாணவருக்காகவும், இளைஞர்கட்காகவும், பெண்களுக்காகவும் பல்வேறு தமிழ் நூல்களை வெளியிட்டுள்ளது. இந்திய விடுதலைக்குப் பிறகு தமிழ் இலக்கிய வளர்ச்சியில் ஆர்வம் காட்டி வருகின்றது.

கிறித்தவ இலக்கியச் சங்கம் அகராதிகள், இலக்கணங்கள், மொழிப் பயிற்சி நூல்கள், களஞ்சியம், செய்யுள் இலக்கியம், புதுக்கவிதைகள், சிறுகதைகள், நாவல்கள், நாடகங்கள், சிறுவர் இலக்கியம், கட்டுரை இலக்கியம், வாழ்க்கை வரலாற்று நூல்கள், நலவாழ்வு வரிசை, தேசிய ஒருமைப்பாட்டு நூல் வரிசை, தேசிய வளர்ச்சி நூல் வரிசை, கணித நூல்கள், பள்ளிப் பாட நூல்கள், சமய நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என இதுவரை 940 நூல்களை வெளியிட்டுள்ளன.இதில் 50 விழுக்காடு சமயச் சார்பான நூல்கள் ஆகும். இச்சங்கம் ஆண்டுக்கு சுமார் 10 முதல் 15 நூல்களை வெளியிட்டு வருகின்றது. இவற்றுள் மறுபதிப்பு நூல்களும் அடங்கும்.

ஆங்கில மொழியில் எழுதப்பட்ட வாழ்க்கை வரலாறு நூல்கள், திறனாய்வு நூல்கள், நாவல்கள் ஆகியவற்றைத் தமிழில் மொழிபெயர்த்து தமிழிலக்கியத்திற்குத் தொண்டாற்றி வருகின்றது. தமிழ் நாவல்களைப் பிற மொழியினரும் படிக்க வேண்டும் எனும் ஆர்வத்தால் ஆங்கில மொழியில் மொழிபெயர்த்து பதிப்பித்துள்ளது.

இலக்கியப் பார்வையுடன் சமுதாயப் பார்வையையும் முதன்மையாகக் கொண்டிருப்பதால் சமூக விழிப்புணர்ச்சிக்குத் துணை செய்யும் நூல்கள், கட்டுரைகள் முதலியவற்றையும் வெளியிட்டு வருகின்றது. தமது ஆக்க இலக்கியங்களை நூல் வடிவில் வெளியிட இயலாத எழுத்தாளர்களின் படைப்புகளை கிறித்தவ இலக்கியச் சங்கம் தானாகவே முன் வந்து வெளியிடுவதன் மூலம் பல்வேறு புதிய எழுத்தாளர்கள் தோன்றத் துணைபுரிந்து வருகின்றது.

மனிதனின் வாழ்க்கையைச் சித்திரிப்பது இலக்கியம். மனிதனை உயர்ந்த நிலைக்குக் கொண்டுவருவது நல்ல நூல்கள். அத்தகைய நூல்களைக் கற்றால்தான் வாழ்வின் மேன்மைகளை உணர முடியும். இத்தகைய நல்ல நூல்களை வெளியிட்டு கிறித்தவ இலக்கியச் சங்கம் தமிழ்ப் பணியைச் செய்து வருகின்றது. தமிழ் இலக்கிய வரலாற்றில் கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் தமிழ்ப்பணி குறிப்பிடத்தக்கது.

# அடிக்குறிப்புகள்

1. S.H. Stienberg, **Five hundred years of Printing,** p.129.
2. பு. ஜார்ஜ், பேராசிரியர் ச. வையாபுரிப்பிள்ளையின் பதிப்புப்பணி, ப.2.
3. மா.சு. சம்பந்தன், அச்சுக்கலை, ப.234.
4. A.V. Subramania Aiyar, **Tamil Studies,** (Second Series), p.81.
5. மா.சு. சம்பந்தன், மு.நூ., ப.234.
6. தே. கணபதிப்பிள்ளை, ஈழநாட்டின் தமிழ்ச் சுடர் மணிகள், அணிந்துரை, ப.v.
7. திரு.வி. கலியாணசுந்தரனார், திரு.வி.க. வாழ்க்கைக்குறிப்பு (பகுதி ஒன்று), ப.160.
8. அ. விநாயகமூர்த்தி, பதிப்புப் பார்வைகள், ப.38.
9. எஸ். வையாபுரிப்பிள்ளை, தமிழ்ச்சுடர்மணிகள், ப.303.
10. பூ. சொல்விளங்கும் பெருமாள், டாக்டர் உ.வே.சா. பதிப்புப்பணி ஓராய்வு, பக்.294-295.
11. மு.வை. அரவிந்தன், உரையாசிரியர்கள், பக்.601-602.
12. உ.வே. சாமிநாதையர், என் சரித்திரம், பக்.770-771.
13. பூ. சொல்விளங்கும் பெருமாள், மு.நூ., ப.1.
14. பு. ஜார்ஜ், மு.நூ., ப.225.
15. மு. வரதராசன், தமிழ் இலக்கிய வரலாறு, ப.183.
16. டி.ஏ. துரோவர், தமிழ் வேதாகம ஒத்த வாக்கிய அகராதி, ப. V.
17. சுவீகரனார், முக்திவழி அம்மானை, என்னுரை, ப.ii
18. சி. பாலசுப்பிரமணியன், "கவிமணியின் குழந்தை இலக்கியப்பணி", இந்திய விடுதலையும் தமிழ் இலக்கியமும், ந. சஞ்சீவி (ப.ஆ.), ப.471.
19. மேற்படி, ப.471.
20. சோமலெ, வளரும் தமிழ், ப.282.
21. பாரதியார் கவிதைகள், ப.173.

# இதழ்ப்பணி

## முன்னுரை

கிறித்தவ இலக்கியச் சங்கம் பூக்கூடை எனும் இதழின் வாயிலாக இதழ்ப்பணி ஆற்றி வருகிறது. தமிழிலக்கியப் பணியில் பெரும்பங்கு கொண்ட இப்பூக்கூடை இதழ் இலக்கியப் படைப்பாளர்களை ஊக்குவித்தும் வருகிறது. பூக்கூடையில் வெளிவரும் படைப்புக்கள் அனைத்தும் இலக்கியத்தரம் வாய்ந்ததாக அமைகின்றன. கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் இதழ்ப்பணி குறித்து ஆராய்வதாக இவ்வியல் அமைகிறது.

## தமிழ்நாட்டில் இதழ்களின் தோற்றம்

சமயம் பரப்பும் நோக்கோடு வந்த வெளிநாட்டுக் கிறித்தவப் பாதிரியார்கள் தங்கள் சமயத்தைப் பரப்பப் பலவழி முறைகளைக் கையாண்டனர். அவர்கள் முயற்சியாலேயே அச்சுப்பொறிகள் தமிழகத்திற்கு வந்தன. இதழியல் என்ற தனிப்பெரும் துறை ஆங்கிலேயர் ஆட்சியின்போது தொடங்கப்பட்டது.

கிழக்கிந்தியக் கம்பெனியின் ஆட்சி இந்தியாவின் தென்பகுதிகளை நிர்வகிக்கச் சென்னைக் கோட்டையில் ஓர் அலுவலகத்தை நிறுவியிருந்தது. அங்கு அரசாங்கத்திற்குச் சொந்தமான ஓர் அச்சகம் இருந்தது. அதன் பொறுப்பாளராக ரிச்சர்டு ஜான்சன் என்பவர் பணிபுரிந்தார். அவர் கி.பி. 1785 ஆம் ஆண்டு மெட்ராஸ் கூரியர் என்ற ஓர் ஆங்கிலப் பத்திரிகையை வெளியிட்டார். அது முழுவதும் அரசின் சார்பு இதழ் ஆகும்.[1] பின்னர் கி.பி.1795ஆம் ஆண்டில் வில்லியம்ஸ் என்பவர் மெட்ராஸ் கெஜெட் என்ற பத்திரிகையையும் இந்தியன் ஹெரால்டு என்னும் பத்திரிகையையும் கொண்டுவந்தார். அவை ஆங்கிலப் பத்திரிகைகள் ஆகும். சில ஆண்டுகளில் அவை நின்றுவிட்டன.

தமிழ் இதழ்கள் கி.பி.1800 இக்குப் பின்னரே வெளிவந்தன. கி.பி.1802இல் சிலோன் கெஜெட் என்னும் இதழ் தமிழ், ஆங்கிலம், சிங்களம் எனும் மும்மொழிகளிலும் அச்சிட்டு வெளிவந்ததன் மூலம் தமிழ் மொழி இதழில் இடம்பெற்றது. கி.பி.1830இல் முதன் முதலில் தமிழ் மேகசின் இதழ் முழுவதுமாகத் தமிழில் செய்தி வடிவில் அச்சாகியுள்ளது. இதுவே தமிழ் நாட்டில் தோன்றிய முதல் தமிழ் இதழாகும். இந்த இதழ் கி.பி.1831இல் தோன்றியதாகவும் ஒருசில குறிப்புகள் குறிப்பிடுகின்றன.[2] இவையே தமிழ்நாட்டில் இதழ்கள் தோன்றுவதற்கு அடிப்படையாக அமைந்தன.

### தொடக்கக் காலக் கிறித்தவ இதழ்கள்

கி.பி.1713இல் விவிலியத்தை அச்சிட்டுப் பொதுமக்களுக்கு அறிமுகப்படுத்திய சீகன் பால்கு ஐயர் இதழ்களின் தோற்றத்திற்கு வழிகோலியதாகத் தெரியவில்லை. கி.பி.1830இல் சென்னைக் கிறித்தவ சமய இயக்கத்தார் வெளியிட்ட தமிழ் மேகசின் என்ற இதழே முழுவதும் தமிழ்ச் செய்திகளைக் கொண்ட இதழாகும். அதன் பிறகு கி.பி.1833இல் இராஜவிருந்தினி என்ற வார இதழும் கி.பி.1840இல் பால தீபிகை, மிஷனெரி கிளீனர் (காலாண்டு) பிரண்வி இன்ஸ்டிரக்டர், அரோரா (மாதம் இருமுறை) ஆகிய இதழ்களும் கி.பி.1841இல் சுவிசேஷ பிரபாவ விளக்கம், ஜனசிசிநேகன் ஆகிய இதழ்களும் வெளிவந்தன. கி.பி.1854இல் உதயதாரகையும், கி.பி.1849இல் சிறுபிள்ளையின் நேசத்தோழன், நற்போதகம், தரங்கை நேசன் ஆகிய இதழ்களும் வெளிவந்தன. இவையே தொடக்கக் கால இதழ்கள் ஆகும். கி.பி.1854 இற்குப் பிறகு இன்று வரை வெளிவந்த கிறித்தவ இதழ்கள் நூற்றுக் கணக்கானவை.

### கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் தொடக்ககால இதழ்கள்

இதழ் வெளியீட்டில் கிறித்தவ இலக்கியச் சங்கமும் முன்னோடியாகத் திகழ்ந்தது. சத்தியதூதன், பாலர்மித்திரன், மாதர்போதினி, கிறித்தவ ஊழியர் தோழன்,

கிரகமணி, பூக்கூடை ஆகிய இதழ்களின் வாயிலாக கிறித்தவ இலக்கியச் சங்கம் தமிழ்ப்பணியையும் சமயப்பணியையும் ஆற்றியுள்ளது.

**1. சத்தியதூதன்**

இந்திய பத்திரிகைத்துறை வளர்ச்சிக்கு வித்திட்ட கிறித்தவ இலக்கியச் சங்கம் நவம்பர் 1887ஆம் ஆண்டில் முதன்முதலில் சத்தியதூதன் என்னும் இதழை வெளியிட்டது. ஆரம்பகாலத்தில் இவ்விதழின் விலை ஒரு பைசாவாக இருந்தது. அவ்விதழில் தியானம், விவிலியம் பற்றிய செய்திகள், நாட்டு நடப்புக்கள், பிரசங்கக் குறிப்புகள், கைப்பிரதிக் கழகம் ஆகிய செய்திகள் இடம்பெற்றுள்ளன. இவ்விதழ் கிறித்தவ சமயக் கோட்பாடுகளை மக்களிடையே பரப்புவதை நோக்கமாகக் கொண்டது. வர்த்தமான குறிப்பு என்னும் பெயரோடு நாட்டு நடப்புச் செய்திகளும் வெளிவந்தன.[3] இவ்விதழ் ஒவ்வொரு மாதமும் வெளியிடப்பட்டு வந்தது.1969 சனவரிக்குப் பிறகு இவ்விதழ் வெளியிடப்படவில்லை.

**2. பாலர்மித்திரன்**

பாலர்மித்திரன் என்னும் சிறுவர் இதழ் 1920களில் சிறுவர்களுக்காக கிறித்தவ இலக்கியச் சங்கத்தால் வெளியிடப்பட்டது. அருள்திரு. ஆர். இராபர்ட்சன் இதன் பதிப்பாசிரியராகச் செயல்பட்டார். இவ்விதழில் கதைகள், இயற்கைப் பாடங்கள், ஆகியவை இடம்பெற்றிருந்தன. சமூகத்தின் கீழ்நிலையில் இருந்த மக்களுக்காகப் பல பக்கங்கள் ஒதுக்கப்பட்டிருந்தன.[4] இவ்விதழின் ஆண்டுச்சந்தா ஓரணாவாகும்.

**3. மாதர் போதினி**

இக்காலக்கட்டத்தில் மாதர்போதினி என்ற மகளிர் இதழையும் கிறித்தவ இலக்கியச் சங்கம் நடத்தி வந்தது. இவ்விதழின் பதிப்பாசிரியர் செல்வி. எச்.எம்.பொலார்டு ஆவார். இவ்விதழில் வாழ்க்கை வரலாறுகள், கதைகள், குடும்பக் குறிப்புகள் ஆகியவை இடம்பெற்றிருந்தன.

**4. கிறித்தவ ஊழியர் தோழன்**

1930ஆம் ஆண்டில் கிறித்தவ ஊழியர் தோழன் என்ற இதழ் மூன்று மாதத்திற்கு ஒரு முறையாக வெளியிடப்பட்டு, பின்பு திங்கள் இதழாக வெளிவந்தது. இதில் கிறித்துவின் அருளுரைகள், வேத ஆராய்ச்சி, தினசரி வேதத்தியானம், கைப்பிரதிக்கழகம் வெளியிடும் கைப்பிரதி, அருளுரைக் குறிப்புகள் முதலான சமயச் செய்திகள் இடம்பெற்றிருந்தன.[5]

**5. தினசரி வேதவாசிப்பு**

தினசரி வேத வாசிப்பு என்னும் மாத இதழ் 1945 முதல் 1979 வரை வெளிவந்தது. ஆரம்ப காலத்தில் இதன் பதிப்பாசிரியராக அருள்திரு. எஸ். பரமானந்தம் பணிபுரிந்தார். பிற்காலத்தில் திருமதி. பத்மினிதாசன் இந்நூலிற்கான மொழிபெயர்ப்புகளில் துணைபுரிந்துள்ளார்.

மேற்குறிப்பிட்ட ஐந்து இதழ்களும் இந்திய விடுதலைக்கு முன் தொடங்கப்பட்டவையாகும்.

**6. கிரகமணி**

இந்திய விடுதலைக்குப்பின் இந்திய இதழ் வெளியீட்டுப்பணி வேகம் அடைந்தது. கிறித்தவ இலக்கியச் சங்கம் சமயத்தை அடிப்படையாகக் கொண்ட இதழை வெளியிடாமல், பொதுவான செய்திகளோடு சமயத் தொடர்பான செய்திகளையும் கலந்து வெளியிட்டது. 1950 முதல் 1959 வரை வெளிவந்த கிரகமணி என்னும் இதழ் ஒரு குடும்ப மாத இதழாக அமைந்திருந்தது. கதைகள், குழந்தைகளைப் பராமரித்தல், சிறுவர் பகுதி, குடும்பச் செய்திகள் முதலிய தலைப்புக்களின் கீழ் இவ்விதழ் வெளிவந்தது. இதன் பதிப்பாசிரியராக திருமதி. தமயந்தி டேவிட் பணியாற்றினார்.

இவ்வாறு பல இதழ்கள் கிறித்தவ இலக்கியச் சங்கத்தால் சமயப்பணிக்காக வெளியிடப்பட்டு வந்தன. சமயப்பணியுடன் சிறப்பான முறையில் தமிழிலக்கியப் பணியும் ஆற்றுவதற்காக தொடங்கப்பட்ட இதழ் பூக்கூடையாகும்.

**7. பூக்கூடை**

கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் வெளியீடான பூக்கூடை 1979ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் தொடங்கப்பட்டது. தமிழ்க் கிறித்தவ சமுதாயத்திற்குச் சபைப்பாகுபாடற்ற ஒரு பொதுவான குடும்ப இதழ் தேவை என்பதை உணர்ந்த கிறித்தவ இலக்கியச் சங்கம் அந்தத் தேவையை நிறைவு செய்யும் வகையில் பூக்கூடை என்ற மாத இதழை வெளியிட்டது. 1979ஆம் ஆண்டு தொடங்கப்பெற்ற பூக்கூடை 1992ஆம் ஆண்டு வரை மாதம் ஒருமுறை வெளிவந்தது. பின்னர் 1993ஆம் ஆண்டு முதல் இரண்டு மாதத்திற்கு ஒருமுறையாக வெளிவந்து கொண்டிருக்கிறது. வாசகர்கள் மாதம் ஒருமுறை பூக்கூடை வெளிவர வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறார்கள். தொடக்கக் காலத்தில் எச்.பி.ராஜ்குமார் இதழாசிரியராகவும், தமிழ்ப்பதிப்புத் துறையின் உதவி ஆசிரியராகவும் பணியாற்றியுள்ளார்.

**பூக்கூடையின் தொடக்கக்கால ஆசிரியர்க்குழு**

| | | |
|---|---|---|
| ஆசிரியர் | - | எச்.பி.ராஜ்குமார் |
| நிர்வாக ஆசிரியர் | - | தி. பாக்கியமுத்து |
| பதிப்பாளர் | - | தி. தயானந்தன் பிரான்சிஸ் |
| ஓவியர் | - | சாலமோன் |
| ஆலோசனைக்குழுவினர் | - | ஜெயசீலன் ஜேக்கப் |
| | | தினகரன் |
| | | பி.அ. தாவீது |
| | | செல்வகுணாளன் |
| | | பிளாரன்ஸ் வில்லியம்ஸ் |
| | | தாமஸ் தங்கராஜ் |

**தொடக்கக் காலச்சந்தா**

| | | |
|---|---|---|
| தனி இதழ் | - | 60 காசுகள் |
| ஆண்டுச்சந்தா | - | ரூபாய் 6.00 |

**பூக்கூடையின் தற்போதைய ஆசிரியர்க்குழு**

| | | |
|---|---|---|
| சிறப்பு ஆசிரியர் | - | தி. தயானந்தன் பிரான்சிஸ் |
| பொறுப்பாசிரியர் | - | ஸ்வீட்லின் பிரபாகரன் |
| துணை ஆசிரியர் | - | பத்மாவதி கென்னத் |
| பொருளாளர் | - | த.ஜோஷுவா |
| விற்பனைப் பொறுப்பாளர் | - | ஜனஸ் ஜெயச்சந்திர தாஸ் |

இவர்கள் பூக்கூடை இதழின் தரத்தில் மிகவும் கவனம் செலுத்திப் பணிபுரிந்து வருகின்றனர்.

**பூக்கூடையின் தற்போதைய வளர்ச்சி**

படைப்பாளர்களை அறிமுகப்படுத்துவதிலும், திறனாய்வுச் சிந்தனையை ஊக்குவிப்பதிலும், விவிலியச் செய்திகளை விளக்கியும், பயண அனுபவங்களைப் பகிர்ந்தும், இந்நூற்றாண்டின் ஆரம்பத்திலுள்ள பல கிறித்தவப் படைப்பாளர்களை நினைவு கூர்ந்தும் பூக்கூடை இதழ் வெளிவருகின்றது.

**தற்போதைய சந்தா**

| | | |
|---|---|---|
| தனி இதழ் | - | ரூபாய் 4.00 |
| ஆண்டுச் சந்தா | - | ரூபாய் 24.00 |
| ஆயுள் சந்தா | - | ரூபாய் 300.00 |

**வாசகர்கள்**

பூக்கூடை கிறித்தவ மதம் சார்ந்த இதழாக இருந்தாலும், பிற மதத்தினரும் வாசகர்களாக உள்ளனர். வாசகர்களின் எண்ணங்களைப் பிரதிபலிக்கும் வகையில் பூக்கூடை இதழ் செயல்பட்டு வருகின்றது. வாசகர்கள் தங்களின் எண்ணங்களை வாசகர் கடிதம் மூலம் வெளிப்படுத்துகின்றனர். படைப்பைப் பாராட்டியும், தொடர்ந்து எழுதவேண்டும் என்ற நோக்கிலும் கடிதங்கள் அமைகின்றன. தற்பொழுது பூக்கூடை இதழில் வாசகர் கடிதம் இடம்பெறுவதில்லை.

**பூக்கூடை அறிமுகப்படுத்தியுள்ள படைப்பாளர்கள்**

கவிதை, கட்டுரை, சிறுகதை, நாடகம் எனப் பல்வேறு படைப்பாளர்களுள் இதுவரை சுமார் 50 படைப்பாளர்களைப் பூக்கூடை அறிமுகப்படுத்தியுள்ளது. படைப்பாளர்களில் கிறித்தவ மதம் சார்ந்தவர்கள் மட்டுமின்றி, பிற மதம் சார்ந்த படைப்பாளர்களும் உள்ளனர். கிறித்தவர் அல்லாத எழுத்தாளர்களின் மனிதநேயம் சார்ந்த படைப்புகளுக்குப் பூக்கூடை இதழ் இடம் அளிக்கிறது. சமூகத்தில் உயர்ந்த படைப்பாளர்களின் படைப்புக்கள் இவ்விதழில் இடம்பெறுகின்றன. பிற கிறித்தவ இதழ்களில் இல்லாத அளவுக்குப் பெண் படைப்பாளர்கள் பூக்கூடை இதழில் மிகுந்து உள்ளனர்.

**படைப்பிலக்கியம்**

சிறுகதை, தொடர்கதை, கவிதை, நாடகம் ஆகிய படைப்பிலக்கியங்களால் தான் இதழ்கள் விற்பனையாகின்றன எனக் கூறும் அளவிற்கு இதழ்களில் படைப்பிலக்கியம் பெரும்பங்கு வகிக்கின்றது. அனைத்துத் தரப்பிலுள்ள மக்களுக்கும் ஏற்ற வகையில் இதழ்களில் பல்வகை அம்சங்கள் வெளிவருகின்றன. சமூகத்தைப் படம்பிடித்துக் காட்டும் பணியில் இலக்கியத்தரமான இதழ்கள் பெரும் பங்கு வகிக்கின்றன. பூக்கூடை இதழ் படைப்பிலக்கியத்திற்கு அதிக ஆதரவு

கொடுத்துப் படைப்பாளர்களை அறிமுகப்படுத்தியும் ஊக்கப்படுத்தியும் வருகின்றது.

**பூக்கூடையில் படைப்பிலக்கியம்**

கிறித்தவ இதழான பூக்கூடையில் இடம்பெற்றுள்ள படைப்பிலக்கியத்தினைக் கீழ்க்காணும் வகையில் பகுக்கலாம். அவை,

1. கவிதை
2. சிறுகதை
3. நாடகம்

என்பனவாகும். பூக்கூடையில் படைப்பிலக்கியம் மட்டுமின்றி கட்டுரை இலக்கியமும் இடம்பெற்றுள்ளது.

**கவிதை**

கவிதை, மனிதனின் உள் மனதில் ஏற்படும் இன்ப துன்ப உணர்ச்சிகளினால் பிறக்கும் ஒன்றாகும். கவிதை புனையும் ஒருவர் தன் சிந்தனை ஆற்றலையும் உணர்ச்சிப் பெருக்கையும் பயன்படுத்துகின்றார். அவர் சிந்தித்த சிந்தனைகள் பிறரையும் அடைய வேண்டுமென்று விரும்புகின்றார். எனவே அவற்றை நூல்களாக வெளியிட்டும் இதழ்களில் இடம்பெறச் செய்தும் தம் விருப்பத்தை நிறைவு செய்கின்றார். அதன்படி பூக்கூடையிலும் கவிதைகள் இடம் பெற்றுள்ளன. பெரும்பாலும் பக்தி நெறிசார்ந்த கவிதைகள் காணப்படுகின்றன. பழங்காலத்தொட்டே கவிதைகள் பக்திக்குத் துணையாக இருந்தன என்பதையும் பக்தியும் கவிதையும் இணைந்து உணர்ச்சி சார்ந்த இலக்கியம் தோன்றியதையும் இதனால் அறிய முடிகிறது.

**இலக்கியம்**

இலக்கியம் என்ற சொல் பண்டைத் தமிழ் நூல்களில் வழங்கப் பெறவில்லை. தொல்காப்பியர் பாட்டு, உரை, நூல், வாய்மொழி, பிசி, அங்கதம், முதுசொல் என்று குறித்தன இலக்கியங்களே ஆகும். இலக்கியம் என்ற சொல் முதன் முதலாக நன்னூலில் வழங்கப் பெற்றுள்ளது. இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்பலில்[6] என்பதாகும். இயம்பு என்னும் பொருள் குறித்த இயம் என்ற சொல்லும் குறிப்பொருள் என்னும் பொருள் குறித்த இலக்கு என்ற சொல்லும் இணைந்து குறிப்புப் பொருளை இயம்பிடுவது என்னும் பொருள் கொண்டு இலக்கியம் என்ற ஒரு சொல்லாகப் பிறந்தது. இலக்கியம் என்பது ஒரு கற்பனை கலந்த புனைவு; மனிதனின் வாழ்க்கை குறித்த கற்பனைச் சிந்தனையின் சிதறல்; கற்பனையின் மலர்ச்சி, உணர்ச்சிகளின் பின்னல்; கருத்துக்களின் குவியல்; வாழ்க்கையின் விளக்கம் என்றெல்லாம் கூறலாம்.

இலக்கியம் மனிதனின் இன்பியல், துன்பியல் என்ற இரண்டில் பிறக்கிறது. இவற்றுக்குக் காரணமாக இருப்பது உணர்ச்சியாகும். இவ்வுணர்ச்சி மனிதனின் நுண்ணிய சக்தியாகும். உள்ளதை உணர்ச்சியுடன் கூறும்போது பிறரைத் தட்டியெழுப்ப முடிகின்றது. இவ்வுணர்ச்சி பக்தி வழியாகவும், பக்தி கவிதை வழியாகவும் வெளிப்படுகின்றது.

**பக்தி**

பக்தி வெள்ளம் பாய்ந்தோடுவதற்கு வழிவகுத்துத் தந்தவை சமயங்கள் எனலாம். கடவுளிடம் உண்டாகும் அன்பினால், அவரை அணுகும் முறையும், அவருடைய அன்பையும் அருளையும் நினைந்து உள்ளமுருகப் பாடும் மாண்பையும் பக்தி எனலாம். இறைவனை - உள்ளத்தை நினைத்து ஐம்புலன்களையும் கட்டுப்படுத்தி இறைவன்பால் பற்றுக் கொண்டு பூசித்தல் பக்தியாகும். ஒரு பக்தர் கீழ்க்கண்டவாறு பாடுகின்றார்.

பக்தியாய் ஜெபம் பண்ணவே
சுத்தமாய் தெரியா தையா
புத்தியோடும்மை போற்ற நல்
சித்தம் ஈந்திடும் இயேசுவே
பாவ பாதையை விட்டுநான்
ஜீவ பாதையில் சேரநல்
ஆவி தந்தென்னை ஆட்சிகொள்ளும்
தேவ தேவக் குமாரனே[7]

எனவே மனிதனின் பாவ உலகப் பாதையை விட்டு, இறைவனின் வழியாகிய வீடுபேற்றுக்குரிய பாதையைத் தேடுதல் பக்தியாகும்.

**தமிழில் பக்தி இலக்கியக்கவிதைகள்**

காலந்தோறும் பக்தி இலக்கியங்கள் தோன்றிக் கொண்டேயிருக்கின்றன. அவ்விலக்கியங்கள் இறைவனின் அருளையும், அவ்விறைவன் மனிதர்மேல் வைக்கும் பற்றையும் கூறுகின்றன. சங்க காலத்தில் தோன்றிய பரிபாடலில் நல்லழிசியார் என்னும் புலவர் முருகனைப் பாடுகின்றார்.

மணிநிற மஞ்ஞை ஓங்கிய புட்கொடிப்
பிணிமுகம் ஊர்ந்த வெள்போர் இறைவ
பணி ஒரிஇ நின்புகழ் ஏத்தி
அணி நெடுங்குன்றம் பாடுதும் தொழுதும்
அவை யாமுமெம் சுற்றம் பரவுதும்
ஏமவைகல் பெருகயாம் எனவே[8]

பக்தி இயக்கக் காலத்தில் திருவாசகம் அருளிய மாணிக்கவாசகர் இறைவனை நோக்கி இறைவா உன் அன்பை நான் எப்போதும் புறக்கணிக்கின்றேன். இருந்தும் என்னைக் கைவிட வேண்டாம் என்கிறார்.

பெற்றது கண்டு பிழையே பெருக்கி அடுக்கும் அன்பின்

வெற்று அடியேனை விடுதிகண்டாய் விடிவோ கெடுவேன்

மற்று அடியேன் தன்னைத் தாங்குநர் இல்லை என்முதலே

உற்று அடியேன் மிகத்தேறி நின்றேன் எனக்கு உற்றவனே[9]

பிற்காலத்தவராகிய தாயுமானவர் வித்தியாசமான முறையில் இறைவனைப் பூசிப்பதாய்ப் பாடுகின்றார்.

நெஞ்சகமே கோயில் நினைவே சுகந்தம் அன்பே

மஞ்சனநீர் பூசைக்கொள்ள வாராய் பராபரமே[10]

கிறித்தவக் கவிஞர் வேதநாயக சாஸ்திரியார் இயேசு பெருமானைத் தொழுது கொள் என்று தன் நெஞ்சிற்குச் சொல்லுகின்றார்.

ஒரு பொருளே தெய்வம் – நீ

உகந்து தொழு நெஞ்சே!

உடைந்து மனம் கெஞ்சே – அந்த

ஒரு பரனுக்கஞ்சே[11]

ஜான்பால்மர் என்னும் கவிஞர் இயேசு கிறித்துவிடம் தன்னை ஒப்படைத்துப் பாடுகின்றார்.

திருமுகத் தொளிவற்று பெருவினைகளில் உற்று

சீர்கெட்ட பாவியானேன் – நான்

ஒருமுகமாய் உனதிடம் மனந்திரும்பிட

ஊக்கம் அருள் பரனே[12]

கிறித்தவர் அல்லாதவராகிய திரு.வி. கல்யாணசுந்தரனார் இயேசுவை நினைந்து பாடுகின்றார்.

தீராப் பிணிகளைத் தீர்த்தோனே
தெவ்வரை அன்பாய் பார்த்தோனே
இயேசுவே என்றதும் நெஞ்சுருகும்
எல்லா பாவமும் இரிந்தருகும்[13]

மேற்கண்ட முறையில் தமிழில் பக்திக் கவிதைகள் பாடப்பட்டுள்ளன.

**பூக்கூடையில் கவிதைகள்**

பூக்கூடையில் இடம்பெற்றுள்ள கவிதைகள் அனைத்தும் சமுதாயம், சமயம், இறை நம்பிக்கை பற்றியதாக அமைந்துள்ளன. சில கவிதைகள் இலக்கண வரம்பிற்கு உட்படாமலும் இருக்கின்றன. இக்கவிதைகள் குறைந்த அளவு நான்கு அடிகள் முதல் அதிக அளவு நாற்பத்தெட்டு அடிகள் வரை உள்ளன. அக்கவிதைகளைக் கீழ்க்காணும் பகுப்பிற்குட்படுத்தலாம். அவை:

1. புதுக்கவிதைகள்
2. மரபுக் கவிதைகள்
3. பாடல்கள்

என்பனவாகும்.

**புதுக்கவிதைகள்**

புதுக்கவிதை என்பது யாப்பு வழி அமையாதது. கவிதையின் பாடுபொருளைப் புதிய கோணத்தில் புதுமை நோக்கில் கூறுங்கால் பிறப்பதே புதுக்கவிதையாகும். மரபுக்கவிதைகள் பிறக்கக் காரணமான அனுபவம், கற்பனை, உணர்ச்சி ஆகிய மூன்றும் புதுக்கவிதைகள் படைக்கவும் காரணமாவன ஆகும்.

புதுக்கவிதைகள் காலத்தால் அண்மையன எனினும் கருத்து வளத்தாலும் சொல் நயத்தாலும் பழமையானவை.

மெழுகுவர்த்தி ஏன் எரிகிறது? என்ற கீழ்க்காணும் கவிதையை சைதை செல்வராஜ் எழுதியுள்ளார்.

இந்த மெழுகுவர்த்தி ஏன் எரிகிறது?
இறந்தவனுக்கு அஞ்சலியா?
இல்லை இருப்போர்க்கு எச்சரிக்கையா?
இந்தச் சிலுவை எதைக் குறிக்கிறது?
இறந்து விட்டவர் பட்ட வேதனையையா?
இல்லை மீட்பின் சின்னத்தையா?
இந்த மலர் வளையங்கள்
அன்புப் பரிசுகளா இல்லை கடமையின்
கோலங்களா?
இந்த அழுகைகள் பாசத்தின் பிணைப்பா?
இல்லை பணத்தின் எதிர்ப்பா?
இந்த மெழுகுவர்த்தி ஏன் எரிகிறது?
இறந்தவனுக்கு அஞ்சலியா?
இல்லை இருப்போர்க்கு எச்சரிக்கையா?[14]

வாழ்க்கையின் நிலைமையினை எளிமையாக விளக்கும் வகையில் இக்கவிதை படைக்கப்பட்டுள்ளது.

இன்ப உலகம் இயற்றுவோம் என்னும் கவிதையில் நல்லைக்கவி இளங்கோவன் இன்ப உலகம் இயற்றுவதற்கு இன்றைய மக்களை அழைக்கிறார். அக்கவிதை பின்வருமாறு அமைந்துள்ளது.

இன்ப உலகம் எழில் உலகம்
இயற்றுவோமடா - தோழா

இயற்றுவோமடா

........................

உழைப்புக் கேதான் உயர்வு தந்து

உழையார் தம்மையும் உழைக்கச் செய்து

பிழைப் பெல்லார்க்கும் பிரியமாகப்

பெருகும் செல்வம் பிரித்துக் கொடுத்து

வளப்பம் மிகுந்த இயற்கை யாற்றல்

மக்கட் குதவும் வகையில் மாற்றி

இளைப்பும் நோயும் இல்லை யென்றாக்கி

எவரும் மகிழ்ந்தே இருக்கும் படியாய்[15]

'இடம் மாறினார்' எனும் தலைப்பில் தயாவினால் படைக்கப்பட்ட கவிதை பின்வருமாறு அமைந்துள்ளது.

கிழக்கும் மேற்கும்

திசைமாறிக் கொண்டால்

வழக்கும் சொல்லும் மாறும்

அவ்வளவு தான்

வடக்கும் தெற்கும்

இடம் மாறிக் கொண்டால்

தடங்கள் பெயர்கள் மாறும்

அவ்வளவுதான்

வானும் உலகும்

நிலைமாறி நின்றால்

ஞானியர் மூளை குழம்பும்

அவ்வளவு தான்

ஆனால்

ஏய்ப்பவர்

உடையவர்

உயர்ந்தவர் என்பவர்களை

உழைப்பவர்

தேய்பவர்

தாழ்ந்தவர் என்பவர்களை

சற்றே விலக்கி வேறிடம் நிறுத்தினால்

வழக்கும் சொல்லும்

தடமும் பொருளும்

ஞானமும் போதமும்

மட்டுமா?

இங்கு எல்லாமுமே மாறும்!

உயிர்கள் எல்லாமுமே வாழும்![16]

திசைகளின் மாற்றத்தினை உயர்வு, தாழ்வு என்ற சமூக ஏற்றத்தாழ்வு மூலம் நீக்கி ஒன்றுபட்டு வாழவேண்டும் என்ற சிந்தனையின் விளைவாக இக்கவிதை படைக்கப்பட்டுள்ளது.

சிலுவைத் தரிசனம் என்ற கவிதையில் இயேசு பெருமானின் சிலுவைப் பாடுகளை நினைந்து உருகி வேண்டுவதாக நெஞ்சத்தரசு இக்கவிதையினைப் படைத்துள்ளார்.

இயேசுவைச்

சிலுவையில் தரிசனம் செய்கிறேன்!

தரையில் விழுந்து

சிதறிக் கதறுகின்றன,

என் கண்கள்!

இயேசுவின்

சிலுவைப்பாடுகளை

எழுதத் தொடங்குகிறேன்!

எழுத முடியாமல்

நடுங்குகின்றன

என் விரல்களும் எழுதுகோலும்!

இயேசுவின்

ஏழு வார்த்தைகளை விதைக்கிறேன்

வார்த்தைகளின்

துன்ப வெப்பம்

தாங்க முடியாமல்

உருகத் துடிக்கிறது

என் இதயம்!

இயேசுவின்

குருதி வழியும் பாதங்களில்

'என்'னையே அர்ப்பணிக்கிறேன்

காணாமல் போகிறேன்

'நான்'[17]

எனத் தன்னை உட்படுத்தி கவிதை படைத்துள்ளார்.

கீரையம்மா, கீரை என்ற கவிதையில் ஆர்.ஆர்.என். ஜார்ஜ் பல வகையான கீரைகளின் மகத்துவத்தை விளக்குகிறார்.

கீரையம்மா கீரை

கிள்ளி எடுத்த கீரை

வாரி வாரித் தின்ன

வகை வகையாய்க் கீரை

முருங்கையிலைக் கீரை

முதல் தரமாம் கீரை

பெருக இரத்தம் கீரை

பிணிகள் தீர்க்கும் கீரை

அகத்தியிலைக் கீரை

அழுக்குப் போக்கும் கீரை

மிகச் சிறந்த கீரை

மேலோர் போற்றும் கீரை

.....................................

கொத்து மல்லிக்கீரை

குணமாம் உள்ளிக் கீரை

சத்துள்ள கீரை

சமைக்கப் பல கீரை

எத்தனையோ கீரை

இறைவன் தந்த கீரை

அத்தனையும் உண்ண

அதிகச் செலவில்லை

சத்துணவு கீரை

சமைத்து உண்ணக் கீரை

இத்தினமே வீட்டில்

நட்டிடுவீர் கீரை[18]

உடல் ஆரோக்கியத்திற்கு இன்ன வகையான கீரைகள் நாள்தோறும் உண்ணப் பயன்படுத்த வேண்டும் என்ற நோக்கில் இக்கவிதை அமைந்துள்ளது.

**மரபுக்கவிதைகள்**

பல நூற்றாண்டுகளாக நிலைத்து நிற்கும் தமிழிலக்கியத்தின் பெரும்பகுதி மரபுக் கவிதைப் படைப்புகளே ஆகும். இதழ்கள், செய்தித் தாள்கள் முதலியவற்றில் மரபுக்கவிதைகளோடு, பெரும்பான்மையாகப் புதுக்கவிதை இடம்பெற்றுள்ளது. ஆனால் பூக்கூடையில் யாப்பு மரபுகளை ஒட்டி எழுதப்பெற்ற கவிதைகள் அதிக இடத்தைப் பெற்றுள்ளன. இக்கவிதைகளில் இயேசுவின் பெருமை, சமுதாயச்சீர்கேடுகள் ஆகியவை இடம்பெற்றுள்ளன.

இயேசு கிறிஸ்துவின் பெருமைகள் இடம்பெறாத கவிதைகளே இல்லை எனலாம். இவ்வுலகத்தையும், உலகிலுள்ள பொருட்களையும் படைத்தவர் இறைவனே; அவருடைய சிறப்பை உரைப்பதில் அளவில்லா மகிழ்ச்சியினை உடையவர்களாகக் கவிஞர்கள் திகழ்கின்றனர் என்பதனை அவர்கள் இயற்றியுள்ள கவிதைகளின் வாயிலாக அறிந்துகொள்ள முடிகின்றது. உலக மக்கள் இன்புற்று வாழவேண்டும் என்பதற்காக நோயுற்றவர்களைக் குணப்படுத்தியதோடு தன்னுயிரையே சிலுவைக்கு இரையாக்கிய இறை மகனின் திருவடியைப் போற்றி வணங்கிட வேண்டும் என்பதைப் பாதம் பணிந்திடுவாய் என்ற கவிதையின் மூலம் ஜோ.தெய்வநீதி விளக்கிக் காட்டுகின்றார்.

அன்றொரு நாளில் ஆண்டவர் இயேசு

 அடியவர்சூழ எருசலை நகர்தனுக்கே

சென்றிடும் போது அழகிய நகரினை

 சேர்ந்திடும் அந்த மாலைப் போதினிலே

என்று வருந்திடும் தொழுநோய் யதனால்

 எரிந்திடும் உடலால் நலிந்து நின்றனரே

 ..........................................................

 ..........................................................

மெத்தவும் வழங்கிய கர்த்தன் இயேசுவுக்கே

மேலாம் நன்றியை படைத்து தானுண்டோ?

அத்தன் இயேசுவின் ஆணிகடாவிய அழகிய பாதத்திலே

அண்ணலே என்றே தலையினைச் சாய்த்து

நித்தமும் பணிவதே மெத்தவும் நலமன்றோ

நீயும் இன்றே உடனே நன்றியைப் படைத்திடுவாய்[19]

உலக மக்கள் இன்புற்று வாழ வேண்டும் என்பதற்காக நோயுற்றவர்களைக் குணப்படுத்தியதோடு தன்னுயிரையே சிலுவைக்கு இரையாக்கிய இறைமகனின் திருவடியைப் போற்றி வணங்கிட வேண்டும் என்பதைக் கூறுகிறார்.

மனித சமுதாயத்தில் நடக்கின்ற சீர்கேடுகளைக் கண்ணுற்ற கவிஞர் தியாரூ ஓ... மானிடரே... என்ற தலைப்பில் கவிதையொன்றைப் படைத்துள்ளார். வீண் கதைகளையும் பண்டைக்காலக் கதைகளையும், முடியாட்சிக் காலத்தைப் பற்றியும், அடுத்தவர்களைப் பற்றிய ஆராய்ச்சிகளையும் செய்துகொண்டு காலத்தைக் கழிக்கும் மனிதர்களைப்பற்றி மிகவும் வருந்தத்தக்க நிலையில் இக்கவிதை படைக்கப்பட்டுள்ளது.

மற்றவனைக் காண்பித்து மாபெரிய பாவியென்று

குற்றம் சுமத்துகின்ற கூன்விழுந்த மானிடரே

உங்கள் முகத்தின்மேல் உட்கார்ந்த ஈக்களையே

விரட்ட நினைவின்றி வீண்கதைகள் பேசுவதில்

என்ன சுகம் கண்டீர்? எது நலம் கண்டீர்?

படைக் கதைகளையும் போய் மறைந்த நாட்களையும்

முன்னர் காலத்தில் முடியாட்சி நடந்ததையும்

திண்ணையிலே உட்கார்ந்து தொண்டை நீர் வற்ற வற்ற

இராப்பகலாய் பேசுவதில் இன்பமென்ன கண்டீரோ?

கற்காலம் பற்றிக் கதைகதையாச் சொல்வதனால்

தற்காலப் பிரச்சனைகள் தீர்ந்திடுமோ பெரியோரே?

அடுத்தவரைப் பற்றியே ஆராய்ச்சி செய்வதனால்

உங்களது வீடு உயர்ந்திடுமோ மானிடரே?

பசித்த வயிற்றுக்குப் புசிக்க உணவின்றேன்

பானையிருந்தும் பயனிலா நிலை தானே

இந்நிலை என்றைக்கு அழிந்து போகுமோ[20]

என்று வருத்தப்படுகிறார்.

தவத்திரு குன்றக்குடி அடிகளார் இறந்தபிறகு அவர் நினைவாக எழுதப்பட்டதுதான் **இன்னுமொரு துறவி வேண்டும்** என்னும் கவிதை. அக்கவிதை பின்வருமாறு:

சமுதாய நீதிக்கே

சார்பாக நின்றிடுவார்

சமத்துவ சமதர்மச்

சிந்தனையாற் செயல்படுவார்

சமாதான உலகத்தைச்

சமைக்கவும் குரல் கொடுப்பார்

சமுதாய உணர்வு கொண்ட

சன்யாசியாய்த் திகழ்ந்தார்[21]

இக்கவிதை அவரின் பண்பினையும், தமிழ்ச் சமூதாயத்தின்மீது அவர் கொண்டிருந்த பற்றினையும் தெளிவுபடுத்துகிறது.

**இசைப்பாடல்கள்**

இசைப்பாடல்கள் என்பன பாடுதலுக்கும் படித்தலுக்கும் உரியன. பூக்கூடை இதழ்களில் 'பாட்டும் பண்ணும்' என்ற தலைப்பின் கீழ் பாடல்கள் வெளிவந்துள்ளன. அனைத்துப் பாடல்களும் இயேசு கிறிஸ்துவைப் போற்றுவனவாய் அமைந்துள்ளன. தயா எழுதிய **இயேசுவைப்** பாடுவேன் எனும் பாடலில் தமிழின் மென்மையும், புலவர் பெருமக்களின் வாயினால் மலர்ந்த சிறப்பினையும் கொண்டு இயேசு கிறிஸ்துவைப் பாடுவதாக அமைந்துள்ளது. அப்பாடல் பின்வருமாறு:

**எடுப்பு**

இனிக்கும் தமிழால் என் இயேசுவைப் பாடுவேன் - அவர்

எழில் மிகும் அடிதனில் இசைமழை பொழிவேன்

**தொடுப்பு**

கனிச்சுளை பாலுடன் கலந்திட்ட தேனாய்

கன்னலின் சாறாய் கற்கண்டு பாகாய் - இனிக்கும்

வள்ளுவர் தமிழை அள்ளியே பருகி

வளமிகு குறளால் உளமகிழ் வுடனே

வானவர் இயேசுவை வாழ்த்தியே பாடுவேன்

தந்தை யிறைவன் தனிப்பெரும் மைந்தரே

எந்தன் தலைவராம் ஏசு

வள்ளல் பெருமான் வடலூர் அண்ணல்

வாயினில் மணந்த வளமுடைத் தமிழால்

வல்லவர் இயேசுவை வணங்கியே பாடுவேன்[22]

எனும் இப்பாடல் தமிழ் மரபு வழிநின்று, தமிழ்ப்பற்றையும் கிறிஸ்துவிடம் வைத்துள்ள பற்றினையும் ஒருசேர வெளிப்படுத்திக் காட்டும் வகையில் அமைந்துள்ளது.

புதுவாழ்வு என்னும் கவிதையில், இயேசு உயிர்த்தெழுகின்ற நிகழ்ச்சியே மக்களுக்குப் புது வாழ்வினைத் தருவதாகும் என்று தயா பாடிய பாடல் பின்வருமாறு:

புது வாழ்வு நமக்குப் புதுவாழ்வு - இது
பெரு வாழ்வு கிறிஸ்து தரும் வாழ்வு

1

பிறந்தவர் இறப்பது பொது மரபு - இங்கு
இறந்தவர் எழுவதோ புதுச்சிறப்பு
இறைவனின் திருமகன் உயிர்த்தெழுந்தார் - கொடும்
மரணத்தின் பிடியினைத் தகர்த்தெறிந்தார் - (புது)

2

கல்லறை உலகினில் பல உண்டு - அவை
சொல்லிடும் கதைகளில் கனிவுண்டு
வல்லவர் இயேசுவின் கல்லறையோ - அவர்
இல்லையே என்னிடம் என்றிடுதே - (புது)

3

இயேசுவின் உயிர்த்தெழல் பெருநிகழ்ச்சி - அவர்
நேசரின் வாழ்விலும் வரும் நிகழ்ச்சி
நாசமோ மோசமோ நமக்கில்லை - விசு
வாசிகள் தமக்கு இறப்பில்லை - (புது)[23]

பூக்கூடை இதழ்களில் வந்துள்ள பாடல்கள் பெரும்பான்மையும் கருநாடக இசையில் பாடக்கூடியனவாகும். நல்லைக்கவி இளங்கோ எழுதிய காட்சி எனக்குக் கொடாததேன் என்ற பாடல் பின்வருமாறு:

**பல்லவி**

காட்சி எனக்குக் கொடாததேன் - அய்யா
காட்சி எனக்குக் கொடாததேன்?

**அனுபல்லவி**

மாட்சியில் மிக்க வானகத் தந்தையே
தாழ்ச்சியில் என்னைத் தடுத்து நிறுத்திட - (காட்சி)

**சரணம்**

யேசுக் கிறிஸ்துவாய் இங்குநீர் வந்தீர்
ஏழைகட் குதவி இனிமையுந் தந்தீர்
நேசக் கரத்தினை நீட்டியே என்னை
நித நிதம் கைதூக்கி நிறுத்தியே காத்திட - (காட்சி)

மகனென்னைத் தந்தை நீர் மறப்பதும் உண்டே
மகன்நான் உம்மை மறப்பதும் உண்டோ
புகலெனச் சேர்ந்த புதல்வனாம் என்னைப்
போவெனப் புகன்றால் பொறுப்பனோ அய்யா - (காட்சி)

என்று ஏழையாகிய தனக்கு இறைவன்
காட்சி கொடுக்காததற்கு என்ன காரணமோ,
யான் அறியவில்லையே என்று வருத்தமுறுகின்ற
வகையில் இப்பாடல் அமைந்துள்ளது.

**பூக்கூடையில் இடம்பெற்றுள்ள கவிதைகளின் சிறப்பம்சம்**

கிறித்தவ இதழான பூக்கூடையில் கவிதை அதிக அளவில் இடம்பெற்றுள்ளது. அதிலும் சிறப்பாக மரபுக்கவிதைகள் கூடுதலாக இடம்பெற்றுள்ளன. கவிதைகள் அனைத்தும் சமுதாயம், சமயம், சமூகச் சீர்கேடுகளைச் சுட்டிக் காட்டியுள்ளன. சமயம் சார்ந்த இதழாக இருப்பதால் விவிலியக் கருத்துக்கள் அதிகமாக இடம்பெற்றுள்ளன. கிறிஸ்துமஸ், உயிர்த்தெழுதல், புதுவருடம் முதலிய பண்டிகைக்கால நாட்களில் சிறப்பாசிரியரின் கவிதைகள் இடம்பெற்றுப் பூக்கூடை இதழுக்கு மேலும் அழகூட்டுகின்றன. கிறித்தவர் அல்லாத எழுத்தாளர்களின் மனிதநேயம் சார்ந்த கவிதைகளும் இடம்பெற்றுள்ளன. தற்காலத்தில் கவிதை உலகில் மதிப்பும் மரியாதையும் வளர்ந்து வருகின்ற நேரத்தில் பிற இதழ்களில் இல்லாத வகையில் பூக்கூடையில் பெண் எழுத்தாளர்களின் கவிதைகள் அதிக அளவில் இடம்பெற்றுள்ளன. பூக்கூடையில் கவிதைகள் 20 விழுக்காடு இடம்பெற்றுள்ளன.

**சிறுகதை**

சிறுகதை மனித வாழ்வின் உணர்வுகளை அப்படியே வெளிப் படுத்துகின்றது. பூக்கூடையில் அதிக அளவு சிறுகதைகள் இடம்பெற்றுள்ளன. பூக்கூடையில் வெளிவந்துள்ள சிறுகதைகளில் கிறித்தவச் சமயக் கருத்துக்கள் மிகவும் துல்லியமாக வெளிக்கொண்டு வரப்பட்டுள்ளன. ஒருசில கதைகளின் கதைக்கரு மட்டும் சான்றாகத் தரப்பட்டுள்ளன.

**கதைக்கரு- விளக்கம்**

கதையின் கரு ஆசிரியர் எதனை வெளிப்படுத்த நினைக்கின்றாரோ அதைப்பொறுத்து அமைகின்றது.

ஒரு குறிப்பிட்ட படைப்பின் வடிவத்தை அதன் உள்ளடக்கம் மட்டுமே நிர்ணயிப்பதில்லை. அத்தோடு சேர்த்துப் பல அம்சங்களும் தீர்மானிக்கின்றன. ஒரு குறிப்பிட்ட வர்க்கத்தில் மனோபாவங்கள் அந்தக் குறிப்பிட்ட சமூகத்தின் கலாச்சார வளர்ச்சியை, அண்டைச் சமூகங்களின் கலாச்சாரத் தாக்கம், பண்டைய மரபுகளின் செல்வாக்கு, அதிலிருந்து விடுபடத்துடிக்கும் புது முயற்சிகள் ஆகிய இன்னோரன்ன அனைத்து அம்சங்களும் குறிப்பிட்ட கலைப்படைப்பு வடிவத்தின் மீது செல்வாக்கு செலுத்தி பாதிப்பை ஏற்படுத்தும் எனலாம்.[25]

இதனடிப்படையில் இக்கதை ஆசிரியர்களின் சமூக கலாச்சாரத் தாக்கம், வாழும் சூழல் அமைப்பு, பழகும் மக்களின் மனநிலை ஆகியவற்றின் அடிப்படையில் கதைகளின் மையப்பொருள்கள் அமைந்துள்ளன.

சமூகத்தில் மண்டிக்கிடந்த சாதி வேற்றுமைகளும் அங்கொன்றும் இங்கொன்றுமாகத் தெரிந்த ஊழல்களும், வேறு பல சிக்கல்களும் சிறுகதைகளின் கருப்பொருள்கள் ஆயின.[26]

கதை என்பது வெறும் கண்ணாடி வேலையாக இருப்பதாகத் தெரியவில்லை. அது கடந்தகால அனுபவத்தோடு கூர்ந்து நோக்கில் புரிந்து கொண்ட உண்மை நிலைக்கு மகத்தான கலைவடிவம் கொடுப்பதன் மூலம் மக்களின் நிகழ்காலச் சிக்கல்களைப் படம் பிடித்துக் காட்டுவதோடு வருங்கால வாழ்வுக்குக் குறிப்பான வழிகாட்டுவது ஆகும்.[27] இக்கதைக் கரு விளக்கங்களின் அடிப்படையில் பூக்கூடை இதழ்களில் வெளிவரும் கதைகள் அமைந்துள்ளன.

**பூக்கூடைச் சிறுகதைகளின் கரு**

ஓர் உள்ளம் (மார்ச் *1980*) என்ற கதை பெண்மையின் உன்னத குணங்களையும், பெண்மையின் உயர்வையும் சித்திரித்துக் காட்டுகிறது.

உபதேசம் (பெப்ருவரி, 1982) என்ற சிறுகதையில் நாம் வயசிலேயும், படிப்பு, அந்தஸ்து முதலியவற்றிலேயும் மட்டும் பெரியவங்களாயிருந்தால் போதாதுப்பா, நடத்துகிற முறையிலேயும் நாம் பெரியவங்கதான் என்பதை நிரூபித்துக் காட்டணும் என்று ராஜன் உபதேசம் செய்கிறான். ராஜனுடைய ஊழியன் உடைத்த குளிர்ப்பானப் புட்டிக்காக அதனுடைய விலையை அவனுடைய ஊதியத்தில் பிடித்தம் செய்ததுடன் வேலையிலிருந்தும் அனுப்பிவிடுவதாகவும் மிரட்டுகிறான். உபதேசம் செய்யும் ராஜன், தான் செய்த உபதேசத்தை இருபத்தி நான்கு மணிக்குள் மறந்து விட்டார். இக்கதையை பிரசாத் ரிச்சர்ட் எழுதியுள்ளார்.

ஒரு மிருகம் மனிதனாகிறது (ஆகஸ்டு 1982) என்ற கதையை சரோஜா எழுதியுள்ளார். தங்கள் பாவத்தை உணர்ந்துவிட்டால் கடவுள் முன்னிலையில் எல்லோருடைய பாவமும் மன்னிக்கப்படுமென்றும், பாவமென்ற மிருகத்தினால் பிடிக்கப்பட்ட மனிதன் தவறை உணர்ந்து நல்ல மனிதனாக மாற முடியும் என்றும் கதாசிரியை தெளிவாக இக்கதையில் சித்திரிக்கிறார்.

அவனே கிறிஸ்தவன் (ஜுன் 1983) என்ற கதை, 'வேண்டாம் என்று ஒதுக்கப்பட்ட கல் மூலைக்கு தலைக்கல்லாய் உபயோகப்பட்டதைப் போல', ஒதுக்கப்பட்ட பிச்சைக்காரன் தனக்குப் பிச்சை போடாதவனுக்கு உதவி செய்வதாக அமைந்துள்ளது. இக்கதையினை இளையவன் எழுதியுள்ளார்.

திரும்பி வரும் வார்த்தைகள் (மார்ச் 1984) என்ற கதையை வினையை விதைத்தவன் வினையை அறுப்பான் என்னும் பழமொழிக்கு ஏற்ப திருமதி. பிரியா ஜெயசீலன் படைத்துள்ளார். இக்கதை பெற்றோர்களைப் புறக்கணிக்கும் பிள்ளைகளுக்குப் பாடமாக அமைந்துள்ளது.

அன்பின் விலை (ஆகஸ்டு 1985) என்ற சிறுகதையின் ஆசிரியர் மது இச்சிறுகதை தாயின் பாசத்தைப் படம் பிடித்துக் காட்டுகின்றது. அன்புக்கு, ஏழை, பணக்காரன் என்ற பாகுபாடு இல்லை எனும் கருத்தை மையமாகக் கொண்டது.

அர்ப்பணிக்கிறேன் (மார்ச் 1987) என்ற கதையில் கிறித்தவத் தம்பதிகளான மாலுவுக்கும் ஸ்டீபனுக்கும் திருமணம் நடந்து பல ஆண்டுகள் ஆயினும் குழந்தை இல்லை. இறைவன் கருணையால் ஆண் குழந்தை பிறக்கிறது. பிறந்த குழந்தை சிறுவயதிலே ஊனமடைந்து விடுகிறது. ஊனம் அடைந்த குழந்தையின் உள்ளம் ஊனம் அடையாமல், உறுதி தளராமல் ஊருக்கு உழைக்கவும் ஆண்டவருக்கு வேலை செய்வதிலும் உறுதி கொள்கிறது என்பதை இக்கதையின் மூலம் படம் பிடித்துக் காட்டுகிறார் ஸ்வீட்லின் பிரபாகர்.

நட்பு (ஜுலை - ஆகஸ்டு 1996) என்ற சிறுகதையைப் பத்மாவதி கென்னத் எழுதியுள்ளார். பிரேமா, சுசீலா என்ற இரு ஊனமுற்ற பெண்களின் மனநிலையைப் பற்றி இக்கதை அமைந்துள்ளது. நாம் நமக்கு என்ன செய்ய விரும்புகிறோமோ அதைப் பிறர்க்கு நாம் செய்ய வேண்டும் என்ற கருத்தினை இக்கதை கருவாகக் கொண்டுள்ளது.

விடுதலை (ஜுலை - ஆகஸ்ட் 1997) என்ற கதையைத் திருமதி ஸ்வீட்லின் பிரபாகர் எழுதியுள்ளார். பாலு, சேகர் ஒரே வகுப்பில் படிக்கும் மாணவர்கள். சேகரின் தாத்தா சுதந்திர போராட்டத்தில் கலந்துகொண்டு ஜெயிலுக்குப் போனவர். அதனால் ஜெயிலுக்குப் போன குடும்பம் என்று ஊரில் உள்ள மாணவர்களிடம் 'சேகரின் தாத்தா திருடிட்டு ஜெயிலுக்கு போனவரு' என்று சொல்லி யாரும் இவன்கிட்டே பேச வேண்டாம். இவனும் ஒரு திருடன்தான், என்று பாலு கேலி செய்வான். ஒரு வாரமாக பாலு வகுப்பிற்கு வரவில்லை, காரணம் பாலுவின் அப்பா கையூட்டு வாங்கியதால் போலீசாரால் சிறையிலடைக்கப்பட்டார். மீண்டும் பாலு வகுப்பிற்கு வந்தபொழுது மாணவர்கள் யாரும் அவனிடம் பேசவில்லை.

சேகர் அவனை ஆதரவாகத் தொட்டு நீ வராமலிருக்கும்போது ஆசிரியர் நடத்திய பாடங்களை உனக்காக எழுதியுள்ளேன் என்று கொடுத்தான். பாலு வெட்கித் தலைகுனிந்து அழுது என்னை மன்னித்துவிடு என்றான். 'உங்கள் சத்துருக்களைச் சிநேகியுங்கள் நன்மை செய்யுங்கள்' என்ற விவிலிய வாக்கிற்கு ஏற்ப ஸ்வீட்லின் பிரபாகர் இக்கதையை எழுதியுள்ளார்.

**பூக்கூடையில் வெளிவந்த சிறுகதைகளின் சிறப்பம்சம்**

கிறித்தவ இதழான பூக்கூடையில் சிறுகதை அதிக அளவில் இடம் பெற்றுள்ளது. சிறுகதைகள் சமுதாயம், சமயம், சமூகச் சீர்கேடுகளைச் சுட்டிக்காட்டியுள்ளன. சமயம் சார்ந்த இதழாக இருப்பதால் விவிலியக் கருத்துக்களை மையமாகக் கொண்டு கதைகள் அதிக அளவில் எழுதப்பட்டுள்ளன. கதைகள் கருத்தாழம் மிக்கவையாகவும் சமூக ஏற்றத்தாழ்வுகளைச் சுட்டுவனவாகவும் அமைந்துள்ளன. பூக்கூடையில் அனைத்து சமயத்தினரும் ஏற்றுக்கொள்ளும் வகையில் கதைகள் இடம்பெற்றுள்ளன. சிறுகதைகள் அனைத்தும் எளிமையான நடையில் சிறுகதையின் இலக்கணத்திற்கு ஏற்ப அமைந்துள்ளன. பூக்கூடையில் சிறுகதை 15 விழுக்காடு இடம்பெற்றுள்ளது.

**நாடகம்**

பூக்கூடையில் குறைந்த அளவே நாடகங்கள் இடம்பெற்றுள்ளன. ஒரு சில நாடகங்களின் கதை மட்டும் சான்றாகத் தரப்பட்டுள்ளன.

ஒரு ஏழையின் **கண்ணீர்** (நவம்பர் 1980) என்ற நாடகம் மனந்திரும்பிய தனது தம்பிக்கே மாட்டுக் கொட்டகையில் மறைந்துகொள்ள இடம் தராத திருஞானம் மாட்டுக் கொட்டகையில் பிறந்த இயேசு கிறிஸ்துவுக்கு விழா கொண்டாடுகிறார். இவர் வருடத்தில் ஒரு நாள் தொழிலாளிகளுக்குக் கொடுக்கும் கிறிஸ்துமஸ் அன்பளிப்பை அவர்கள் விருப்பத்திற்குக் கொடுக்காத கல்நெஞ்சம் உடையவர்.

தன் கௌரவத்திற்காகப் பண்டிகை கொண்டாட நினைத்த அன்பற்ற தன்மையை நீதிபதி சாலமோன் மூலம் இறைவன் உணர்த்தியது போல கிறித்தவ மக்கள் உணரும் வகையில் இந்நாடகம் அமைந்துள்ளது.

டேவிட் சித்தையா எழுதிய குறுக்குவழி (ஆகஸ்டு 1996) என்னும் நாடகம் சமுதாயத்தில் நடக்கும் குறுகிய எண்ணங்களைப் படம்பிடித்துக் காட்டுகின்றது.

பொறியியல் சிவில் படித்தவர்களுக்கு குமார் வேலை செய்கின்ற அலுவலகத்தில் காலியிடம் ஒன்று இருந்தது. அவ்வேலையை எம்.எஸ்.சி. படித்த தனது தம்பி பன்னீர்செல்வத்துக்கு கொடுக்குமாறு மனைவி லதாவும், தனது நண்பன் அருமை நாயகத்தின் மகனுக்கு வேலையைக் கொடுக்குமாறு குமாரின் அண்ணன் சேகரும் கேட்டனர். ஆனால் குமார் தகுதியும் அறிவும் அனுபவமும் நிறைந்த ஒருவனுக்குத்தான் வேலை என்று முடிவாகக் கூறிவிட்டான். நேர்முகத்தேர்வில் தகுதி வாய்ந்த குணசேகர் என்பவரைத் தேர்ந்தெடுத்து இருப்பதாக முதலாளியிடம் கூறுகிறான் குமார். முதலாளி அரசாங்கத்தில் வேலை பார்க்கும் அதிகாரியின் மகனுக்குக் கொடுத்தால் அரசாங்கத்தின் கான்ட்ராக்டுகள் எல்லாம் தமக்குக் கிடைக்கும் என்று கூறி அவருக்குத்தான் வேலை என்கிறார்.

இயேசு கிறிஸ்து குறுக்கு வழியில் செல்லாமல் எதிர்நீச்சல் போட்டதால் சிலுவையில் அறைந்து கொல்லப்பட்டார். அவரைப் பின்பற்றும் நானும் எதிர்நீச்சல் காரன்தான் என்று கூறி தனது ராஜினாமா கடிதத்தைக் கொடுத்து விடுகிறான் குமார்.

விவிலியக் கருத்துக்களின் வழியாகக் கிறித்தவ மக்களின் வாழ்க்கை முறைகளையும் வாழவேண்டிய முறைகளையும் பற்றி விளக்கும் வகையில் பல நாடகங்கள் பூக்கூடையில் வெளிவந்துள்ளன.

பி. ஆர்தல்பால் அருணாசலம் எழுதிய அன்பா? ஆஸ்தியா? (நவம்பர் - டிசம்பர் 1996) என்னும் நாடகம், வேதனை உண்டாக்கும் வழி என்னிடத்தில்

உண்டோ என்று பார்த்து, நித்திய வழியிலே என்னை நடத்தும் (சங்: 139-24) என்ற விவிலிய வசனத்தை மையமாக வைத்து சித்திரிக்கப்பட்டுள்ளது.

தினகரன், குளோரி ஆகியோர் பணக்காரக் கிறித்தவர்கள். இவர்களுடைய மகன் ஆனந்த் என்பவன், தினகரன் - குளோரி தம்பதியினர் தங்கள் மகன் மீது அன்பு வைக்காது எப்பொழுதும் பணம் சேமிக்க வேண்டும் என்ற நிலையில் உள்ளவர்கள். இதனால் ஆனந்துக்கு ஏழைப் பெண் ஸ்டெல்லாவிடம் இருந்து அன்பு கிடைத்தது. இது தினகரன் தம்பதியாருக்குப் பிடிக்கவில்லை. காரணம் ஸ்டெல்லா ஏழை. சில வருடங்கள் கடந்த பிறகு தினகரின் தொழிலில் நஷ்டம் ஏற்பட்டது. ஆனால் ஸ்டெல்லா வசதியான வாழ்க்கை வாழ்ந்தாள். ஒருநாள் இருவர் குடும்பமும் சந்திக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. அப்பொழுது, தான் செய்த பாவத்துக்காகத் தன்னை ஆண்டவர் தண்டித்துவிட்டார் என்றாள் குளோரி.

'எந்தப் பாவியையும் புறம்பே தள்ள மாட்டேன்' என்று கர்த்தர் கூறியதைக் கூறி ஸ்டெல்லா அவளைச் சமாதானப்படுத்துகிறாள். நாம் மற்றவர்களிடம் காட்டும் அன்பு, தயவு, இரக்கம் ஆகியவை நம் வாழ்க்கையைச் செழிப்படையச் செய்யும் என்கிற கருத்தை விளக்கி நாடகம் நிறைவடைகிறது.

ஆர்தர்பால் எழுதிய தடம் மாறிய ஜான்சி (சனவரி - பிப்ரவரி 1995) என்னும் நாடகம், தேவன் தன் பிள்ளைகள் வெட்கப்பட்டுப் போக ஒருபோதும் விட மாட்டார். கோணலானது செவ்வையாகிக் கரடுமுரடானவை சமமாக்கப்படும் (ஏசாயா. 40:4) என்ற விவிலிய வசனத்தை மையமாக வைத்து எழுதப்பட்டுள்ளது.

ஜான்சி கிறித்தவப் பெண் என்றாலும் விவிலியம் படிப்பதும் செபம் பண்ணுவது கிடையாது. எப்போதும் ஆடல், பாடல் என்றே சுற்றிக்கொண்டிருப்பாள். மீனா என்ற தோழியின் மூலமாகப் போதைப் பொருளுக்கு அடிமையாகிவிட்டாள். தன் மகளின் நிலையைக் கண்ட எமிலி தன் மகளுக்காகத் தினந்தோறும் கர்த்தரிடம் கண்ணீரோடு செபித்தாள். சில

மாதங்களுக்குப் பின்னர் ஜான்சி முழுமையாகக் குணம் அடைந்து விவிலியத்தை அடிக்கடிப் படித்தாள். போதகரிடம் ஜான்சி என் உள்ளத்தில் பிறந்த கிறிஸ்துவின் நற்செய்தியை இந்தப் புத்தாண்டு முதல் கிறிஸ்துவை அறியாத மக்கள் மத்தியில் எடுத்துச் செல்வேன் என்றாள். இத்துடன் நாடகம் நிறைவு பெறுகிறது.

கர்த்தர் தன் விசுவாசிகளை ஒருபோதும் கைவிட மாட்டார் என்ற விவிலிய வாக்கிற்கு ஏற்ப எமிலியின் வாழ்க்கை அமைந்துள்ளதை நாடகம் வெளிப்படுத்துகிறது.

**பூக்கூடையிலுள்ள நாடகங்களின் சிறப்பம்சம்**

கிறித்தவ இதழான பூக்கூடையில் நாடகம் என்னும் இலக்கிய வகை குறைந்த அளவே இடம்பெற்றுள்ளது. நாடகங்கள் சமுதாயம், சமயம், சமூகச் சீர்கேடுகளைச் சுட்டிக் காட்டியுள்ளன. சமயம் சார்ந்த இதழாக இருப்பதால் விவிலிய வசனங்களை மையமாகக் கொண்டு நாடகங்கள் எழுதப்பட்டுள்ளன. விவிலியக் கருத்துக்களின் வழியாகக் கிறித்தவ மக்களின் வாழ்க்கையைச் சித்திரிக்கும் நாடகங்களும் இடம்பெற்றுள்ளன. நாடகங்களின் வாயிலாகக் கிறித்தவ மக்களின் வாழ்வியல் முறைகளையும் பண்பாட்டுக் கூறுகளையும் உணர்ந்து கொள்ள முடிகிறது. பூக்கூடையில் நாடகம் 10 விழுக்காடு இடம்பெற்றுள்ளது.

**கட்டுரை இலக்கியம்**

ஓர் இலக்கிய வடிவம் வளர வளர அது பல்வேறு வகைகளில் சிறந்து செழிக்கின்றது. அந்த இலக்கிய வடிவம் வளர்ச்சி நிலை அடைந்த பின்னர் அதனை வகைப்படுத்துவது எளிமையாகிறது. பூக்கூடை இதழில் இடம்பெற்றுள்ள கட்டுரை இலக்கியங்களைக் கீழ்க்காணும் முறையில் பகுக்கலாம். அவையாவன:

1. வாழ்க்கை வரலாற்று இலக்கியம்
2. பயண இலக்கியம்

3. திறனாய்வு இலக்கியம்

4. கடித இலக்கியம்

**வாழ்க்கை வரலாற்று இலக்கியம்**

பிறர் வாழ்க்கையில் நடந்த நிகழ்வை மையமாக வைத்துப் பல வாழ்க்கை வரலாற்றுக் கட்டுரைகள் வெளிவந்துள்ளன.

**டாக்டர் சந்தோஷம்**

'டாக்டர் சந்தோஷம்' (பிப்ரவரி 1985) எனும் கட்டுரையினைத் தனராசு எழுதியுள்ளார். மருத்துவராக இருந்துகொண்டு அரசியலில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டு இந்தியக் கிறித்தவச் சங்கத்தின் செயலாளராக இருந்து தமது பணியைச் செவ்வனே செய்திருக்கும் பெருமை உடையவர் சந்தோஷம். 1959இல் மூதறிஞர் இராஜாஜி அவர்கள் சுதந்திரக் கட்சியை ஆரம்பித்தார். அதில் அங்கத்தினராகச் சேர்ந்த சந்தோஷம் திறமையாக முன்னேறிச் சென்னை பிரிவுக்குத் தலைவர் ஆனார். மருத்துவம், அரசியல், கிறித்தவச் சங்கச் செயலாளர் என்று தாம் வகித்த பதவிகளில் சிறப்புடன் பணியாற்றினார்.

கிறித்தவப் பெருமக்களுக்கு அவர் விடுக்கும் செய்தி நம் நாடே இலஞ்சத்தில் மூழ்கியிருக்கின்ற நேரத்தில் கிறித்தவ நிறுவனங்கள் எந்தவித இலஞ்சக் குற்றச்சாட்டுக்கும் ஆளாகாமல் முன் மாதிரியாக இருக்க வேண்டும். அப்படியொரு முன்மாதிரியில்லையெனில் அது யூதாஸ் முத்தத்தினால் கிறித்துவைக் காட்டிக் கொடுத்ததற்கு ஒப்பாகும் என்கிறார். இவர் எவ்வளவோ சாதனைகள் புரிந்திருந்தாலும் அதைப்பற்றி பெருமை பேசாமல் எல்லாம் கடவுளின் செயல் என்கிறார். நான் வெறும் இயந்திரமே, கடவுள் என்னை எப்படி இயக்குகிறாரோ அப்படி நடப்பதே என் வேலை என்று அடக்கத்துடன் கூறுவதாக கட்டுரையாசிரியர் தனராசு குறிப்பிட்டுள்ளார்.

இவர்கள் வாழ்க்கையில் இயேசு கிறிஸ்து (ஏப்ரல் 1986) என்னும் தலைப்பில் தி. தயானந்தன் பிரான்சிஸ் தொடர் கட்டுரை ஒன்றினை எழுதியுள்ளார். இக்கட்டுரை இயேசு கிறித்துவினால் ஆட்கொள்ளப்பட்டு அவருடைய தொண்டர்களாகத் திருச்சபைக்கும், நாட்டுக்கும் பணியாற்றியவர்களைப் பற்றி விவரிப்பதாக அமைந்துள்ளது. இவர்கள் யாவருமே பத்தொன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்த இந்தியப் பெருமக்களாவர். ஒரு சிலர் இந்நூற்றாண்டில் வாழ்ந்தவர்கள். இவர்களின் வாழ்க்கை வரலாற்றில் சிறந்தோங்கி நிற்கும் நிகழ்ச்சிகள் மட்டும் இக்கட்டுரையில் எழுதப்பட்டுள்ளன. கங்காதர் சாரங்கி, விஷ்ணு பாஸ்கர், கர்மார்கள், ராமவர்மா, மதுரநாத்போஸ், அப்பு-டேவிட், சிக்கா, தானியேல் என்பவர்கள் அவர்களில் சிலராவர்.

**உலக கிறித்துவத் தமிழ்த்தொண்டர் ஜி.யு. போப்**

உலகக் கிறித்தவர் தமிழ்த் தொண்டர் ஜி.யு. போப் (சனவரி 1985) என்னும் கட்டுரை பத்தொன்பதாம் வயதில் தமிழ்நாடு வந்து அறுபது வயது வரை அயராது உழைத்துத் தமிழுக்கு அரும்பணியாற்றிய போப்பையரைப் பற்றி அமைந்துள்ளது. அவருடைய பிறப்பு, இளமை, கல்வி, தஞ்சையில் அவர் ஆற்றிய பணி, உதகமண்டலத்தில் செய்த தொண்டு, திருக்குறள், நாலடியார், திருவாசகம் முதலிய நூல்களை மொழிபெயர்த்து அவர் ஆற்றிய தமிழ்ப்பணி, இறைப்பணி ஆகியவை சிறப்புடன் ஆராயப்பட்டுள்ளன.

**சி. அருமைநாயகம்**

முதல் கிறித்தவ நாவல் ஆசிரியரான சி. அருமைநாயகத்தின் வாழ்க்கை வரலாற்றினை (மார்ச் - ஏப்ரல் 1997) யோ. ஞானசந்திரஜான்சன் எழுதியுள்ளார். கிறித்தவர்கள் தமிழ் இலக்கியத்திற்கு, குறிப்பாகக் கிறித்தவ இலக்கியத்திற்கு ஆற்றியுள்ள பணியினை வெளிக்கொணர வேண்டும் என்பதே இக்கட்டுரை ஆசிரியரின் நோக்கமாக இருக்கிறது.

சி. அருமைநாயகம் கன்னியாகுமரி மாவட்டத்திலுள்ள நெய்யூரில் இந்து குடும்பத்தில் பிறந்து கொடிய நோயினால் துன்பப்பட்டார் என்றும், பிழைப்பது அரிது என்ற நிலையில் இயேசு கிறித்துவின் மீது நம்பிக்கை வைத்தார் என்றும் கூறப்படுகிறது. நோயிலிருந்து அவர் சுகம் அடைந்து கிறித்துவைச் சொந்த இரட்சகராக ஏற்றுக்கொண்டார்.

இளமையிலேயே அறிவுக்கூர்மையும் உழைப்புத்திறனும் பெற்றதாக கூறப்படும் அருமைநாயகம், 'வந்து நல்லவரம் தந்தனுப்பையா' 'நல்ல தேவனே ஞான ஜீவனே' என்ற கீர்த்தனைகளைப் பாடியுள்ளார். இவர் தேசோபகாரி, மாதர்போதினி, வேதியர் விளக்கம் ஆகிய கிறித்தவ இதழ்களின் வெளியீட்டில் சிறந்த பங்கு வகித்தார். மீதி இருள், என் தங்கை, மாதர் ஜோதி ஆகிய நாவல்களை அருமைநாயகம் படைத்துள்ளார்.

சி. அருமைநாயகம் முதல் கிறித்தவ நாவல் ஆசிரியர் எனப் போற்றப்படுகிறார். கிறித்தவச் சமூகத்தின் கேடுகளையும், சிக்கல்களையும் இருளையும் எடுத்துக்காட்டும் நோக்கத்துடன் ஆசிரியர் மீதி இருள் நாவலைப் படைத்துள்ளார் எனக் கட்டுரை ஆசிரியர் சுட்டிக்காட்டுகிறார். மீதி இருள் நாவலில் கிறித்தவர்களின் நிலையினைப் பல்வேறு சூழ்நிலைகளில் நாவலாசிரியர் சாடுகிறார். பொறாமை, மூடப்பழக்கம், கோள் சொல்லுதல், இரக்கமின்மை, பொய்பேசுதல், பதவி மோகம் என்பனவற்றை உடையவர்களாக வாழ்கின்றதைச் சுட்டிக் காட்டுகிறார். மீதி இருள் நாவலின் மூலம் குழந்தை மணம், சமூகத்தில் விதவைகளுக்கு அளிக்கப்படும் கொடுமை ஆகியவற்றைக் கண்டிக்கிறார். பெண்ணுக்குச் சமூகத்தில் அநீதி இழைக்கப்படக் கூடாது என்பதை வேதநாயகம் பிள்ளைக்கு அடுத்ததாக சி. அருமைநாயகம் தம் நாவலில் சாடுகிறார் என்பதையும், கிறித்தவ நாவலாசிரியர்கள் சமுதாயத்தின் மீது கொண்டிருந்த கரிசனத்தையே மீதி இருள் காட்டுகிறது என்பதையும் கட்டுரையாசிரியர் தெளிவுபடுத்துகின்றார்.

**வாழ்க்கை வரலாற்றுக் கட்டுரைகள்**

'சாது சுந்தர்சிங் அருளுரைகளும் அருள்மொழிகளும்' (மார்ச் 1983) என்ற தலைப்பில் அவருடைய வாழ்க்கை வரலாற்றுக் கட்டுரைகளைத் தமிழில் தயானந்தன் பிரான்சிஸ் 'அமுதினி' என்ற பெயரில் எழுதியுள்ளார். கீர்த்தனைக் கவிஞர் சி. யோசேப்பு, தி. யோசேப்பு, அ. வேதக்கண் ஆகியோர்களின் வாழ்க்கை வரலாற்றினை யோ. ஞானசந்திரஜான்சன் எழுதியுள்ளார்.

அன்பு நீடிய சாந்தமும், தயவுமுள்ளது, அன்புக்கு பொறாமையில்லை, அன்பு தன்னைப் புகழாது; இறுமாப்பாயிராது; சகலத்தையும் விசுவாசிக்கும்; சகலத்தையும் நம்பும்; சகலத்தையும் சகிக்கும். (1 கொரி. 13:4-7) என்ற விவிலிய வாக்கிற்கு ஏற்ப வாழ்ந்த அன்னை தெரசாவின் வாழ்க்கை வரலாற்றையும் அவர் செய்த தொண்டையும் (மார்ச் - ஏப்ரல் 1998) ஸ்வீட்லின் பிரபாகர் எழுதியுள்ளார். மேலும் வேதாகமப்பெண்மணிகள் (மார்ச் - ஏப்ரல் 1998) என்ற தலைப்பில் ரெபெக்கான், எஸ்தர், அன்னாள், ஏவாள் ஆகியோர்களின் வாழ்க்கையினைப் பற்றியும் அவர் எழுதியுள்ளார்.

**பயண இலக்கியம்**

ஒருவர் தான் பயணம் சென்ற பிற நாட்டில் தனக்கு ஏற்பட்ட அனுபவத்தைக் கட்டுரையாக எழுதும்போது படிப்பவர்க்கு தாம் பெற்ற அனுபவத்தைத் தருகின்றார். 'திருநாட்டைக் கண்டேன்' (மே-ஜுன் 1993) என்னும் தலைப்பில் தான் பயணம் மேற்கொண்ட எகிப்து, இஸ்ரேல் நாட்டில் தனக்கு ஏற்பட்ட அனுபவத்தை எழுதியுள்ளார் ஸ்வீட்லின் பிரபாகரன்.

ஒவ்வொரு இடத்தையும் குறித்து எழுதுகின்றபொழுது அவ்விடத்தின் புவியியல் அமைப்பு, நாட்டின் வரலாற்றுப் பின்னணி, மக்களின் பழக்க வழக்கம்,

பண்பாடு, கலை நாட்டம், வாழ்வியல் பிரச்சினைகள் ஆகிய அனைத்தையும் ஒருங்கே இணைத்தும் கூறுகின்றார்.

**திறனாய்வு இலக்கியம்**

பூக்கூடை இதழில் வெளிவந்துள்ள பெரும்பாலான திறனாய்வுக் கட்டுரைகளை மூன்று வகையாகப் பாகுபடுத்தலாம். அவை:

1. நாவல் பற்றிய திறனாய்வுக் கட்டுரைகள்.
2. சிறுகதை பற்றிய திறனாய்வுக் கட்டுரைகள்
3. திருக்குறளும் விவிலியமும் ஒப்பீடு.

என்பனவாகும்.

**நாவல் பற்றிய திறனாய்வுக் கட்டுரைகள்**

பூக்கூடை இதழில் டேவிட் சித்தையா வழங்கும் புகழ்பெற்ற கிறித்தவ நாவல்கள் என்ற தலைப்பில் இதுவரை இருபது கிறித்தவ நாவல்கள் திறனாய்வு செய்யப்பட்டுத் தொடர்ந்து கட்டுரைகளாக வெளிவந்துள்ளன.

இன்ப ஊற்று (சனவரி 1993) என்னும் நாவல் மக்களுக்கு அறிவுறுத்தும் வகையிலும் இன்புறுத்தும் வகையிலும் சிறப்பிடம் பெற்றுள்ளது. கிறித்தவ குடும்ப நாவலாக இருப்பினும் கதை கூறும் தன்மையிலும் விறுவிறுப்பான நிகழ்ச்சிகளை அமைத்துள்ளார். சாதி, சமய, இன வேறுபாடுகளைக் கடந்து அனைவராலும் ஒருங்கே படித்துச் சுவைக்கக்கூடிய ஒரு நல்ல நாவலாக இன்ப ஊற்று அமைந்துள்ளதைச் சுட்டிச் செல்கிறார் கட்டுரையாசிரியர்.

செல்வராஜ் எழுதியுள்ள மலரும் சருகும் (ஜூலை - ஆகஸ்டு 1993) என்ற நாவலைச் சரோஜினி புதியவன் திறனாய்வு செய்துள்ளார்.

திறனாய்வுக் கட்டுரையின் முகப்புரையில் கூறும் கருத்து சிறப்புடையதாக உள்ளது. மதமாற்றம் மக்களின் நிலையில் மாற்றம் ஏற்படுத்தும் என்று நம்பினார்கள் தாழ்த்தப்பட்டவர்கள். மகர் இனத்தில் பிறந்து சாதியின் பெயரால் பல கொடுமைக்கு ஆளாக்கப்பட்டவர் டாக்டர் அம்பேத்கார். இந்து மதத்தில் இருக்கும் இந்தக் கொடுமைக்கு இந்திய மக்கள் பெரும்பாலோரால் ஈடுகொடுக்க முடியவில்லை என்பதை உணர்ந்தார். மனிதனை நேசிக்கும் புத்த நெறியைப் பின்பற்றுங்கள் என்று மக்களுக்கு அறிவுரைத்தார். தம்மையும் புத்த மதத்தில் இணைத்துக் கொண்டார். பகுத்தறிவுப் பகலவன் தந்தை பெரியாரும் மனிதனை மனிதனே மிதிக்கும் இந்து மதத்தைவிட்டு அன்பு நெறியைப் போதிக்கும் இசுலாமிய கிறித்துவச் சமயங்களைத் தழுவுங்கள் என்று அறிவுரைத்தார். மொத்தத்தில் மதமாற்றம் சாதி வேறுபாட்டிற்குச் சாவுமணி அடிக்கும் என நம்பியவர்கள் பலர். ஆனால் மதமாற்றமும் மனித மனங்களில் உயர்வு தாழ்வை சமப்படுத்தவில்லை.

'இயேசுவில் மதம் புகழ் பேதக மன்றதோ - தோழி
அவர்களுக்குள்ளே மூதேவி இங்கும் புகுந்தனள் தோழா'

என்று பாவேந்தர் பாடிய பாடலைச் சுட்டிக்காட்டி மத மாற்றங்கள் மட்டுமே மனிதனை இணைத்துவிடாது என்பதற்கான தீர்க்கதரிசனம் என்று கூறி நாவலைத் தொடங்குகின்றார்.

மலர் மலரும்போது பச்சை இலைகள் பழுத்த சருகாகி உதிரத்தானே வேண்டும். அதுபோல சாதீயமும் சுரண்டலும் சத்தற்றுப் போவதற்கு சருகுக்குறியீடாகியுள்ளன. மலரப்போகும் புதிய சமுதாயத்தின் குறியீடு மலர். குறியீட்டுத் தலைப்பிற்குள் தனது கொள்கைக்கு கதை வடிவம் கொடுத்துள்ளார் என்பதை அழகாக விளக்கியுள்ளார் சரோஜினி புதியவன். கதைப்போக்கு, கரு, பின்னணி, பாத்திரப்படைப்பு ஆகியவற்றின் வழியாக எழுத்தாளரது

கொள்கைகளை முழுமையாக அறிய முடிகிறது. மொழிநடையிலும் அவரை இனங்கண்டு கொள்ள முடிகிறது. வருணனை, உவமை ஆகியவை எழுத்தாளரின் கொள்கைகளை விளக்கியுள்ளதைக் கட்டுரையாசிரியர் சுட்டிக் காட்டியுள்ளார்.

மலரும் சருகும் சுரண்டும் சக்திகளுக்கு எதிராக உழைக்கும் விவசாயிகள் தங்கள் தோள்களை உயர்த்தும் காலக்கட்டத்தைக் காட்டும் நாவல். கருகிக் கொண்டிருக்கும் பழைய சமுதாயத்தைக் கண்முன் காட்டும் ஆசிரியர், மலருகின்ற புதிய சமுதாயத்தின் அறிகுறிகளையும், அங்குமிங்குமாகக் கதையெங்கும் காட்டியுள்ளார். பறக்கத் தெரியாமல் கிடந்த பறவையை இறக்கை இருப்பதை எடுத்துச் சொல்லி பறக்கவைக்கும் முயற்சியே இந்நாவல் ஆகும். மொத்தத்தில் மனிதனோடு இணைந்து மனிதநேயத்தில் படிந்து முன்னேற்றத்தை விரும்பி வழிகாட்டும் நோக்கில் எழுதப்பட்டது இக்கதை என்கிறார் சரோஜினி புதியவன்.

அ.மாதவையா எழுதிய கிளாரிந்தா (மார்ச் - ஏப்ரல் 1994) என்ற நாவலைத் திருமதி. கிரேஸ் செல்வராஜ் திறனாய்வு செய்துள்ளார். பெண்ணை அடிமைப்படுத்துகின்ற சமூகத்தில் ஒரு பெண் தனக்கு ஏற்படும் அநீதிகளை எவ்வாறு தாங்கிக்கொண்டு எதிர்த்து வாழ்ந்து வந்தாள் என்பதும், பெண்ணுரிமை மறுக்கப்பட்டு, ஆண் ஆதிக்கச் சமூகத்தில் பெண்கள் ஆண்களுக்கு அடிமைப்பட்டு வாழும் வாழ்க்கையைச் சாடி, விதவைப் பெண் திருமணம், பெண்கல்வி முதலியவற்றில் சீர்திருத்தம் செய்தார் என்பதும் சுட்டிக் காட்டப்பெறுகின்றன.

சமுதாயத்திற்கு வலியுறுத்தப்போகும் கருத்தை ஆசிரியர் வாசகர்களிடையே விளக்கப் பயன்படுத்தும் மாந்தர்களை கருத்து விளக்க மாந்தர்கள் எனலாம். லிட்டில்டன், கிளாரிந்தா ஆகியோர் கருத்து விளக்க மாந்தருள் நடப்பியல் தன்மையுடைய குறிக்கோள் மாந்தராகப் படைக்கப்பட்டுள்ளனர். ஓர் இந்துப் பெண் தன்னுடைய மதத்தில் இருக்கும் சாதி, மூடப்பழக்கம், சதி, குழந்தைத் திருமணம் ஆகிய கொடுமைகளை எதிர்த்து, வெறுத்து ஒரு

கிறித்தவளாக மாறினாள் என்பதைவிட இயேசு பெருமானின் புனிதவாழ்வு கிளாரிந்தாவை மாற்றியது எனலாம் என்கிறார் கட்டுரையாளர்.

**சிறுகதை பற்றிய திறனாய்வுக் கட்டுரைகள்**

பூக்கூடை இதழில் தொடர்ந்து எழுதிவரும் ஸ்வீட்லின் பிரபாகரன், பிரியா ஜெயசீலன் ஆகியோரின் சிறுகதைகளைத் திறனாய்வு செய்து கட்டுரை ஒன்றினை எழுதியுள்ளார் மு. பரமசிவம்.

**ஸ்வீட்லின் பிரபாகரன் கதைகள்**

'அழகு' எனும் கதையில் வெளித்தோற்றமும் விளம்பரமான வாழ்க்கையில் ஒரு பெண்ணின் வாழ்க்கையில் புகுந்து வாழ்க்கையை வீணாக்குவதை விளக்குகிறார்.

சினிமா வாழ்க்கை நிஜமல்ல நிழல் என்பதை நிரூபிக்கும் வகையில் 'அவளுக்குப் புரிந்துவிட்டது' எனும் சிறுகதை அமைந்துள்ளது. பாசம் என்பது பயணத்தில் அல்ல அது பண்பில் மலர்வது என்பதைப் பளிச்சென்று படம்பிடித்துக் காட்டும் கதை 'உடன்பிறப்புகள்' என்பதாகும்.

இப்படி யதார்த்த வாழ்க்கையின் நிகழ்வுகளை எடுத்துச் சொல்லும் கதைகள் பல உள்ளன என்பதைக் கட்டுரையாசிரியர் சுட்டிக்காட்டுகிறார். பல பெண் பாத்திரங்களைப் படைத்து அவர்களைத் தாய்மையால், தியாகத்தால், அன்பினால் தலை நிமிர வைப்பவர் ஸ்வீட்லின் பிரபாகரன் என்கிறார். சிறப்பாகச் சிறுசிறு சம்பவங்களைத் தேர்ந்தெடுத்து எளிய இனிய தமிழில் கதைகள் புனைந்துள்ள ஸ்வீட்லின் பிரபாகர் அழுத்தமும் ஆழமும் மிக்க அடுக்கடுக்கான சம்பவங்களைக் கொண்ட 'அர்ப்பணிக்கிறேன்' என்கிற கதையை எழுதித் தன் எழுத்தாற்றலை வெளிப்படுத்தி உள்ளார் எனக் கட்டுரையாசிரியர் பரமசிவம் குறிப்பிடுகிறார்.

**பிரியா ஜெயசீலன் கதைகள்**

பிரியா ஜெயசீலன் ஏழை எளியவர்கள் பேசும் தமிழில் பல கதைகள் எழுதி அந்த மக்களிடம் தனக்குள்ள ஈடுபாட்டை வெளிப்படுத்தியுள்ளார். ரோசாச்செடி, என்றுவிடியும், அம்மு காத்திருக்கிறார் முதலிய கதைகளில் ரிக்ஷா ஓட்டும் தொழிலாளிகள் தான் கதை மாந்தர்கள். இந்த மூன்று கோணங்களில் சித்திரித்து உழைக்கும் வர்க்கத்துக்கு உயர்வை உண்டாக்கி இருக்கிறார் எனப் பரமசிவம் விளக்குகிறார்.

**விவிலியமும் திருக்குறளும்**

விவிலியத் திருமறையும் வியத்தகு திருக்குறளும் என்னும் தொடர் கட்டுரையில் விவிலியத்துடன் ஒப்பிட்டு திருக்குறளை பொ.ஆ. சத்தியசாட்சி (ஆகஸ்டு - மார்ச் 1985) ஆராய்ந்துள்ளார்.

**தனக்குவமை இல்லாதான்**

தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்

மனக்கவலை மாற்றல் அரிது.[28]

தமக்கு ஒப்பாக ஒருவரும் இல்லாதவர் இறைவன். அவருடைய திருவடிகள் யாருடைய நினைவில் படிந்திருக்கின்றனவோ அவர்களுக்கே அல்லாமல் பிறர்க்குத் தங்கள் மனதில் ஏற்படுகின்ற கவலைகளை இன்பமாக மாற்றிக்கொள்வது இயலாது.

'தனக்குவமை இல்லாதான்' என்பவர் இயேசு பெருமானே எனக் கருதுவதற்கு இடம் தருகிறது என்கிறார் பொ.ஆ. சத்தியசாட்சி.

கடவுளுக்குரிய குணங்களாகச் சொல்லப்படுகின்றவை எல்லாச் சமயங்களுக்கும் பொதுவானவை விண்ணிலிருந்து மண்ணுலகிற்கு வந்து

அவதரிப்பதும் அறங்கள் பலவற்றை எடுத்துரைப்பதும் மறைமொழிகளைப் பொழிவதும், மறைபொருள்களைக் கற்பிப்பதும் அருட்செயல்களை செய்வதும் அற்புதங்கள் நிகழ்த்துவதும் ஆகிய செயல்களை கடவுளர்கள் பலரும் செய்து காட்டியிருக்கிறார்கள். பிறசமயக் கடவுள்களைவிட சிலுவையில் அறையப்பட்டதும், பாடுபட்டுச் செந்நீர் சிந்தியதும், மரணத்திற்குள்ளாகியதும், மீண்டும் உயிருடன் எழுந்ததுமாகிய செயல்கள் இயேசு கிறித்துவுக்கே உரியனவாகும் என்கிறார். எனவே சிலுவைப்பலியையும், செந்நீரையும், மரணத்தையும் உயிர்த்தெழுதலையும் நோக்குமிடத்தும் ‘தனக்கு உவமை இல்லாதான்’ என்ற தொடருக்கு உரியவர் இயேசுகிறிஸ்து ஒருவரே என்பதே புலனாகும் என்று தம் கருத்தை நிலைநாட்ட,

அன்பே நீ ஆதலினால்
ஆருயிர்கள் பொருட்டுடன்
அழகுடலை விதைக்க விட்டாய்
அருளுயிரை நீத்தாய்
இந்நிலத்தில் அச்செயலை
எக்குரவர் ஏற்றார்
இளங்கன்னி வயிற்றுதித்த
இறைமை மணி விளக்கே[39]

என்று கிறிஸ்துவின் அருள் வேட்டல் என்ற கவிதை நூலில் திரு.வி.க. பாடுவதை உதாரணமாகக் கூறுகிறார்.

**ஆதிபகவன்**

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு[30]

எல்லா எழுத்துக்களும் அகரத்தைத் தமக்கு முதலாகப் பெற்றுள்ளன. அதுபோல ஆதி பகவனையே தனக்கு முதலாகப் பெற்றுள்ளது உலகு என்பது குறளின் கருத்து.

இங்குக் கடவுள் ஆதிபகவன் என வழங்கப்படுகிறார். இத்தொடர் 'ஆதியும் பகவனும்' என விரிந்து, ஆதியும் பகவனுமாகிய ஒருவன் என பொருள்படும். ஆதி என்பது உலகம் உண்டு என இருக்கத் தொடங்கிய காலம் அதுவே ஆதி. அந்த ஆதிக்கு முதன்மை கடவுளே. எனவே ஆதி என்பது கடவுளுக்கு வழங்கப்படும் பெயர்களுள் ஒன்று என்கிறார்.

பகவன் என்பது தமிழ்ச்சொல், அது 'பகுத்தவன்' என்னும் பொருளினை உடையது. திருக்குறளின் முதல் பாடலில் போற்றப்படுகின்ற கடவுள் விவிலியத் திருமுறையின் முதல் நூலின் முதல் அதிகாரத்தில் பகுத்தளிக்கும் பகலவனாகவே விளங்குகிறார். இருளையும் ஒளியையும் பகுத்தவர். நிலத்தையும் நீரையும் பகுத்தவர். விண்ணையும் மண்ணையும் பகுத்தவர். பொருள்களை ஊர்வனவாகவும், நடப்பனவாகவும், பறப்பனவாகவும் பகுத்தவர் பகுக்கின்ற கடவுள் என்ற செய்தி அங்கு கூறப்படுகிறது. பகுக்கின்றவர் முதல்வனுக்குப் பகவன் என்னும் பெயர் வழங்கப்படுதல், விவிலியத் திருமறைச் செய்தியோடு பொருந்துவது போன்று வேறெங்கும் அத்தனைச் சிறப்பாகப் பொருந்தவில்லை என்கிறார். இவ்வாறாகத் திருவள்ளுவர் திருக்குறளை எழுதியது இயேசு பெருமானை மனதில் வைத்துக்கொண்டுதான் என்று தக்கச் சான்றுகளுடன் நிறுவுகிறார் பொ.ஆ. சத்தியசாட்சி.

**கடித இலக்கியம்**

மடல் அல்லது கடிதம் என்ற வகையில் கட்டுரைகள் பூக்கூடையில் இடம்பெற்றுள்ளன. 'அமுதினிக்கு' என்ற தலைப்பில் தயாவால் தொடர்க்

கட்டுரைகள் எழுதப்பட்டுள்ளன. இம்மடலை தயவுடைநம்பி, அமுதினிக்கு எழுதியுள்ளார்.

தமிழ்க் கிறித்தவர்கள் வீணான பயம் கொண்டவர்களாய் அஞ்சி ஒடுங்க வேண்டிய அவசியமில்லை. அநீதிகளை எடுத்துச்சொல்லும் பொறுப்பைக் கிறித்தவப் பத்திரிகைகள் தயங்காமல் ஏற்றுச் செயல்பட வேண்டும், கிறித்தவச் சமுதாயத்தினரைப் பற்றித் தரக்குறைவான வகையில் செய்திகளை வெளியிடும் பத்திரிக்கைகளின் போக்கைக் கண்டித்து உண்மையை நிலைநாட்டுவதற்கு நமக்குப் பலம் பொருந்திய வார ஏடு தேவை எனக் கடிதம் அமைந்துள்ளது.

பிற்படுத்தப்பட்டோர், தாழ்த்தப்பட்டோர், முஸ்லீம்கள், கிறித்தவர்கள் யாவருமே ஒரே இரத்தம் என்கிற உணர்வோடு சமூக நீதிகளுக்காகப் போராட வேண்டுமென்றும், கிறித்தவர்கள் உள்ளிட்ட மதச்சிறுபான்மையோர் உரிமைகளுக்குத் தக்க பாதுகாப்புத்தர வேண்டுமென்றும் இனக்கலவரங்களும் சாதிக் கலவரங்களும் இனி ஏற்படாமல் தடுக்கும் பொறுப்பு நம் அனைவரையும் சார்ந்தது என்றும் திருச்சியில் நடந்த திராவிடர்கழக மாநாட்டில் தயா பேசியது பற்றி மடல் அமைந்துள்ளது.

ஆவியினால் நிறைந்து வாழும் வாழ்க்கைக்கு வழிபாடும், ஜெபமும், அருளுரையும் எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியம் நல்ல நூல்களைப் படிப்பது என்றும் ஆண்டவரின் அடியார்கள் தங்கள் நூல்களில் எடுத்துச் சொல்லும் கருத்துக்களை ஊன்றிக்காணும் பக்குவ நிலை நமக்குத் தேவை என்று 'அமுதினிக்கு' எழுதும் கடிதத்தில் தயவுடை நம்பி என்னும் தி. தயானந்தன் பிரான்சிஸ் குறிப்பிட்டுள்ளார்.

'அமுதினிக்கு' நம்பி மடல் எழுதுவது போல் 'நம்பிக்கு' அமுதினி மடல் எழுதும் பாங்கிலும் கடிதம் அமைந்துள்ளது. 'திராவிடர் கழகம்' நடத்திய மாநாட்டில் அண்ணனும் வேறுசில கிறித்தவத் தலைவர்களும் கலந்து

கொண்டதற்குச் சில கிறித்தவ அன்பர்கள் அடாத செயல், அடுக்காத உறவு என்று குறை கூறியிருப்பது பற்றி விளக்குவதாகக் கடிதம் அமைந்துள்ளது. கவிஞர் கண்ணதாசனின் இயேசு காவியத்தைத் திறனாய்வு செய்த கடிதமும் உள்ளது. கிறித்தவச் சமுதாயத்தில் இன்று ஒற்றுமையின்மை, பல பிரிவுகள் ஏற்படக் காரணம் நம்மிடையே ஒற்றுமை இல்லாததுதான் பிற சமுதாயத்திற்கு ஒரு தூண் போல் இருக்கும் என்பதையும், இந்துச் சமுதாயத்தைச் சார்ந்த கவிஞர் இயேசு காவியம் ஓர் இறவாக்காவியம் எனக் கூறியதையும் கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார். ஆனால் இந்த உறுதி நம்மிடையே இல்லை என்று வருத்தமுறும் வகையில் மடல் அமைந்துள்ளது.

**பூக்கூடையும் படைப்பிலக்கியமும்**

கிறித்தவ இதழான 'பூக்கூடை' படைப்பிலக்கியத்துக்கு முதலிடம் அளிக்கின்றது. கவிதை, சிறுகதை, நாடகம் எனப் படைப்பிலக்கியத்தைத் தாங்கி வருகின்றது. சமய இலக்கியம் மட்டுமின்றி சமுதாயம், சமூகச்சீர்கேடு, மனிதநேயம் சார்ந்த படைப்புக்களும் வெளிவந்துள்ளன. பல்வேறு புதிய கிறித்தவ எழுத்தாளர்களின் படைப்புகளும், கிறித்தவர் அல்லாதவர்களின் மனிதநேயம் சார்ந்த சில படைப்புகளும் இடம்பெற்றுள்ளன. பிற இதழ்களில் இல்லாத வகையில் பூக்கூடையில் பெண் எழுத்தாளர்களின் படைப்புக்கள் அதிக அளவில் இடம்பெற்றுள்ளன. கட்டுரை இலக்கியம் பூக்கூடையில் 20 விழுக்காடுகள் இடம்பெற்றுள்ளன.

**உத்திகள்**

வளர்ந்து வருகின்ற விஞ்ஞான உலகில் ஒவ்வொரு இதழும் வாசகர்களைக் கவருவதற்குப் பல்வேறு வகையான உத்திகளைக் கையாளுகின்றது. தலையங்கம், கவிதை, கட்டுரை, துணுக்கு, கேள்வி-பதில், ராசிபலன், நூல்

அறிமுகம், வாசகர் கடிதம், புகைப்படம், சமையல் குறிப்பு, மருத்துவம் போன்றவை பொதுவான உத்திகளாக அமைகின்றன.

**பூக்கூடை இதழில் உத்தி**

பூக்கூடை இதழ் தமிழ்ச் சமுதாயத்திற்குப் பொதுவாகவும், கிறித்தவ மக்களுக்குச் சிறப்பாகவும் பணியாற்றி வருகின்றது. இவ்விதழ் ஏனைய கிறித்தவ இதழ்கள் பின்பற்றி வரும் உத்திகளையே கடைப்பிடிக்கின்றது. எனினும் தனக்கென சில தனித்தன்மைகளைக் கொண்ட இதழாக சிறப்புடன் செயலாற்றி வருகின்றது. தலையங்கம், குட்டிக்கதை, ஆதாரக்கதை, துணுக்கு, செய்தித் துணுக்கு, ஸ்டாம்பு துணுக்கு, உரையாடல், செய்திச்சுரம், இறைச்செய்தி, விண்ணப்ப வீடு, கோத்திரக் கோயில், படக்கதை, நூல் அறிமுகம், பேட்டி, வாசகர் எண்ணம், விவிலிய வினாவிடைப் போட்டி, விளம்பரம், படங்கள், அறிவிப்புகள் போன்றன பூக்கூடை இதழின் உத்திகளாக உள்ளன.

**தலையங்கம்**

தலையங்கம் என்பது இதழாசிரியரின் உரையாகும். இதழ்களின் இதயம் போன்றது தலையங்கம். ஆங்கிலேயர் இதனை `Leader' என்று பெயரிட்டு அழைக்கின்றனர். தலையங்கம் இன்றைய சமுதாயச் சிக்கல்களைப் பிரதிபலிப்பதாக அமைகின்றது. நாடு தழுவிய அல்லது உலகந்தழுவிய சிக்கல், முந்தைய நாட்களின் முதன்மைச் செய்திகள் முதலியவற்றைப் பற்றி ஆசிரியர் அல்லது நிர்வாகம் கொண்டுள்ள கருத்துக்களை விளக்கி வரைவதே தலையங்கத்தின் இயல்பாகும்.

**பூக்கூடையில் தலையங்கம்**

கிறித்தவ இதழான பூக்கூடையில் சாதி, மதப் பாகுபாடின்றி, பொருளாதார சமூக மேம்பாடுகளை உயர்த்தும் வகையில், மக்களுக்கு அறிவுரை சொல்லும்

முறையில் தலையங்கம் அமைந்துள்ளது. அனைத்துத் தலையங்கங்களையும் பூக்கூடையின் சிறப்பாசிரியர் எழுதி வருகின்றார். தலையங்கங்களை ஆசிரியர் எழுதும் முறை பாராட்டத்தக்க வகையில் அமைந்துள்ளது. பத்திரிகையாளன் ஒரு போர்வீரன். போர் வீரனுக்குப் பகைவன் வேற்று நாட்டுக்காரன். பத்திரிகையாளனுக்குப் பகைவன் உள்நாட்டுத் தீயசக்திகள். வீரனுக்குக் கருவி கையில் போர்வாள். பத்திரிகையாளனுக்கு எழுதுகோல் ஆயுதம் ஆகும்.[7] எனும் கூற்றினுக்கேற்ப பூக்கூடை ஆசிரியரும் தம் கருத்தைக் கூறும் முறையில் போர் வீரனாகத் திகழ்கின்றார். பொதுச் சிக்கல் ஒன்றில் ஆசிரியர் வாசகர் எண்ணங்களின் இணைப்புப் பாலம் தலையங்கமாகும் என்பதைப் போன்று பூக்கூடையில் தலையங்கங்கள் அமைந்துள்ளன.

**தலையங்கப் பாகுபாடு**

பூக்கூடை கிறித்தவம் சார்ந்த இதழாக இருப்பதால் பெரும்பாலான தலையங்கங்கள் விவிலியத்தின் ஊடாக ஆன்மீகக் கருத்துக்களைச் சுட்டிக்காட்டும் வகையில் அமைந்துள்ளன. பூக்கூடை இதழில் இடம்பெற்றுள்ள தலையங்கங்களை

அ. இறைவழிபாடு

ஆ. விவிலியக் கருத்துக்கள்

இ. சமுதாய நிகழ்ச்சிகள்

ஈ. கிறித்தவம்

உ. கிறித்தவ அறிஞர்கள்

ஊ. சிறப்பிதழ்த் தலையங்கம்

எனப் பாகுபாடு செய்யலாம்.

தலையங்கம் அனைத்தும் தலைப்பிடப்பட்டு எழுதப்பட்டுள்ளன. தலைப்புகள் அனைத்தும் தலையங்கக் கருத்தை வெளிப்படுத்துகின்றன. எல்லாத் தலையங்கங்களும் இதழின் மூன்றாம் பக்கத்தில் அமைந்துள்ளன. அதிகமாக இருப்பின் நான்காம் பக்கத்திலும் இடம்பெற்றுள்ளன. அவை இறைவழிபாட்டின் அவசியத்தையும், வழிபாட்டின் முறையையும், சமுதாயத்தின் நலனையும் உணர்த்துகின்றன.

## இறைவழிபாடு

இலெந்து நாட்களில் தவ நாட்கள், வெள்ளைக் கிறிஸ்மஸ் எனும் மூன்று தலைப்புகள் இறைவழிபாடு தொடர்புடைய தலையங்கத்தில் அமைந்துள்ளன.

### இலெந்து நாட்களில்

1996ஆம் ஆண்டு மார்ச்-ஏப்ரல் மாத இதழில் இலெந்து நாட்களில் எனும் தலையங்கம் இடம்பெற்றுள்ளது. இலெந்து நாட்களான நாற்பது நாட்களின் போது உபவாசமிருந்து செபிப்பார். நமக்காக உபவாசித்து செபிப்பிற்கு மட்டுமல்ல, இயேசு கிறிஸ்து தன்னைத் துன்புறுத்திய பகைவர்களுக்காக பிதாவிடம் வேண்டியது போல் நாமும் நம் பகைவர்களுக்காக செபிக்க வேண்டும் என இலெந்து காலம் பற்றி விளக்கம் இதில் கொடுக்கப்படுகின்றது. அழைக்கப்பட்டவர்கள் அநேகர் தெரிந்து கொள்ளப்பட்டவர்கள் சிலர் (மத்தேயு 20:16) என்ற வசனத்தின்படி மக்கள் தெரிந்து கொள்ளப்பட்டவர்களாக இருக்க வேண்டும். பரலோக வாழ்க்கைப் பயணத்திற்கு இலெந்து நாட்களைப் பரத்துக்கு ஏறும் படிகளாக நினைத்து ஆவிக்குரிய வாழ்க்கையில் முன்னேறிச் செல்ல வேண்டும். உனக்காக நான் மரித்தேனே எனக்காக நீ என்ன செய்தாய் என நம்மை நோக்கிக் கேட்கும் ஆண்டவருக்கு நம் பதில் என்ன? என்ற கருத்தைச் சுட்டிக்காட்டி இறை வழிபாடு எனும் தலையங்கத்தை முடித்துள்ளார்.

**தவ நாட்கள்**

தவ நாட்கள் (மார்ச் *1983*) என்ற தலைப்பில் உள்ள தலையங்கம் மூன்று உண்மைகளைச் சுட்டிக்காட்டுகின்றது. அவை:

1. மனிதனின் ஆன்மா தழைத்தோங்க வேண்டும்
2. பிசாசின் சோதனைகளை எதிர்த்து வெற்றி பெற வேண்டும்
3. மனிதன் இறைவனை வழிபடுதல் வேண்டும்

என்பனவாகும். மட்டுமின்றி, ''உபவாச நாட்களில் உன் வேத நூலை ஊன்றிப்படி, ஓயாது படிக்கப்படிக்க அது பழசாகட்டும். உன் பைபிள் பழசாகப் பழசாக உன் வாழ்வு புதுசாகும்' என்ற புதிய கருத்தை இத்தலையங்கம் சுட்டிக்காட்டியுள்ளது.

**வெள்ளைக் கிறிஸ்மஸ்**

வெள்ளைக் கிறிஸ்மஸ் (டிசம்பர் *1990*) என்ற தலைப்பில் உள்ள தலையங்கம் ஆண்டவர் தம்முடைய திருமைந்தராகிய இயேசு கிறிஸ்துவை நமக்கு பெரிய பரிசாக வழங்கினார். அதுபோல் நாமும் நண்பர்கள், உறவினர்கள் ஆகியோருக்கு மட்டுமல்லாமல் கிறிஸ்மஸ் கொண்டாட முடியாத நிலையில் இருப்பவர்கள், வறுமை, நோய் முதலியவற்றால் பாதிக்கப்பட்டிருப்பவர்கள் எவருக்கும் கிறிஸ்மஸ் அன்பைப் பரிசுகள் மூலம் தெரிவிக்க வேண்டும். இதைத்தான் வெள்ளைக் கிறிஸ்மஸ் என்கிறார்.

**விவிலியக் கருத்துக்கள்**

விவிலியக் கருத்துக்கள் பற்றிய தலையங்கத்தில் **சுவிசேடமே சுகம்தானா?** **கிறித்தவன்** ஆகியவை இடம்பெற்றுள்ளன. ஆசிரியர் இதயத்திலிருந்து புறப்படும் எண்ணங்கள் வாசகர் உள்ளங்களை ஊடுருவிச் செல்ல வேண்டும் என்ற கூற்றின்படி விவிலியத்தின் வழியாகத் தன் எண்ணங்களை ஆசிரியர் எழுதியுள்ளார்.

**சுவிசேடமே சுகம்தானா?**

சுவிசேடமே சுகம்தானா? (மே 1983) என்ற தலைப்பில் அமைந்துள்ள தலையங்கம் கிறிஸ்தவத் திருச்சபைகள் இயேசு கிறிஸ்துவை மக்களுக்கு அறிவிப்பதாக நினைத்துக் கைப்பிரதிகளைக் கொடுப்பதும், பாட்டுப் பாடிக் கைத்தட்டி 'பாடி ஓடி வா' என்று பறைசாற்றுவதும் வெற்று ஆரவாரங்களே என வன்மையாகச் சாடுகின்றது. மனிதநேய மிக்க ஒரு சமுதாயத்தை உருவாக்க ஒவ்வொரு தனி மனிதனும் நீதியைக் கடைப்பிடித்தல் வேண்டும். அதற்குச் சட்டத்தின் மூலமாகவும், சமத்துவ சிந்தனையின் மூலமாகவும் பெரிய மாற்றங்களைச் செய்ய வேண்டும். அவையாவும் இந்தத் தலைமுறையில் வாழும் நம்மீது விழுந்த கடமையும், கடனுமாக உள்ளன. இக்கருத்து பாரதியின் 'தனி ஒருவனுக்கு உணவு இல்லையெனில் செகத்தினை அழித்திடுவோம்' என்பது போல நீதி, நியாயம், கடமை என்பது தனி மனிதனின் ஒவ்வொருவனுக்கும் உரியதாகும் என்பதைப் போன்றது.

**கிறிஸ்தவன்**

கிறிஸ்தவன் (சனவரி 1990) என்னும் தலையங்கம் தன்னைக் கிறித்தவன் என்று கூறிக் கொள்ளும் ஒவ்வொருவனும், மூன்று நிலைகளில் இருக்க வேண்டும் எனக் குறிப்பிடுகின்றது. உன் சத்துருவை சிநேகி உன்னைப் பகைக்கிறவனுக்கு நன்மை செய், உன்னைத் துன்பப்படுத்துகிறவனை ஆசீர்வதி' எனும் ஆன்மீகப் புரட்சியையும், தலைவனாக இருக்க விரும்புகிறவன் வேலைக்காரனாகப் பணி செய்ய வேண்டும் என்ற அரசியல் புரட்சியையும், இந்த உலக இன்பத்தை வெறுத்து இறைவனைத் தேடு என்ற ஆன்மீகப் புரட்சியையும் கூறுகின்றது. ஆன்மீகப் புரட்சி, அரசியல் புரட்சி, பொருளாதாரப் புரட்சி எல்லாம் என்னிலிருந்து பிறக்க வேண்டும். ஏனெனில் நான் கிறித்தவன் என்பது கிறித்தவன் தலையங்கத்தின் முடிவான கருத்து.

**சமுதாய நிகழ்ச்சிகள்**

பூக்கூடை இதழ் பல சமுதாயச் சிக்கல்களை வெளிப்படுத்துகின்றது. இதழ்கள் சமுதாயச்சிக்கலை அறிவுச் சல்லடையில் சலித்தெடுக்கும்போது தலையங்கம் பிறக்கிறது எனும் கருத்து சிந்திக்கத்தக்கது. பூக்கூடையில் இடம்பெற்றுள்ள சமுதாயத் தலையங்கங்கள் பெரும்பாலும் விவிலியக் கருத்துக்களின் ஊடாகவே சமுதாய நோக்கோடு படைக்கப்பட்டுள்ளன. அவற்றைக் பின்வரும் பகுப்புகளுக்குட்படுத்தலாம்.

அ. இளைஞர்களின் நிலைமை

ஆ. ஏழைகளின் நிலை

இ. சமூகச் சீர்கேடுகள்

ஈ. நலத் திட்டம்

உ. மத நல்லிணக்கம்

ஊ. போராட்டம்

எ. தொலைக்காட்சி

**இளைஞர்களின் நிலை**

இளைஞர்களை வாழவிடுங்கள் (ஆகஸ்டு *1984*) என்ற தலையங்கம் வேலையில்லாத் திண்டாட்டம் ஓர் இளைஞனை கொலைக்காரனாக்கியது எப்படி என்பதை விளக்குகிறது.

இளமையைப் பற்றி (அக்டோபர் *1985*) எனும் தலையங்கம் இளமைத்திறம் எங்ஙனம் இருக்க வேண்டும் என்பதனை ஐந்து மறைகளில் கூறுகின்றது.

*1.* வளர்ச்சியுற்றுக்கொண்டே இருப்பது

*2.* புதிய படைப்புகளைப் படைக்கும் ஆற்றல் இருப்பது

3. மனத்திற்கு மகிழ்ச்சி வழங்குவது
4. புதிய கருத்துக்களின் வளர்ச்சிக்கு ஆக்கம் தருவது
5. வழக்கொழியாமலிருப்பது

எல்லாவற்றையும் புதியனவாக்குகிறேன், என்று இயேசு கிறிஸ்து கூறியதாகத் திருமறை சொல்கின்றது. அவர் வழங்குவது பழமையாகாத புதுமை, அழியாத அழகு, சேராத இளமை என்பனவாகும். காரணம், என்னவெனில் அவரே இளமையின் ஊற்று. இறைவனின் இளமைத் தன்மையான உண்மையை மனதில் வைத்துக்கொண்டு ஏசாயா பின்வருமாறு பாடுகிறார்

கர்த்தருக்குக் காத்திருக்கிறவர்களோ

புதிய ஆற்றல் பெற்று, கழுகுகளைப் போலச்

சிறகுகளை அடித்து எழுப்புவார்கள்;

நடந்தாலும் சோர்ந்துபோக மாட்டார்கள்''

என்ற பாடலைச் சுட்டிக்காட்டி நிறைவு பெறுகிறது.

**ஏழைகளின் நிலை**

காணி நிலம் வேண்டுமா? (மார்ச் 1987) என்னும் தலையங்கம் அடி மட்டத்தில் இருக்கும் ஏழை மக்களுக்கு அடிப்படை வசதிகளைக் கொண்ட சிறு வீடுகளைக் கட்டித்தருவதே இவ்வாண்டில் அரசுகளும், திருச்சபைகளும் செய்திட வேண்டிய ஆக்கப் பணியாகும் எனக் கூறுகின்றது. கடனுதவித் திட்டங்கள், மலிவு விலைத் திட்டங்கள் போன்றவற்றால் ஏழை மக்களை முழு நன்மை அடையச் செய்தாக வேண்டும் என்ற நோக்கில் எழுதப்பட்டுள்ளது.

மெரீனா மீனவர்கள் (சனவரி 1986) என்ற தலையங்கம் மெரீனா வாழ் மீனவர்களுக்கு ஏற்பட்ட இன்னல்களை எடுத்தியம்புகிறது. கடற்கரையை அழகுபடுத்துவதற்காக அக்கடற்கரையில் தொன்றுதொட்டு வாழும் மக்களை

அகற்றுவதற்காக முயற்சி எடுக்கப்பட்டது. அதனால் மீனவ மக்கள் வாழ்க்கையில் சலனம் ஏற்பட்டது. ஆயினும் அரசு தான் பிடித்த கொள்கையை விட்டுக்கொடுத்து, மீனவர்களுடைய பழைய வாழ்க்கையை மீட்டுக் கொடுத்தது நல்லதொரு செயலாகும் என்று பாராட்டியும், கடற்கரையில் கட்டு மரங்கள் கிடப்பது இயற்கையாக இருக்கக்கூடிய அழகேயன்றி அழகுக் குறையாகாது என்றும் மற்றவர்களுக்கு உல்லாசமான நேரம் கிடைக்க வேண்டும் என்பதற்காக அங்கேயே வாழ்கின்ற மக்களின் வாழ்வுக்கு இடையூறு விளைவிப்பது வரவேற்கத்தக்கதன்று என்ற பொதுவுடைமைச் சிந்தனையையும் இத்தலையங்கம் வெளிப்படுத்துகின்றது.

**சமூகச் சீர்கேடுகள்**

அங்கொன்றும் இங்கொன்றுமாய் தெரிந்த சமூகச் சீர்கேடுகளை சுட்டிக்காட்ட பூக்கூடை இதழ் தயக்கம் காட்டவில்லை.

வன்முறையை எதிர்த்து (ஆகஸ்டு *1995*) என்ற தலையங்கம் அண்மைக் காலத்தில் நம் நாட்டில் நடந்துள்ள வன்முறை, கத்திக்குத்து, கொலை, வழிப்பறி, களவு மற்றும் கற்பழிப்பு ஆகியவை இப்போது நம் நாட்டில் அன்றாட நடப்புகள் ஆகிவிட்டன என எடுத்தியம்புகின்றது. இந்த கொடுமைகளுக்காக, சமுதாய விரோதிகளின் இத்தகு அத்துமீறிய செயல்களை வன்மையாகக் கண்டிப்பதோடு நாட்டு நலனில் அக்கறை கொண்டவர் அனைவரும் சேர்ந்து தீய சக்திகளுக்கெதிராக குரல் எழுப்ப வேண்டும் என்று தலையங்கம் விவரிக்கின்றது.

மக்கள் குரலுக்கு மதிப்புத்தர வேண்டும் (சனவரி *1991*) என்ற தலையங்கம் வளைகுடா போரினைப் பற்றியது. வளைகுடா போரினால் ஏற்படும் விளைவுகளைச் சுட்டிக்காட்டி உலகின் பல்வேறு நாடுகளில் வாழும் மக்கள் போரைத் தவிர்க்கும்படி எழுப்பி வரும் கோரிக்கைக்கு அமெரிக்காவும், ஈராக்கும்

செவி சாய்க்க வேண்டும் என்றும், இப்போர் நிறுத்தத்திற்காக நாம் நாள்தோறும் இறை வேண்டல்களை ஏறெடுப்போம் என்றும் இத்தலையங்கம் வேண்டுகின்றது.

எங்கே வாழ்ந்து கொண்டிருக்கிறோம் (ஆகஸ்டு *1990*) என்ற தலையங்கம் உலகில் நடக்கின்ற அழிவுகளைச் சுட்டிக்காட்டுகின்றது. நார்வே, ஸ்வீடன், பின்லாந்து, போலந்து மற்றும் மேற்கு ஜெர்மனி, கிழக்கு ஜெர்மனி ஆகிய நாடுகளில் அணுக்கதிர் வீச்சும், இலங்கையில் தமிழினப் படுகொலையும் நடந்து கொண்டிருக்கிறது. மேலும் தமிழர்களுக்குள்ளேயே கொள்கை வேற்றுமை காரணமாக ஓர் அணிக்கும் மற்றதோர் அணிக்கும் மோதல்கள் ஏற்பட்டு உயிர்ச்சேதம் ஏற்பட்டிருக்கிற நிலையையும், சுட்டிக்காட்டி நாம் எங்கே நின்றுகொண்டிருக்கறோம்? அழிவின் விளிம்பிலா? அல்லது அழிவுக்குள்ளேயே வீழ்ந்து விட்டிருக்கிறோமா? என்ற கருத்துடன் நிறைவு பெறுகிறது.

வறட்சியைப் போக்க வழி காண்போம் (நவம்பர் *1990*) என்ற தலைப்பில் மழைநீரைப் பயன்படுத்த வேண்டும், நிலத்தடி நீர் வளத்தை அதிக அளவில் பயன்படுத்த வேண்டும் என்ற கருத்துக்கள் சுட்டப்பட்டுள்ளன.

**நலத்திட்டம்**

இயற்கை நலத்திட்டம் (மே *1991*) என்ற தலையங்கம் மனிதனும் மனித சமுதாயமும் இயற்கையில் இருந்து தங்களைப் பிரித்துக்கொள்ள முடியாது என்ற கருத்தை விளக்குகிறது. மனித நலம், சமூக நலம் போன்றே இயற்கை நலமும் பேணுதற்குரியது. இயற்கை நலனைப் பேணிக்காப்பது நம் கடமை. ஆகாயப் பழுதுகளின் பெருக்கம், காடு அழிப்புத் திட்டம் போன்றவற்றை வன்மையாக எதிர்ப்பதோடு திருச்சபைகளும் பரவலாகப் பொதுமக்களும் தங்கள் எதிர்ப்புக் குரல்களை எழுப்ப அவர்களை ஊக்குவிக்க வேண்டும் என்றும் இலக்கியப் படைப்பாளர்கள் இயற்கை நலம், சுற்றுச் சூழல் ஆகியவற்றில் கவனம் செலுத்த

வேண்டும் என்றும், அத்தகைய படைப்புகளை பூக்கூடை ஏற்கிறது என்றும் சுட்டிக் காட்டியுள்ளது.

**மத நல்லிணக்கம்**

மத நல்லிணக்கமும் மனித நேயமும் (சனவரி - பிப்ரவரி 1993) என்ற தலையங்கம் மதங்கள் இறை மனித ஈடுபாடுகளுக்குக் களம் அமைத்துத் தரும் அமைப்புகளாகத் திகழ வேண்டும். ஆனால் இன்று படைப்புகள் குறிப்பிட்ட ஒரு சமயம், சாதி, குடும்பம் என்ற சிறு வட்டங்களுக்குள்ளேயே கதை, காவியம், நாடகம், திரைப்படம் ஆகியவைகளைப் படைப்பதன் மூலம் தன்னுணர்வைத்தான் பெருக்குகின்றன. எனவே, மத நல்லிணக்கத்தைப் பின்பற்ற வேண்டும். மதங்களைத் தழுவுவோர் மட்டுமல்லாமல் மனித நேயம் பேணுகின்றவர்கள் அனைவரோடும் இணைந்து செயலாற்ற முன்வரும்போதுதான் அவர்களுடைய மதப்பற்றின் ஆக்கத் தன்மை முழுமையாக வெளிப்பட முடியும் என்ற கருத்தைச் சுட்டிக்காட்டுகிறது.

**போராட்டம் பற்றியன**

சென்னையில் ஒரு கவன ஈர்ப்பு ஆர்ப்பாட்டம் (மார்ச் - ஏப்ரல் 1997) என்ற தலையங்கம் தமிழகத்தில் பல கவன ஈர்ப்பு ஆர்ப்பாட்டங்கள் நடைபெற்று வருகின்றன என்பதைக் குறிப்பிடுகின்றது. தங்கள் வகுப்பைச் சார்ந்தோரின் நலனை முன்னிறுத்தித் தங்களின் தேவைகளையும், கோரிக்கைகளையும் அரசின் கவனத்திற்குக் கொண்டுவருகின்ற சூழலில் தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்கம் தங்களின் சொந்த நலனை முன்னிட்டு ஆர்ப்பாட்டம் செய்யாமல் தமிழ் மக்கள் அனைவரின் நலனுக்காக ஆர்ப்பாட்டம் நடத்துவதைப் பற்றிப் பேசுகின்றது.

தமிழக அரசு அன்னைத் தமிழை அரியணை ஏற்ற வேண்டும் என்பதே ஆர்ப்பாட்டத்தின் கோரிக்கை ஆகும். அரசின் முன் படைக்கப்பட்ட கோரிக்கைகளுள் குறிப்பிடத்தகுந்தவை சில. அவையாவன:

1. தமிழ் உள்ளிட்ட அனைத்து தேசிய மொழிகளையும் மத்தியில் ஆட்சி மொழி ஆக்க வேண்டும்.

2. தமிழை மத்திய அரசு உயர் தனிச் செம்மொழியாக அறிவிக்க வேண்டும். தமிழில் தந்தி வசதியை விரிவுபடுத்த வேண்டும்.

3. தமிழ் வழி படித்தோர்க்கு வேலை வாய்ப்பில் முன்னுரிமை வழங்க வேண்டும்.

4. அனைத்து மழலையர் பள்ளிகளிலும் தமிழைக் கட்டாயப் பாடம் ஆக்க வேண்டும்.

5. மருத்துவம் உள்ளிட்ட தொழில்நுட்பப் படிப்புகளும், ஆய்வுப் படிப்புகளும் தமிழிலேயே இருக்க வேண்டும்.

6. நீதித்துறையிலும் நிர்வாகத் துறையிலும் தமிழே பயன்படுத்தப்பட வேண்டும்.

7. தமிழ்த் தியாகி சுந்தரலிங்கனாருக்கு விருதுநகரில் நினைவு மண்டபம் அமைக்க வேண்டும்.

8. தமிழ் வளர்ச்சிக்கான அரசு குழுக்களில் ''த. மு. எ. ச.'' போன்ற அமைப்புகளுக்கும் இடம்தர வேண்டும்.

உரிய நேரத்தில் தகுந்த முறையில் இக்கோரிக்கையை அரசு நிறைவேற்றும் என்ற நம்பிக்கை பூக்கடைக்கு நிறைய உண்டு என்ற நம்பிக்கையுடன் முடிவு பெறுகின்றது.

**தொலைக்காட்சி**

மூடர்பெட்டி (ஜுன் *1993*) என்ற தலையங்கம் இன்றைய தொலைக்காட்சி பெட்டியின் செயல்பாடுகள் பற்றிக் கூறுகின்றது. அலைவரிசைகளை அதிகப்படுத்தி அவற்றின் மூலம் பெரும் திரை ஓவியங்கள் மற்றும் அவற்றோடு தொடர்புடைய பேட்டிகள் போன்றவற்றையே நாள் முழுவதும் ஒளிபரப்புகிறார்கள். இது தொடருமானால் தமிழ் நேயர்கள், இந்த திரைக்குள்ளேயே அடைபட்டுப் போவார்கள். இந்த திரைகளைக் கிழித்தெறிய வேண்டும். தேவைக்கு மட்டும் அவற்றைப் பயன்படுத்துவது நம்முடைய திறமையைப் பொறுத்தது ஆகும். மூடர் பெட்டிகளைத் தங்கள் அறிவாற்றலுக்குச் சவப்பெட்டிகளாக்கிக் கொள்ளாமல் வாழக் கற்றுக்கொள்கிறவர்களால்தான் நமது சமுதாயத்தின் வருங்காலத்தைச் சீர்படுத்த முடியும் என்ற கருத்தை இத்தலையங்கம் சுட்டிக்காட்டுகின்றது.

**கிறித்தவ அறிஞர்கள்**

பத்தொன்பதாம் நூற்றாண்டில் கிறித்தவத் தமிழ் இலக்கியத்திற்குச் சிறப்பு செய்யும் வகையில் தங்கள் பங்களிப்புக்களை வழங்கியவர்களுள் முக்கியமானவர் அருள்திரு. சாமுவேல் பவுல் அவர்கள். இவரது நினைவாக அமைந்துள்ள தலையங்கத்தில் (மே-ஜுன் *1996*) கிறித்தவத்திற்கும் தமிழுக்கும் அவர் ஆற்றிய தொண்டு தெளிவாகவும் விளக்கமாகவும் எடுத்துரைக்கப்படுகின்றது.

அருள்திரு. ஆர்.எஸ். மெக்னிக்கல் (மே *1986*) என்ற தலையங்கம் சென்னைக் கிறித்தவக் கல்லூரியில் *1931*ஆவது ஆண்டிலிருந்து இருபத்தோராண்டுகளாக

ஆங்கிலப் பேராசிரியராகப் பணியாற்றிய இராபர்ட் சிம்சன் மெக்னிக்கல் பற்றியது. ஆங்கிலப் பேராசிரியராக இருந்த மெக்கனிக்கல் பாடம் நடத்தும் முறை, மாணவர்களுடன் பழகும் பண்பு, அவருடைய சிறப்புக்கள் ஆகியவற்றை இத்தலையங்கம் எடுத்துரைக்கின்றது. கிறித்தவம் இந்த நாட்டிற்கு ஒன்றுமே செய்யவில்லை என்பதாக நேற்று முளைத்த சில அரசியல் தலைவர்களும், சமய வெறி பிடித்தவர்களும் பேசுகின்ற பேச்சுக்களை மேற்கண்ட செய்தி பொய்யாக்குகின்றது. மத மாற்றம் இவருடைய மனதில் சிறிதளவும் தோன்றியதில்லை. மனத்தில் படிந்து மனிதனை ஆட்டுவிக்கும் மதம் என்ற ஆணவத்தை அகற்றி, மாணவர்களுக்கும் பிறர்க்கும் வழிகாட்டிகளாக இருந்தவர் என்ற கருத்தைச் சுட்டிக்காட்டுகின்றது.

மார்ட்டின் லுத்தர் இன்று இருந்தால் (அக்டோபர் 1983) என்ற தலையங்கம், ஐநூறு ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த மார்ட்டின் லுத்தர் இன்று இருந்திருந்தால் என்ன செய்திருப்பார் என்பதனை விளக்குகின்றது.

1. ஆலய ஆராதனையின்போது தூங்கி வழியும் அன்பர்களைப் பார்க்கும்போது

2. ஆலயத்தை சிறுவர்கள் ஓடி விளையாடும் விளையாட்டுத் தலமாக மாற்றி - அவர்களை வேடிக்கை பார்த்துக்கொண்டிருக்கும் பெற்றோரைக் காணும்போது

3. ஆலயத்துக்குக் காணிக்கை கொடுப்பது பற்றி முழு நீள அருளுரையாற்றும் போதகர்களின் வார்த்தைகளைக் கேட்கும்போது

4. ஆலய நிதிக்காக லாட்டரிச் சீட்டு நடத்தும் சபைகளுக்குச் செல்லும்போது

5. ஆலய நிர்வாகத்திற்காக அடிபிடிச் சண்டை போட்டு நீதிமன்றம் வரை செல்லும் உறுப்பினர்களைக் காணும்போது

இன்னும் எத்தனை நியாயங்களை எழுதி ஆலயக் கதவுகளில் அறைவாரோ, தெரியவில்லை எனக் குறிப்பிடுகின்றது.

**சிறப்பிதழ்த் தலையங்கம்**

கிறிஸ்துமஸ், புத்தாண்டு ஆகிய பண்டிகைக் காலங்களில் வெளிவந்த இதழ்களின் தலையங்கங்கள் அச்சிறப்பு நாட்களில் கருத்துள்ள செய்திகளைக் கொண்டுள்ளன. புத்தாண்டில் அமைந்துள்ள தலையங்கம் யாவருக்கும் எல்லாம் கிடைக்கட்டும், புது உலகைக் காண்போம் என்ற கருத்தைச் சுட்டுகின்றது.

கிறிஸ்மஸ் மரம் தரும் கனிகள் (நவம்பர், டிசம்பர் *1996*) என்ற தலையங்கம் கிறிஸ்மஸ் மரத்திற்கு உயிர் தருகின்றவை மின் விளக்குகளோ, அலங்காரப் பொருட்களோ அல்ல. பிறருக்கென்று நன்கொடைகளை வழங்க முன்வருகின்ற நம்முடைய வள்ளல் தன்மையே அதற்கு உயிர் கொடுக்க வேண்டும் என்ற கருத்தைச் சுட்டிக்காட்டுகின்றது.

பெரியவர்களின் வருகை (மார்ச்சு *1986*) என்ற தலையங்கம் போப்பாண்டகை ஜாண் பால் அவர்களும் காண்டர் பரி ஆர்ச் பிஷப் ராபர்ட் ரன்சி அவர்களும் பெப்ருவரியில் இந்தியாவிற்கு வருகைபுரிந்த பொழுது ஏற்பட்ட பிரச்சினையும், தீர்வும் பற்றி அமைந்துள்ளன. இவர்கள் இந்தியாவைக் கிறித்தவ நாடாக்க வருகிறார்கள் என்ற தவறான கருத்துக்களைச் சிலர் பரப்பினர். ஆனால் அது உண்மைக்குப் புறம்பானது. கிறித்தவத்தை இந்தியப்படுத்த ஊக்கமளித்தார்கள் என்று சொன்னால் அதில் உண்மை இருக்கிறது என்ற கருத்தைச் சுட்டிக்காட்டியுள்ளார்.

வீர சுதந்திரம் (ஜுலை - ஆகஸ்ட் *1997*) என்ற தலையங்கம் நம் நாடு சுதந்திரம் பெற்று ஐம்பதாண்டுகள் நிறைவு பெறுவதையொட்டி அமைந்துள்ளது. சுதந்திரம் என்பது ஐம்பதாண்டுகளுக்கு முன்பு வெள்ளையர் ஆட்சியிலிருந்து நாம்



விடுபட்டதைக் குறிப்பதாக இன்று உள்ளது. ஆனால் இன்று எந்த அரசியல் அமைப்புக்கும், கட்சிக்கும், நாம் அடிமைகளாகிவிடாமல் நம்முடைய ஆளுமையை பேணிக்கொள்வதே இன்றையக் காலக்கட்டத்தில் நம்முடைய சுதந்திர வாழ்க்கைக்குத் தேவையானதாகும் என்ற கருத்து சுட்டிக் காட்டப் பெறுகின்றது.

**அஞ்சல் வழியே கிறித்தவ இலக்கியம்**

இக்காலத்தில் அஞ்சல் வழியே பல பாடங்கள் பயிற்றுவிக்கப்படுகின்றன. இவ்வகையில் கிறித்தவத் தமிழ் இலக்கியத்திற்கு ஒரு பாடத்திட்டம் அமைத்து அதனை வேண்டுவோருக்கெல்லாம் ஓராண்டுகாலப் பயிற்சியை அஞ்சல் வழியே வழங்க வேண்டும் என்ற திட்டம் உள்ளதையும், பாடத்திட்டத்தை கிறித்தவத் தமிழ் அறிஞர்களின் துணையோடு உருவாக்கி வருவதையும் நன்முறையில் தேர்ச்சி பெறுவோருக்குச் சான்றிதழ்கள் வழங்க தீர்மானித்திருப்பதைப் பற்றியும் இத்தலையங்கம் (மே-ஜுன் 1997)விளக்குகின்றது.

**பூக்கூடை தலையங்கத்தின் சிறப்பியல்பு**

பூக்கூடை இதழானது கிறித்தவ சமயம் சார்ந்த இதழாக இருந்தாலும் அவற்றில் உள்ள தலையங்கம் எல்லோராலும் ஏற்றுக்கொள்ளும்படி அமைந்துள்ளது. பூக்கூடையில் தலையங்கம் எழுதும் ஆசிரியர் யாருக்கும் அஞ்சாமலும் அதே சமயம் யாருக்கும் கட்டுப்படாமலும் தான் கொண்ட கொள்கையில் உறுதியாக இருந்து எழுதி வருகின்றார் என்பதைப் பூக்கூடையில் இடம்பெற்றுள்ள தலையங்கத்தை ஆராயும்பொழுது அறிய முடிகின்றது. நல்லதைப் பாராட்டுவதிலும் தீயவற்றைக் கண்டிப்பதிலும், ஆலோசனை வழங்குவதிலும் பொதுவாகச் செயல்பட வேண்டும் என்ற கொள்கையில் பூக்கூடையின் சிறப்பாசிரியர் உறுதியாக இருந்து வருகின்றார்.

கிறித்தவ இதழான பூக்கூடை தமிழ் இலக்கியத்திற்கு பொதுவாகவும், கிறித்தவ இலக்கியத்திற்கு சிறப்பாகவும் செயல்பட்டு வருகிறது என்றாலும், தலையங்கத்தைப் பொருத்தவரை சாதி, மதம், மொழி, ஏழை, பணக்காரன், முதலாளி, தொழிலாளி என்ற கட்டுக்களையெல்லாம் கடந்து மனிதநேயம், சமத்துவம், சமதர்மம் என்ற கொள்கையில் உறுதியாக இருந்துவந்துள்ளது என்பதனை ஆணித்தரமாகக் கூறலாம்.

**குட்டிக்கதைகள்**

பூக்கூடை இதழில் குட்டிக்கதைகள் பல இடம்பெற்றுள்ளன. போலி வேடம் என்ற கதை ஒருவர் புறாக்கள் வளர்த்தார். அதற்கு காலை, மாலை தீனி போட்டார். ஒரு காகம் உழைக்காமல் சுண்ணாம்பில் புரண்டு விட்டு வந்து புறாக்கள் கூட்டத்தோடு சேர்ந்து தீனி தின்றது. ஒருநாள் பக்கத்தில் இருந்த காகம் கா, கா என சத்தமிட்டது கண்டு போலிப் புறாவும் கத்தியது. உடனே புறாக்கள் போலிப்புறாவைக் கொத்தி விரட்டின.

இந்தக் கதையின் மூலம் ஆசிரியர் போலி வேசம் தெரியாமல், உண்மையாகவே கிறித்துவை உள்ளத்தில் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கூறுகிறார். ஒழுங்காக ஆலயம் சென்று கூட்டங்களில் கலந்துகொண்டு, பல பிரசங்கங்கள் கேட்டு வெளித்தோற்றத்திற்குக் கிறித்தவர்களாய் இல்லாமல், உண்மையாகவே இரட்சிக்கப்பட வேண்டும் என்ற கருத்தை இக்கதை வலியுறுத்துகிறது.

விரோதியையும் மன்னிக்க வேண்டும்; விசுவாசத்தோடும், நம்பிக்கையோடும் கடவுளிடத்தில் இருந்தால் சாத்தானுடைய பிடியிலிருந்து நம்மை மீட்க வல்லவராய் இருக்கிறார். அவராலே கூடாத காரியம் ஒன்றுமில்லை; நன்மையைக் கருதியே பலர் ஆலயம் செல்கின்றனர்; அழிவிற்கு முன் அகந்தை வரும் போன்ற கருத்துக்கள் குட்டிக் கதைகளில் கூறப்படுகின்றன.

**ஆதாரக்கதை**

நடந்த நிகழ்வை ஆதாரமாகக் கொண்டு கதை எழுதப்பட்டுள்ளன. வீணான ஆசைகள் என்ற கதை இலண்டனில் ஒரு கசாப்புக்கடைக்காரர் பன்றிகளை பிடிப்பதற்காக தன் பையில் இருந்த மொச்சைப் பயிரைச் சிறிதளவு தூவி விட்டு வந்தார். அவரைத் தொடர்ந்து பன்றிகளும் கசாப்புக்கடைக்குள் வந்து அகப்பட்டுக்கொண்டன. இதைப்போன்று சாத்தானும் நமக்கு ஆசை காட்டுகிறான். சாத்தானுடைய வழி நம்மை அழிவுக்குத்தான் அழைத்துச் செல்லும். விசுவாசத்தோடும், நம்பிக்கையோடும் கடவுளிடத்தில் இருந்தால் சாத்தானுடைய பிடியிலிருந்து மீட்க வல்லவராய் இறைவன் இருக்கிறார் என்று முடிகின்றன.

வெளிநாட்டு இறைப்பணியாளர் ஒருவரை சிவகாசியில் கொன்றுவிட்டார்கள். அவர் மரிக்கும்போது இறைவா இந்த ஊரை ஆசீர்வதியும் என்று சத்தமிட்டார். அவருடைய கல்லறை சிவகாசியில் உள்ளது. அதனால்தான் சிவகாசி குட்டி ஜப்பான், கொழும்பு என்றழைக்கப்படும்படி சிறப்புப் பெற்றது என்று ஆதாரக்கதையில் எழுதப்பட்டுள்ளது.

**துணுக்குகள்**

பூக்கூடை இதழில் துணுக்குகள் வாசகர்களுக்குப் புத்துணர்ச்சி ஊட்டுபவனாக அமைந்துள்ளன.

''வேகமாக இயங்கிக் கொண்டு வரும் இன்றைய உலகில் நீண்ட நேரத்தை எடுத்துக்கொள்ளும் கதை, கட்டுரைகளைப் படிப்பவரைவிட துணுக்குகளைப் படிப்பவரே அதிகரித்து வருகின்றனர். அதனால் எல்லா இதழ்களுமே துணுக்குச் செய்திகளை அதிக அளவில் வெளியிட்டு வருகின்றன. துணுக்குகளைச் செய்தித் துணுக்குகள், நகைச்சுவைத் துணுக்குகள் என்ற இரு பிரிவுகளில் அடக்கலாம்.

பூக்கூடையில் துணுக்குகள் நகைச்சுவையோடும், செய்தியோடும், சிந்தனையைத் தூண்டுவதாகவும் உள்ளன. ஏழ்மை நிலையில் இருந்தாலும் இறைவனுக்குக் காணிக்கை செலுத்த வேண்டும்; நம்மைவிட ஏழ்மை நிலையில் உள்ளவர்க்கும் நண்பர்களுக்கும் உதவ வேண்டும் ஆகிய கருத்துக்களில் துணுக்குகள் பல இடம்பெற்றுள்ளன.

**திருவும் அருள்திருவும்**

அருள்திரு : *(புதிதாக கிறிஸ்தவனாக மாறிய கிராமத்தானைப் பார்த்து) ஏம்பா! ஜெபம் செய்யும்போது கண்ணைத் திறந்து கொண்டிருந்தாயாமே?*

திரு : *அப்படித்தானே வேதாகமம் சொல்லுகிறது. விழித்திருந்து ஜெபம் செய். இதிலே என்னங்க தப்பு?*

என்ற துணுக்கு சிந்தனையைத் தூண்டுவதாக அமைந்துள்ளது.

மார்ட்டீன் லுத்தர்: சாவு என்பது மோசேயின் வெண்கலச் சர்ப்பம் போன்றது. இது உருவத்தில் பாம்பு. ஆனால் கொத்தாது. இதற்கு விஷமும் இல்லை... கிறித்தவர்களுக்கு சாவு என்பது செத்தது.

என மார்டீன் லுத்தரின் கூற்று சிந்தனையைத் தூண்டும் வகையில் அமைந்துள்ளது.

**செய்தித் துணுக்குகள்**

உருசிய ஆர்தோடக்ஸ் திருச்சபை தனது ஆயிரமாவது ஆண்டு விழாவை 1988ஆம் ஆண்டு கொண்டாடியது.

உலகத்திலேயே விலை மதிப்பில் உயர்ந்த பாலம் நியூயார்க்கிலுள்ள வெரசானோ நாரோஸ் தொங்குபாலமாகும். இதற்கான செலவு 320 கோடி ரூபாய்.

உலகத்திலேயே உயரமான மரம் கலிபோர்னியாவிலுள்ள ரெட்வுட் மரமாகும். இதன் உயரம் 112 மீட்டர். இது மனிதனைவிட 63 மடங்கு உயரமானது.

மொனாகோ நாட்டில் நூறில் எண்பத்து நான்கு பேர் தொலைபேசிகள் வைத்துள்ளனர். அமெரிக்காவில் 70%. இதுபோன்ற செய்தித் துணுக்குகள் பூக்கூடையில் இடம்பெற்றுள்ளன.

**தபால் தலைத் துணுக்குகள்**

1966ஆம் ஆண்டு இங்கிலாந்து கிறிஸ்மஸ் தபால் தலைகளை வெளியிட்டது. பின்னர் ஆண்டுதோறும் கிறிஸ்மஸ் தபால் தலைகளை வெளியிட்டு வருகின்றது. சிலுவையின் கீழே அவரைப் பின்பற்றுவரான யோவான், இயேசு கிறிஸ்துவின் தாய் மேரி, இயேசுவின் சிறந்த பக்தையாக விளங்கிய மகதலேனாள் மேரி போன்றவர்கள் நிற்கும் காட்சிகளைத் தபால் தலையில் காணலாம். இவ்வாறு பயனுள்ள செய்திகள் தபால்தலைத் துணுக்குகளில் விரவிக்கிடக்கின்றன.

**செய்திச்சரம்**

பிற இதழ்களில் காணப்படும் இன்றியமையாத செய்திகள் செய்திச்சரம் என்ற தலைப்பில் பூக்கூடையில் காணப்படுகின்றது.

கண்பார்வையற்றவர்களுக்குப் படிக்க ஏதுவாக பிரெய்லி மற்றும் ஆடியோ பாடல் கேசட் நூலகத்தைத் தேசிய கண் பார்வையற்றோர் சங்கம் மற்றும் சென்னை கிளையும் சேர்ந்து கன்னிமாரா நூலகத்தில் நிறுவியுள்ளது.

சிந்தை கவர்ந்த பாரதிதாசனுக்கு ஒரு சின்ன மடல் (மார்ச் - ஏப்ரல் 1997) என்ற கட்டுரையை செந்தில்நாதன் எழுதியுள்ளார். தமிழ்த் திரைப்படப் பாடல்களின்

நிலையைக் கண்டித்து 1936ஆம் ஆண்டு புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் எழுதிய பாடலைப்போன்று இன்றைய திரைப்பட பாடல்களின் போக்கை கண்டித்து,

பாவேந்தரே உங்கள் பாசறையில்
அதுபோன்ற கவிஞர் யாராவது
உங்கள் கண்ணுக்குத் தெரிந்தால்
தந்தி கொடுங்கள்

என்று முடிகின்றன. இந்தச் செய்திச்சரம் தீக்கதிர் இதழிலிருந்து எடுக்கப்பட்டு பூக்கூடை இதழில் வெளிவந்ததாகும்.

**உரையாடல்**

பூக்கூடை இதழில் உரையாடல் பல இடம்பெற்றுள்ளன. இவ்வுரையாடல்கள் வழி, சிறந்த சிந்திக்க வைக்கும் கருத்துக்கள் வாசகர்களுக்கு புலப்படுத்தப்படுகின்றன. கணவன் மனைவி இருவருக்குமிடையே நடக்கும் உரையாடல், இறை வழிபாடு தொடர்பான உரையாடல். குழந்தைகளின் ஐயத்தைத் தீர்க்காத பெற்றோரைப் பற்றிய உரையாடல் என உரையாடல்கள் பல அமைந்துள்ளன. பாட்டிக்கும் பெயர்த்திகளுக்குமிடையே நடைபெறும் உரையாடலில் கொஞ்சத்தில் நிறைவு அடைகிறவன் ஏழை, தேவை தேவை என்று அலறுகிறவன் பணக்காரன் என்ற கருத்து கூறப்படுகிறது.

**விண்ணப்ப வீடு கோத்திரக்கோயில்**

பூக்கூடை இதழில் விண்ணப்ப வீடு, கோத்திரக்கோயில் என்ற இரண்டு சிறப்புப் பக்கங்கள் பூக்கூடை இதழில் ஒதுக்கப்பட்டுள்ளன. ஆனால் இவை தற்போது வெளிவரும் இதழ்களில் இடம்பெறவில்லை.

இன்னின்ன காரியத்திற்காகக் கடவுளை நோக்கி விண்ணப்பம் செய்திட வேண்டும் என விரும்புவோர் விண்ணப்ப வீடு அல்லது கோத்திரக் கோயில் என்று தலைப்பெழுதி, அதன்கீழ் எதற்காகச் செபிக்க வேண்டும் என்பதை எழுதி அனுப்புகின்றனர். அவ்வேண்டுதல் அவரவர் பெயர்களுடன் பூக்கூடையில் விண்ணப்ப வீடு பக்கத்தில் வெளியிடப்படுகிறது. கோத்திரம் செய்வதாக இருந்தாலும் இந்த முறையே பின்பற்றப்படுகிறது.

விண்ணப்ப வீட்டின் அல்லது கோத்திரக் கோயிலின் உறுப்பினர்கள், ஒவ்வொரு மாதமும் இரண்டாவது சனிக்கிழமை இரவு 8 மணிக்கு மேல் அடுத்த நாள் ஞாயிறு காலை 6 மணிக்குள், எப்போதேனும் தங்களுக்கு இயல்கின்ற நேரத்தில் குறைந்தது 30 நிமிடங்கள் கேட்டுக்கொள்பவர்களுக்காக செபம் செய்கின்றனர். பூக்கூடையில் செப வேண்டுகோளைக் காண்கிறவர்களும் செபிக்கலாம்.

**நூல் அறிமுகம்**

வரப்பெற்றோம் என்ற தலைப்பில் பல்வேறு கலை, இலக்கியம், சமயம் தொடர்பான ஆயிரத்துக்கு மேற்பட்ட நூல்களைக் குறித்து அறிமுகப்படுத்தப் பட்டுள்ளன. நூல்களை அறிமுகப்படுத்தும்போது நூலினை ஆக்கியோர் வரலாறும் அந்நூலினைப் படிப்பதால் ஏற்படும் பயனையும் அதன் தொடர்பான செய்திகளையும் அறிய முடிகின்றது.

**பேட்டி**

தேன் துளிகள் தயாரிப்பான ஜேசன் பிரதாப்பார் அவர்களிடம் பூக்கூடைக்காகப் பேட்டி எடுக்கப்பட்டது. தேன் துளிகள் ஒலிபரப்பும் நாள், நேரம், செலவு போன்ற தகவல்களைத் தயாரிப்பாளரிடமிருந்து பேட்டியின் மூலம் பெறப்பட்டன. தேன் துளிகள் நிகழ்ச்சி தேவ ஊழியர்களுக்கென்று சிறப்பான

முறையில் ஒவ்வொரு வியாழன் காலை 7.15லிருந்து 30 நிமிடங்களுக்கு 41 மீட்டரில் ஒலிபரப்பாகின்றது. இந்நிகழ்ச்சியைத் தயாரிக்க ஏற்படும் செலவினை இங்கிலாந்து ஃபோகஸ் ரேடியோ நிறுவனம் ஏற்பது மற்றும் நிகழ்ச்சி அமைப்பு, செயல்முறை போன்றன விளக்கப்பட்டுள்ளன. பேட்டி எடுத்தவர்கள் கிறித்தவ இலக்கியச் சங்கத்தில் பணியாற்றும் ஸ்விட்லின் பிரபாகரன், பிரியா ஜெயசீலன் ஆகியோர். பெயின் பள்ளியின் ஆசிரியரும் நிர்வாகியுமாகிய செல்வி மோசஸ் என்பவரிடம் அவர்களது இளமைப் பருவம், ஆசிரியையாகப் பணி செய்யும் வாய்ப்பு, ஆசிரியர் பணி, நிர்வாகப் பணி போன்ற தகவல்கள் அடிப்படையில் பேட்டி எடுக்கப்பட்டுள்ளது. பேட்டி எடுத்தவர்கள் எம்ஸி சுதர்ஸன், பிரியா ஜெயசீலன் ஆகியோர்.

**படக்கதை**

மோசே என்னும் படக்கதை மோசேயின் வாழ்க்கை வரலாற்றினைக் கூறும் கதையாக அமைந்துள்ளது. சாலமோன் என்பவர் இவ்வாழ்க்கை வரலாற்றுப் படம் வரைந்துள்ளார்.

**வாசகர் உறவு**

இதழ்களில் வாசகர் உறவு இரண்டு முறையில் அமைந்துள்ளது. ஒன்று ஆசிரியரோடு கேள்வி பதில்; மற்றொன்று வாசகர் கடிதங்கள் என்பவையாகும். கேள்வி - பதில் முறை பூக்கூடையில் காணப்படவில்லை. வாசகர் கடிதங்கள் உங்கள் கருத்து என்னும் பகுதியின் மூலம் பூக்கூடை வாசகர்களுடன் உறவு வைத்துள்ளது. இவற்றில் வெளிவந்த கடிதங்களைக் கீழ்க்காணும் முறையில் பகுக்கலாம்.

1. பூக்கூடையில் வந்த மொத்தப் படைப்புகளைப் பாராட்டுதல்.
2. இதழ் விரைவாக அனுப்ப வேண்டுதல்

3. படைப்புகளில் உள்ள தேவையில்லாத பகுதிகளை நீக்கும்படிக் கூறுதல்.
4. எழுத்தாளர்களைப் பாராட்டுதல்
5. தலையங்கத்தைப் பாராட்டுதல்
6. இறைவனிடம் வேண்டுதல் செய்யப் பணித்தல்
7. கிறித்தவரல்லாதவர் படைப்புக்களைப் பாராட்டுதல்
8. இதழ் ஆசிரியரைப் பாராட்டுதல்

தற்போது வெளிவரும் பூக்கூடை இதழில் வாசகர் கடிதம் இடம்பெறவில்லை.

**விவிலிய வினாவிடைப் போட்டி**

ஒவ்வொரு திங்களும் குறிப்பிட்ட தலைப்பின் கீழ் கேள்விகளை அமைத்து அதற்குத் தகுந்த விடை எழுதுபவர்க்குப் பரிசுகளும் கொடுக்கப்படுகின்றன. வாசகருக்கு விவிலியத்தைப் படிக்க ஊக்கப்படுத்துதலும், விவிலிய அறிவைப் பெருகச் செய்தலும் இப்போட்டி நடத்துதலின் நோக்கமாக அமைகின்றது. தற்போது இத்தகைய போட்டி இடம்பெறவில்லை.

**விளம்பரம்**

இதழின் வளர்ச்சிக்கும் பொருளாதார நிலைக்கும் விளம்பரம் உறுதுணையாக இருக்கிறது. பூக்கூடையில் விளம்பரம் குறைவாகவே உள்ளது. எல்லா இதழ்களிலும் பின் அட்டையின் பின் பக்கம் கிறித்தவ இலக்கியக் கழகத்தின் புத்தக விளம்பரம் உள்ளது. இதழின் உள்ளே பெரும்பாலும் விளம்பரம் குறைவாகவே காணப்படுகின்றது. இது இதழின் தனித்தன்மையை வெளிப்படுத்துகின்றது.

**படங்கள்**

எல்லா இதழ்களின் முன் அட்டையிலும் படம் அமைந்துள்ளது. அட்டைப் படங்கள் ஒவ்வொன்றும் அந்தந்த மாதத்தின் சிறப்பு தினங்களைப் பொறுத்து அமைகின்றன. இதழின் உள்ளே அவ்வளவு படங்கள் இல்லையென்றாலும் ஒரு சில படங்கள் மட்டும் கருத்துக்களை விளக்கும் வகையில் அமைந்துள்ளன.

**அறிவிப்புகள்**

அறிவிப்பு எனும் பகுதியை இதழாசிரியர் மட்டுமே பயன்படுத்தியுள்ளார். வாசகருக்கு, சந்தா கட்டண முறை, விளம்பரக் கட்டண முறை, கடிதம் அனுப்ப வேண்டிய முறை, குடியிருப்பு மாற்றுவோர் புதிய முகவரி அனுப்பும் முறை ஆகியவை பற்றி ஆசிரியர் அறிவிப்பது ''அறிவிப்புகள்'' எனும் பகுதியில் இடம்பெற்றுள்ளன.

**பிற குறிப்புகள்**

சிறுகதைப் போட்டி, புதிய பங்காளர்களை வரவேற்றல், பூக்கூடை ஜெபநாள் அறிவிப்பு, செய்திக்கொத்து ஆகிய குறிப்புகளும் இடம்பெற்றுள்ளன.

**தொகுப்புரை**

இதழ்ப்பணி என்னும் இயலில் இதுகாறும் கூறப்பட்டவற்றிலிருந்து கீழ்க்காணும் கருத்துக்கள் தொகுத்துத் தரப்படுகின்றன.

தற்காலத்தில் வேகமாக வளர்ந்துவரும் துறைகளுள் இதழியலும் ஒன்று. ஐரோப்பியர்கள் நமது நாட்டிற்கு ஆற்றியுள்ள பணிகளுள் இதழியல் குறிப்பிடத்தக்கது. ரிச்சர்டு ஜான்சன் முதன் முதலாக 'மெட்ராஸ் கூரியர்' என்ற ஆங்கிலப் பத்திரிகையை வெளியிட்டார்.

தமிழில் கி.பி.1800இக்குப்பின்னரே இதழ்கள் வெளிவர ஆரம்பித்தன. 'தமிழ் மேகசின்' இதழே தமிழ்நாட்டில் தோன்றிய முதல் தமிழ் இதழாகும். கிறித்தவ இதழான பூக்கூடை கிறித்தவ இலக்கியச் சங்கத்தால் 1979ஆம் ஆண்டு டிசம்பர் திங்கள் தொடங்கப்பட்டது.

கிறித்தவ மக்களின் வாழ்வியல் முறைகளையும் பண்பாட்டுக் கூறுகளையும் பூக்கூடை வெளிக்கொணர்கிறது. பூக்கூடை ஏறத்தாழ 50 படைப்பாளர்களை அறிமுகப்படுத்தியுள்ளது. கவிதை, சிறுகதை, நாடகம் என்னும் படைப்பிலக்கியங்களும் கட்டுரை என்ற இலக்கிய வடிவமும் அதிக அளவில் இடம்பெற்றுள்ளன.

பூக்கூடையில் வெளிவந்துள்ள தொடர்க்கட்டுரைகள், பயண அனுபவங்கள், சிறுகதைகள் ஆகியவை பல நூல்களாக வெளிவந்துள்ளன.

மறைந்த கிறித்தவப் பெரியார்களின் வாழ்வை இன்றைய சமூகத்தினரும் அறிந்துகொள்ள வேண்டும் எனும் எண்ணத்தில் வாழ்க்கை வரலாற்றுக் கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன. கிறித்தவர் அல்லாத எழுத்தாளர்களின் மனிதநேயம் சார்ந்த படைப்புக்களுக்கும் பூக்கூடை இதழ் வரவேற்பு அளிக்கின்றது.

தலையங்கம், கதை, கட்டுரை, கவிதை, துணுக்கு, கேள்வி-பதில், ராசிபலன், நூல் வெளியீடுகள், வாசகர் கடிதம் போன்றவை இதழ்களின் பொதுவான உத்தியாகும். பூக்கூடையில் இடம்பெற்றுள்ள தலையங்கத்தை இதழின் சிறப்பாசிரியர் எழுதி வருகின்றார். தலையங்கம் அனைத்தும் தலைப்பிடப்பட்டு, அத்தலைப்புகள் அனைத்தும் கருத்தை வெளிப்படுத்துவனவாக அமைந்துள்ளன. கிறித்தவ சமயம் சார்ந்த இதழாக இருப்பதால் கிறித்தவ மக்களுக்கு வழிகாட்டியாகவும் இத்தலையங்கம் காணப்படுகின்றது. சமுதாய நிகழ்ச்சிகள் பற்றிய தலையங்கம் சமூகத்தில் மண்டிக்கிடந்த பல்வேறு பிரச்சினைகளை

வெளிக்கொண்டு வருகின்றது. சமுதாயச் சிக்கல்களை மையமாகக் கொண்ட தலையங்கம் பெரும்பாலும் விவிலியக் கருத்துக்களின் ஊடாக சமுதாய நோக்கோடு படைக்கப்பட்டுள்ளன.

பூக்கூடையில் குட்டிக்கதை, ஆதாரக்கதை, துணுக்கு, செய்தித்துணுக்கு, தபால் தலைத்துணுக்கு, செய்திச்சரம் ஆகியவற்றைத் தன்னகத்தே கொண்டு படைப்பாளர், வாசகர் சிந்தனைக்கு இணைப்பாக உள்ளது. வாசகர் கடிதங்கள் உங்கள் கருத்து என்னும் பகுதியின் மூலம் பூக்கூடை வாசகர்களுடன் உறவு வைத்துள்ளது.

தற்பொழுது வரும் இதழ்களில் உங்கள் கருத்து என்னும் பகுதி இடம்பெறுவதில்லை. அறிவிப்புகள், விளம்பரங்கள், படங்கள் போன்றவற்றிற்கு அதிக வாய்ப்புக் கொடுக்காமல் இலக்கியப் படைப்புகளுக்கே அதிக இடம் கொடுத்துள்ளது.

## அடிக்குறிப்புகள்

1. மா.சு. சம்பந்தன், தமிழ் இதழியல் வரலாறு, ப.24.

2. அகமது மரைக்காயர், ''இதழ்கள் '', தமிழ் இலக்கியக் கொள்கை, தொகுதி 9, ச.வே. சுப்பிரமணியன், ச. சிவகாமி, (ப.ஆ.), ப.231.

3. சு.அ. இராமசாமி , நாள், கிழமை, திங்கள், இதழ் விளக்க வரிசை, ''முன்னுரை'', ப.ii.

4. H.B. Rajkumar, "Tamil Publications", **The C.L.S. 125 Anniversary Souvenir,** p.75.

5. Ibid, p.75.

6. நன்னூல், நூ.எ.141.

7. கிறித்து சபை கீர்த்தனைகள், கீ.எ.186.

8. பரிபாடல், 17 செவ்வேள், பா.அ.47-53.

9. திருவாசகம், நீத்தல் விண்ணப்பம், பா.எ.23.

10. தாயுமானவ சுவாமிகள் திருப்பாடல் திரட்டு, பராபரக்கண்ணி.

11. தி. தயானந்தன் பிரான்சிஸ், கிறித்தவ அருட்கவிஞர்கள், ப.23.

12. கிறித்து சபை கீர்த்தனைகள், கீ.எ.139.

13. திரு.வி. கலியாணசுந்தரனார், கிறித்துவின் அருள்வேட்டல், பா.எ.7.

14. பூக்கூடை, ஜூலை - ஆகஸ்ட், 1990, ப.21.

15. பூக்கூடை, சனவரி- பிப்ரவரி, 1996, ப.2.

16. பூக்கூடை, மார்ச் 1982, ப.23.

17. பூக்கூடை, சனவரி 1993, ப.11.

18. பூக்கூடை, ஜூலை - ஆகஸ்ட், ப.20.

19. பூக்கூடை, மே - ஜூன் 1985, ப.12.

20. பூக்கூடை, மார்ச் 1985, ப.9.

21. பூக்கூடை, ஆகஸ்ட் 1985, ப.25.

22. பூக்கூடை, டிசம்பர் - சனவரி 1981-1982, ப.11.

23. பூக்கூடை, டிசம்பர் - சனவரி 1984, ப.15.

24. பூக்கூடை, மார்ச் - ஏப்ரல் 1989, ப.5.

25. கோ. கேசவன், தமிழ்ச்சிறுகதைகளில் உருவம், ப.8.

26. இரா. தண்டாயுதம், தற்காலத்தமிழ் இலக்கியம், ப.38.

27. ந. பிச்சமுத்து, படைப்பிலக்கியம், பக்.84-85.

28. திருக்குறள், கு.எ.7.

29. திரு.வி. கலியாணசுந்தரனார், மு.நூ., ப.7.

30. திருக்குறள், கு.எ.1.

31. அ. சிவக்கண்ணன், தமிழ் இதழ்களில் சமுதாய உணர்வு, ப.14.

32. பூக்கூடை, மார்ச் 1983, ப.2.

33. கோதண்டபாணி, இதழியல், ப.139.

34. பூக்கூடை, சனவரி 1990, ப.3.

35. கோதண்டபாணி, மு.ப.

36. பூக்கூடை, ஆகஸ்ட் 1985, ப.2.

37. அகமது மரைக்காயர், மு.நூ., ப.253.

38. பூக்கூடை, செப்டம்பர் 1982, ப.1.

39. பூக்கூடை, சனவரி-பிப்ரவரி 1997, ப.33.

40. பூக்கூடை, மார்ச்-ஏப்ரல், 1997, ப.48.

# இலக்கிய நண்பர் வட்டம்

**முன்னுரை**

எழுத்தாளர்களும், வாசகர்களும் ஒன்று சேர்ந்து பல கருத்துக்களைத் திறனாய்வு செய்வதற்கும் இலக்கிய ரசனை, இலக்கியங்களின் தரம் ஆகியவற்றை உயர்த்துவதற்கும் இலக்கிய வட்டங்கள் துணைபுரிகின்றன. இத்தகைய இலக்கிய வட்டங்கள் இலக்கிய வளர்ச்சிக்கு மட்டுமின்றி வாசகர்களின் சிந்தனைக்கும் தூண்டுகோலாக அமைகின்றன. கிறித்தவ இலக்கியச் சங்கமும் ஆண்டுதோறும் திறனாய்வினை அடிப்படையாகக் கொண்டு இலக்கிய வட்டத்தினை நடத்தி வருகிறது. முப்பத்தியோராண்டுகளாக கிறித்தவ இலக்கியச் சங்கம் நடத்தி வரும் இலக்கிய நண்பர் வட்டம் குறித்து இவ்வியல் ஆராய்கின்றது.

**இலக்கிய வட்டங்கள்**

இலக்கிய வட்டங்கள் தோன்றுவதற்குப் பல்வேறு காரணங்கள் காணப்படுகின்றன. ஒத்த மனதும் ஒத்த திறமையும் ஒத்த வயதும் தேவையான அளவு உள்ளவர்களாய் மிகச்சிலர் தாம் கூட்டுச் சேர முடியும் என்பது இதற்கு முதல் காரணமாகும். அப்படி ஒத்த குணங்களில் சில மாறுபட்டாலும் நட்பு முறையில் விவாதிக்கத்தக்க சூழ்நிலை மிகச்சிறு நண்பர் வட்டத்தில் தான் இருக்க முடியும் என்பது இரண்டாவது காரணம். மனம் விட்டு அந்தரங்கமாக அளவளாவிக் கொள்ளவும் அத்தகைய சிறு கூட்டமே இடம் கொடுக்கும் எனும் கருத்து குறிப்பிடத்தக்கது.[1]

மணிக்கொடி கால எழுத்தாளர் குழு போன்று பல்வேறு குழுக்கள் இலக்கிய உரையாடலைப் பொழுதுபோக்காகக் கொண்டனர். இலக்கிய நண்பர்கள் என்றும் இலக்கிய வட்டம் என்றும் பெயர்களைக் கொண்ட சிறுசிறு அமைப்புகள்

அக்காலத்தில் சென்னை, திருச்சி, யாழ்ப்பாணம், கொழும்பு முதலிய நகரங்களில் அடிக்கடி கூடி இலக்கிய விவாதங்கள் நடத்தின. ஆங்கில, அமெரிக்க, ஐரோப்பிய இலக்கியங்களைப் பற்றிய அறிவும் தெளிவும் தமிழ் எழுத்தாளர்களிடையே வெகுவாகப் பரவுவதற்கு இந்தச் சூழ்நிலை மிகவும் உதவிற்று. அக்காலத்தில் மாலை வேளைகளில் சென்னைக் கடற்கரையில் எழுத்தாளர்கள் கூடி அளவளாவியது தமிழ் இலக்கிய வரலாற்றில் ஒரு சிறந்த கட்டமாகும்.[2] இவ்வாறு தமிழ்நாட்டில் பல இலக்கிய வட்டங்கள் நாளடைவில் ஆங்காங்கே தோன்றலாயின. இவை தமிழ் இலக்கியத்தின் பண்பையும், பயனையும் உயர்த்துவதற்குத் துணைபுரிந்தன. இத்தகு இலக்கிய வட்டங்களால் வாசகர்-ஆசிரியர் தொடர்பு ஏற்படலாயிற்று. பல புதிய திறனாய்வு நூல்களும் வெளிவரலாயின.

இலக்கிய உணர்வு பற்றிய விவாதங்களும் உரையாடல்களும் நடத்தி இலக்கியத் தரத்தைக் காக்க முயன்றுவரும் அமைப்புகளில் தமிழ் எழுத்தாளர் சங்கம், இலக்கியக் கழகம், வெள்ளி வட்டம், இலக்கிய வீதி, கடற்கரைக் கவிஞர் கூட்டம் முதலியவற்றிற்குச் சிறந்த பங்கு உண்டு.

பெங்களூரில் 'இலக்கு' என்ற அமைப்பு பல்வேறு கருத்தரங்குகளை நடத்தி அதில் இடம் பெற்ற கட்டுரைகளைத் தொகுத்து நூலாக வெளியிட்டுள்ளது.

உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம் 'இலக்கியக் கொள்கை' என்ற தலைப்பில் ஆண்டுதோறும் அறக்கட்டளைச் சொற்பொழிவுகள் மற்றும் கருத்தரங்குகள் நடத்தி அவற்றை நூல்களாக வெளியிட்டு வருகின்றது. 'எண்பதில் தமிழ்', எண்பத்தொன்றில் தமிழ் என்ற முறையில் ஆண்டுதோறும் தமிழில் வெளிவந்த படைப்புகள், நூல்கள் பற்றிய கட்டுரைகளைத் தொகுத்து வெளியிட்டுள்ளது இந்நிறுவனம்.

சென்னைப் பல்கலைக் கழகம் பல்வேறு அறக்கட்டளைச் சொற்பொழிவுகள் மற்றும் கருத்தரங்குகள் நடத்தி அவற்றை நூல்களாக வெளியிட்டு வருகின்றது.

இத்தகைய அமைப்புகள் நடத்தி வரும் கருத்தரங்குகள் மூலம் தமிழிலக்கியத்திற்குப் பல புதிய திறனாய்வு நூல்கள் அறிமுகமாகின்றன.

**இலக்கிய நண்பர் வட்டத்தின் தோற்றம்**

வளர்ந்து வரும் தமிழ் இலக்கியத்தில் திறனாய்வு நூல்களும் அதிகம் இடம் பெற வேண்டும் என்ற நோக்கத்துடன் கிறித்தவ இலக்கியச் சங்கமும், கிறித்தவ இலக்கியக் குழுவும் இணைந்து ஓர் இலக்கிய வட்டத்தைத் தொடங்கியன. அவ்விலக்கிய வட்டத்தில் தமிழ்நாட்டின் தலைசிறந்த எழுத்தாளர்களையும் அறிஞர்களையும் இடம் பெறச் செய்து தமிழ் இலக்கிய வகைகளில் திறனாய்வு மேற்கொள்ளச் செய்ய வேண்டும் என்னும் நோக்கத்தில் 'இலக்கிய நண்பர் வட்டம்' என்னும் அமைப்பு 1969ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் தொடங்கப்பட்டது. ஒவ்வோர் ஆண்டும் சனவரி அல்லது ஜூலை மாதத்தில் இலக்கிய நண்பர் வட்டத்தின் கருத்தரங்கம் சென்னையில் நடைபெற்று வருகிறது. இதுவரை பல்வேறு தலைப்புகளில் 29 கருத்தரங்குகள் நடைபெற்றுள்ளன. இலக்கிய நண்பர் வட்டத்தின் முதல் கருத்தரங்கை அமைத்து நடத்தியவர் கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் முன்னாள் தமிழ்ப்பதிப்பாசிரியர்களுள் ஒருவரான ராஜதுரை ஆவார். அவரைத் தொடர்ந்து தி.பாக்கியமுத்து இப்பொறுப்பினை ஏற்றார். 1982 முதல் தி.தயானந்தன் பிரான்சிஸ் நண்பர் வட்டத்திற்குப் பொறுப்பேற்று நடத்தி வருகிறார்.

**இலக்கிய நண்பர் வட்டத்தின் சிறப்பு**

இலக்கிய நண்பர் வட்டத்தில் தமிழகத்தின் தலைசிறந்த நாவலாசிரியர்களும், சிறுகதை எழுத்தாளர்களும், திறனாய்வாளர்களும் தங்கள் கருத்துக்களை வழங்கி வருகின்றனர். இந்நண்பர் வட்டத்தில் படைப்பாளிகள் முன்னிலையிலேயே அவர்கள் படைப்புகளைப் பற்றித் திறனாய்வாளர்கள் மதிப்பிடுகின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது.

பண்பாட்டுத் தெளிவுடைய எழுத்தாளர்கள், திறனாய்வாளர்கள், பேராசிரியர்கள் முதலியோர் இக்கருத்தரங்கங்களில் முக்கிய பங்கேற்றுக் கட்டுரைகள் வாயிலாகவும் கருத்துரைகள் மூலமாகவும் தங்கள் கருத்துக்களை வழங்கி வருகின்றனர்.

நாட்டின் வாழ்க்கை நெறிகளுக்கேற்பவும் கலாச்சார வறட்சிக்கேற்பவும் சமயப்பிடிப்புகளுக்கேற்பவும் நிகழ்காலச் சூழ்நிலைக்கேற்பவும் கருத்தரங்கின் கருப்பொருள்கள் அமைகின்றன. கருத்தரங்கின் கருப்பொருள் மனித சமுதாயத்திற்கு இலக்கியம் பயன்பட வேண்டும் எனும் நோக்கத்தில் அமைந்துள்ளது.

நண்பர் வட்டம் கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் ஆதரவிலே நடத்தப்பட்டு வருகிறது என்றாலும் இங்குக் கிறித்தவ இலக்கியத்தை விட தமிழ் இலக்கியத்திற்கே முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறது. குறிப்பாக, படைப்பிலக்கியம் முக்கிய இடம் வகிக்கிறது. திறனாய்வாளர்களை ஊக்குவித்து படைப்பாளிகளின் சிந்தனையைத் தூண்டுவது இக்கருத்தரங்கின் முக்கிய நோக்கம். நண்பர் வட்டத்தில் படிக்கப்பட்ட கட்டுரைகள், விவாதிக்கப்பட்ட செய்திகள், நடைபெற்ற விவாதங்களில் இடம் பெற்ற குறிப்புகள் முதலியன வீணாகிப் போய்விடக் கூடாது என்ற நோக்கத்துடன் கிறித்தவ இலக்கியச் சங்கம் அவற்றைத் தொகுத்து, நூலாக வெளியிட்டு வருகின்றது. இதன் மூலம் தமிழுக்குப் பல அரிய திறனாய்வு நூல்கள் கிடைக்கின்றன.

**இலக்கிய நண்பர் வட்டத்தில் பங்குகொண்ட நாவலாசிரியர்கள்**

தமிழ் நாவலாசிரியர்களான அகிலன், மு. வரதராசன், நா.பார்த்தசாரதி, தி.ஜானகிராமன், ஜெயகாந்தன், கு.அழகிரிசாமி, சி.சு.செல்லப்பா, அசோகமித்திரன், சு. சமுத்திரம், டி. செல்வராஜ், நீல. பத்மநாபன், சாண்டில்யன், ரா.சு. நல்லபெருமாள், வல்லிக்கண்ணன், பொன்னீலன், ராஜம் கிருஷ்ணன்,

தோப்பில் முகமதுமீரான், ஐசக் அருமைராஜன், டேவிட் சித்தையா, எப்சிபா ஏசுதாசன் ஆகியோர் கலந்துகொண்டு கருத்துக்கள் வழங்கியுள்ளனர்.

**இலக்கிய நண்பர் வட்ட நூல்கள்**

1969ஆம் ஆண்டு தொடங்கப்பட்ட இலக்கிய நண்பர் வட்டம் 2000 வரை 29 கருத்தரங்குகள் நடத்தியுள்ளது. இதில் 17 கருத்தரங்குகளின் கட்டுரைகள் நூல்களாக வெளியிடப்பட்டுள்ளன.[3] அனைத்து நூற்களையும் கிறித்தவ இலக்கியச் சங்கம் வெளியிட்டுள்ளது. 1970, 1982 முதல் 1989, 1998, 2000 ஆகிய ஆண்டுகளில் நடைபெற்ற நண்பர் வட்டத்தின் ஆய்வுக் கட்டுரைகள் தொகுத்து நூலாக வெளியிடப்படவில்லை. கருத்தரங்கில் பங்குபெற்ற கட்டுரையாளர்கள் கட்டுரை தரவில்லை என்ற காரணத்தால் நூலாக வெளியிடவில்லை. 1971, 1992, 1996, 1999 ஆகிய ஆண்டுகளில் நண்பர் வட்டம் நடைபெறவில்லை. நண்பர் வட்டக் கருத்தரங்குகள் முதலில் வெளியே பல இடங்களில் நடந்திருந்தாலும் இப்பொழுது கிறித்தவ இலக்கியச் சங்கக் கட்டடத்திலேயே நடைபெற்று வருகின்றன.

**1. வளரும் தமிழ் இலக்கியம்**

1969ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்களில் நடைபெற்ற நண்பர் வட்டத்தின் முதல் கருத்தரங்கத்தின் தலைப்பு வளரும் தமிழ் இலக்கியம் ஆகும். இக்கருத்தரங்கத்தில் படிக்கப்பட்ட கட்டுரைகள் நாவல், சிறுகதை, திறனாய்வு என்ற மூன்று பிரிவுகளில் அடங்கும்.

**நாவல்**

நாவல் எனும் இப்பகுதியில் முதலாவதாக இடம்பெற்றுள்ள கட்டுரை எஸ்.சிவபாத சுந்தரம் எழுதிய ஆரம்பகால நாவல்களும் தற்கால நாவல்களும் என்பதாகும். நாவல் இலக்கியத்தின் பெருமைகளை முதலில் கூறிப் பின்னர்

1930இக்குப் பின் தமிழ் உரைநடையும் தமிழ் நாவலும் அடைந்த வளர்ச்சியை விவரிக்கிறார். ஆரம்பகாலத் தமிழ் நாவல் ஆசிரியர்களான வேதநாயகம் பிள்ளை, ராஜம் ஐயர், மாதவய்யா ஆகியோரின் நாவல்களில் காணப்படும் சில செய்திகளைக் கூறி அவற்றின் உருவம், உள்ளடக்கம், கட்டுக்கோப்பு, இலக்கிய அமைப்பு முதலியவற்றைத் தற்காலத் தமிழ் நாவல்களுடன் ஒப்பிட்டு ஆராய்ந்துள்ளார். தமிழ் நாவல் இலக்கியக் கொள்கைகளை ஒப்பிட்டு மேல்நாட்டு இலக்கியங்களைக் கோடிட்டுக் காட்டியுள்ளார்.

இரண்டாவது கட்டுரை கி.வா. ஜகந்நாதன் எழுதிய வரலாற்று நாவல்களின் நோக்கமும் பயனும் என்பதாகும். வரலாற்று நாவல்கள் குறித்து இக்கட்டுரையின் முதற்பகுதியில் விளக்குகிறார். வரலாற்று நாவல்களின் அமைப்பு, கதைக்கோப்பு, பாத்திரங்கள், நிகழ்ச்சிகள், இவை அமையும் விதம், வரலாற்று நாவல்கள் எழுதுவதின் சிரமம் ஆகியவற்றையும் விளக்கியுள்ளார். வரலாற்றைப் படிப்பதைவிட அதைக் கதையாக எழுதினால் மக்கள் படிப்பார்கள் என்பது கி.வ. ஜகந்நாதன் கருத்து. தமது கட்டுரையில் அவர் வரலாற்று நாவல்கள் எழுதுவதற்கு மூன்று நோக்கங்கள் தலைமையானவை என்று குறிப்பிடுகிறார். அவை, ஒன்று, முன்னரே என்புச் சட்டகம் போல கதைக்கரு அமைந்திருப்பதால் அதன்மேல் கட்டுக்கோப்பை எழுப்பலாம் என்பது; இரண்டு, கதையை நீட்டிக்க வாய்ப்பு இருக்கும் என்பது; மூன்று, படிப்பவர்களுக்குச் சரித்திர நாயகர்பால் பற்று இருக்கும்.[4] இந்த முறையில் வரலாற்று நாவல்களைப் பற்றிய கொள்கைகளை இவரது கட்டுரை விளக்குகிறது.

நா. பார்த்தசாரதி எழுதிய எனது நாவல்களில் சமுதாயப் பார்வை என்ற கட்டுரை அடுத்து இடம்பெற்றுள்ளது. இவரது நாவல்கள் சமூகத்தை எப்படி பிரதிபலிக்கின்றன என்பதை இக்கட்டுரையின் மூலம் விளக்குகிறார். சித்தாந்த விமர்சனம், சமூக அனுபவங்கள், எழுத்தாளர் பொறுப்பு, சரித்திர நாவல்கள், சமுதாயமும் மாறவேண்டும் என்னும் உட்பிரிவுகளில் தமது பொன்விலங்கு,

குறிஞ்சிமலர், நெஞ்சக்கனல், ஆத்மாவின் ராகங்கள், நெற்றிக்கண், சமுதாய வீதி ஆகிய நாவல்களை ஆராய்கிறார்.

கண. முத்தையாவின் **நாவலில் பிரச்சாரம் இடம்பெறுதல்** என்ற கட்டுரை நான்காவதாக அமைந்துள்ளது. இலக்கியங்களில் பிரச்சாரம் இடம் பெற்றிருப்பதைச் சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய இலக்கியங்களின் மூலமும், மு. வரதராசன், அகிலன், ஜெயகாந்தன், ந. பார்த்தசாரதி ஆகியோரின் நாவல்கள் மூலமாகவும் சுட்டிக்காட்டுகிறார். நாவல்களில் பிரச்சாரம் குறிப்பிட்ட அளவிலேயே அமைய வேண்டும் என வலியுறுத்துகிறார்.

நாவல் என்ற பகுதியில் அடங்கியுள்ள ஐந்தாவது கட்டுரை சரஸ்வதி ராம்நாத் எழுதிய **நாவலும் விமர்சனமும்** என்பதாகும். தமிழ் நாவல்களில் காணப்படும் அரசியல், பொருளாதாரச் சமூகச் செய்திகளால் ஏற்படும் தாக்கம், அவற்றின் வெற்றி, தோல்வி, மேல்நாட்டு நாவல் இலக்கிய வளர்ச்சிக்கும், தமிழ் நாவல் வளர்ச்சிக்கும் உள்ள தொடர்பு, இசம் களின் தாக்கம் என்பன விளக்கப்பட்டுள்ளன.

ஆறாவது கட்டுரையான **தமிழ் நாவல் துறையின் வளர்ச்சிக்குத் தடைகள்** என்பது கு. அழகிரிசாமியால் அளிக்கப்பட்டது. தமிழ் நாவல் துறையின் வளர்ச்சிக்குத் தடையாக இருப்பவற்றை விமர்சனத்துறை, பத்திரிகைகள், வெளியீட்டகங்கள் என்ற தலைப்புகளின் கீழ் ஆராய்ந்துள்ளார்.

ஏழாவது கட்டுரையான **எனது நாவல்களில் சமுதாயத்திற்குச் செய்தி** என்பது நாவலாசிரியர் அகிலனால் அளிக்கப்பட்டது. விடுதலைக்கு முன்னர் அகிலன் எழுதிய நாவல்களான **பெண், இன்ப நினைவு, நெஞ்சின் அலைகள்**, விடுதலைக்குப் பின் வெளிவந்த **புதுவெள்ளம், பொன்மலர், சித்திரப்பாவை** ஆகியவற்றை அகிலன் தனது சமுதாயச் செய்திக்கு ஆதாரங்களாகச் சுட்டியுள்ளார்.

**சிறுகதை**

சிறுகதை என்ற பகுதியில் இடம்பெறும் முதல் கட்டுரை ராஜம் கிருஷ்ணனின் **தமிழ்ச் சிறுகதைகளின் தற்கால நிலை** என்பதாகும். அதில், கொள்கைப் பூசல், அரசியல் மாற்றம், பண ஆதிக்கத்தின் கெடுபிடி, இதயங்களின் நல்லுணர்வுகளை வற்றடிக்கும் சூழல்களை இன்றையத் தமிழ்ச் சிறுகதை இலக்கியத்தையும் பாதிக்கின்றன[5] எனும் கருத்தை வலியுறுத்தியுள்ளார்.

இரண்டாவதாக இடம்பெற்றுள்ள அகிலனின் **சிறுகதை - வளர்ச்சிக்கான வழிகள்** என்ற கட்டுரையில் சிறுகதையின் வளர்ச்சிக்கு எழுதுவோர், வெளியிடுவோர், படிப்போர் ஆகிய மூன்று சாராரின் தேவையை விவரிக்கின்றார்.

மூன்றாவதாக இடம்பெற்றுள்ள கட்டுரை எழில் முதல்வனின் **வாசகர் விமர்சனங்களும் சிறுகதை வளர்ச்சியும்** என்பதாகும். இக்கட்டுரை எட்டு சிறு பிரிவுகளை உடையது. ஒவ்வொரு பிரிவிலும் வாசகர்களின் பண்பு விளக்கப்படுகிறது. இதன் இறுதியில் சாதி, சமயம் என்னும் சமூகக் கூறுகளைக் கடந்த நிலையில் திறனாய்வு அமைய வேண்டும் என்று குறிப்பிடுகின்றார்.

நான்காவது கட்டுரை பொ.ஆ. சத்தியசாட்சியின் **சிறுகதையும் பிரச்சாரமும்** என்பதாகும். இவர் சங்க இலக்கியத்தில் சொல்லப்படும் செய்திகள் பல சிறுகதை வடிவில்தான் இருக்கின்றன என்கிறார். மேலும் பிரச்சாரத்தில் சிறுகதை வரலாமேயன்றி சிறுகதையில் பிரச்சாரம் வரவேண்டியதில்லை என்று குறிப்பிடுகிறார்.

ஐந்தாம் கட்டுரை ரா. ராஜதுரை எழுதிய **சிறுகதையின் கூறுகள்** என்பதாகும். சிறுகதை உண்மையில் சிறிய கதை மட்டுமல்ல. அது அமுத்திச் சிறியதாக்கப்பட்ட ஒரு பஞ்சுமிட்டாய். பெரிய சம்பவங்களைச் சொல்லாமல் சொல்லும் ஒரு சிறிய கலைப்படிவம்[6] என்று சிறுகதைக்கு விளக்கமளிக்கிறார்.

ஆறாவது கட்டுரை சி.சு. செல்லப்பாவால் அளிக்கப்பட்டுள்ள சிறுகதை அமைப்பில் உத்திகளின் பங்கு என்பதாகும். பிரபல தமிழ்ச்சிறுகதை எழுத்தாளர்களின் படைப்பில் காணப்படும் உத்திகளைச் சுட்டிக்காட்டி தனது கட்டுரையை அமைத்துள்ளார்.

**திறனாய்வுகள்**

வளரும் தமிழ் இலக்கியம் என்ற கருத்தரங்கின் மூன்றாவது பெரும்பிரிவான திறனாய்வுகள் என்னும் பகுதியில் முதலாவதாக இடம்பெறுவது எம். டேவிட் சித்தையாவின் திறனாய்வு. இவர் மு.வ.வின் கரித்துண்டு நாவலைத் திறனாய்வு செய்துள்ளார். மு.வ. நடை எளிமையானது மட்டுமின்றி தெளிவு, அமைதி, தனித்தன்மை ஆகிய மூன்றையும் மு.வ. நடையில் சுவைக்கலாம் என்று கூறுகிறார்.

இரா. தண்டாயுதம் எழுதிய திறனாய்வு கட்டுரை, அகிலனின் சித்திரப்பாவை என்பதாகும். முதலில் இந்நாவலின் கதையைக் கூறி பின்னர் இதில் காணப்படும் சமுதாயப் பின்னணி, கதை மாந்தர், கட்டுக்கோப்பு, நடை முதலியவற்றை ஆராய்ந்துள்ளார்.

சி. தேவராஜன் எழுதிய ஜெயகாந்தனின் பாரிசுக்குப்போ என்ற கட்டுரையில், புதினங்களிலேயே தனித்த இடம்பெறுவது பாரிசுக்குப்போ என்னும் நாவலாகும் என்கிறார்.

மண்ணில் தெரிகிறது வானம் என்ற ந. சிதம்பர சுப்பிரமணியத்தின் நாவலைச் சி.சு. செல்லப்பா ஆராய்ந்துள்ளார். இந்நாவல் ஒரு தத்துவ நாவல். ஆனாலும் இது நீதிபோதகமானது இல்லை என்று விவரிக்கிறார்.

திறனாய்வு என்னும் பகுதியில் இறுதியாக அமைந்துள்ள கட்டுரை ருக்மணி பார்த்தசாரதியின் **என்னை மன்னிக்காதீர்கள்** என்ற சிறுகதையைப் பற்றியது. இதனை தி. பாக்கியமுத்து ஆராய்ந்துள்ளார்.

**பொது**

இறுதியாக இடம்பெற்றுள்ள **எனது எழுத்தும் விமரிசனங்களும்** என்ற தலைப்பில் நா. பார்த்தசாரதி தமது எழுத்துக்களில் விமர்சனங்கள் பெற்ற இடத்தைப் புலப்படுத்துகிறார். எழுத்தாளர்கள் தங்களுக்குத் தாங்களே செய்துகொள்ள முடியாத பணியை விமர்சகர்கள் செய்ய முடியும் என்று விளக்குகிறார் நா. பார்த்தசாரதி.

இவ்வாறு நாவல், சிறுகதை, திறனாய்வுகள், பொது என்ற நான்கு பிரிவுகளுக்குள் பல்வேறு திறனாய்வுகளையும் கொண்டதாக வளரும் தமிழ் இலக்கியம் என்னும் நூல் அமைந்துள்ளது.

## 2. இன்றையத் தமிழிலக்கியத்தில் மனிதன்

1972ஆம் ஆண்டு நடைபெற்ற நண்பர் வட்டத்தின் மூன்றாவது கருத்தரங்கின் கருப்பொருள் **இன்றையத் தமிழிலக்கியத்தில் மனிதன்** என்பதாகும்.

முதல் கட்டுரை மு.வரதராசன் எழுதிய **நாவலில் நான் காணும் மனிதனும் காண விழையும் மனிதனும்** என்பதாகும். சாண்டேகர் எழுதிய **இரு துருவங்கள், எரிநட்சத்திரம்**, அகிலனின் **புதுவெள்ளம்**, ர.சு. நல்லபெருமாள் எழுதிய **போராட்டங்கள்**, நா. பார்த்தசாரதியின் **குறிஞ்சி மலர்**, ராஜம் கிருஷ்ணனின் **குறிஞ்சித்தேன்**, ராஜம் அய்யரின் **கமலாம்பாள் சரித்திரம்** ஆகிய நாவல்களை ஆய்வுக்கு உட்படுத்தி உள்ளார்.

சாதாரண மனிதராகப் பிறந்து வளர்ந்து பொதுவான இன்ப துன்பங்களுக்கு ஆளாகி, உயர்ந்த நோக்கங்களும் உடையவர்களாகப் படைக்கப்பட்டால் அவர்களை மிகுதியாக விரும்புகிறது என் மனம்[7] என்று மு. வரதராசன் தன் கட்டுரையில் கூறியுள்ளார்.

இரண்டாவது கட்டுரை எப்சிபா ஜேசுதாசன் எழுதிய தமிழ் நாவல்களில் குடும்பம் என்பதாகும். தமிழ் நாவல்களில் குடும்ப வாழ்க்கை எத்தகைய இடம் வகிக்கிறது என்று ஆராய்வதற்கு ஜெயகாந்தன், அகிலன், மு.வ. ஆகியோரின் நாவல்களை எடுத்துக்கொண்டுள்ளார். நாவலாசிரியர்கள் மனிதனுக்குக் குடும்பத்தோடுள்ள தொடர்பை, பரந்த நோக்குடன் தான் காண்கிறார்கள். உணர்ச்சி மோதலால், பொருளாதார நெருக்கடியால் சமுதாயக் கட்டுப்பாடுகளால் விளையக்கூடிய சிக்கல்களை யதார்த்த முறையில் ஆராயவும் செய்கிறார்கள்[8] என்கிறார் கட்டுரையாளர்.

மூன்றாவது கட்டுரை மனிதனுக்கும் சமுதாயத்திற்கும் உள்ள உறவு என்பதாகும். இக்கட்டுரையை எழுதிய அகிலன், தம்முடைய நாவல்களில் மனிதனுக்கும் சமுதாயத்திற்கும் உள்ள உறவினை விரிவாக ஆராய்கிறார். சமுதாயம் என்பது பல்வேறு வகையான மனிதர்களைக் கொண்டது. அந்த பல்வகை மாந்தருள்ளும் கதைகளில் வரும் தலைவர் தலைவியரே என்னுடைய கருத்தைப் பிரதிபலிப்பவர்களாக இருக்கிறார்கள். மேலும் வெறுக்கத் தக்கவர்களும் தீயவர்களும் வஞ்சகர்களும் எனப் பல நிலைகளில் மாந்தர்கள் உள்ளனர்.

ஜெயகாந்தனின் நாவல்களில் மனிதன் என்னும் ஜேசுதாசனின் கட்டுரை நான்காவதாக இடம்பெறுகிறது. சிறந்த தனிமனிதன் உருவாக வாய்ப்பற்ற சமுதாயம் சிறந்த சமுதாயம் ஆகாது. ஒரு சிறந்த சமுதாயத்தை உருவாக்குவதற்காகப் போராடுகிற தன்மையில்லாத தனி மனிதத்துவத்துக்கும் அர்த்தமில்லை[9] என்று ஜெயகாந்தனின் கருத்தைக் குறிப்பிட்டு ஜெயகாந்தனின்

நாவல்களில் உள்ள மனிதர்கள் நாம் என்றென்றும் பார்த்துப் பழகிக் கொண்டிருக்கிற, உயிரோடிருக்கிற மனிதர்களைத்தான் காண்கிறோம் என்கிறார்.

ஐந்தாவது கட்டுரை தற்கால தமிழ் நாவல்களில் வாழ்க்கையின் நிலையான நிலையற்ற பயன்களின் பிரதிபலிப்பு இக்கட்டுரையை எழுதியவர் அசோகமித்திரன் ஆவார். பல்வேறு நாவலாசிரியர்களின் நாவல்களை எடுத்துக்கொண்டு இன்றைய இதழ்களில் வரும் இரண்டாம் தரமான நாவல்களின் தன்மையையும் குறிப்பிட்டு வாழ்க்கையின் நிலையான நிலையற்ற பயன்களின் பிரதிபலிப்பை ஆராய்கிறார்.

விமானுவேல் எழுதியிருக்கும் கட்டுரையின் தலைப்பு அன்னியப்படுத்திக் கொள்ளுதல் என்பதாகும். தமிழ் நாவலாசிரியர்கள் அன்னியப்படுத்திக் கொள்ளுதல் என்ற பண்பை எவ்வாறெல்லாம் தம்முடைய நாவல்களில் கையாண்டுள்ளார்கள் என்பதைப்பற்றி விரிவாக ஆராய்ந்துள்ளார். தம் ஆய்வின் முடிவுரையில் இதுவரை வளர்ந்துள்ளதை விட இனி அப்படிப்பட்ட ஓர் இலக்கியம் சிறப்பாகத் தமிழ்நாட்டில் உருவாக வேண்டும் என்பதே தம்முடைய ஆசை என்கிறார் கட்டுரையின் இறுதியில்.

த. ஜெயகாந்தன் மரபும் புரட்சியும் என்னும் கட்டுரையை எழுதியுள்ளார். கட்டுரையாளர் தம்முடைய கட்டுரையில் மரபு என்றால் என்ன? மரபுகள் ஏன் ஏற்படுகின்றன? எனும் கருத்துக்களை முதலில் தெளிவுபடுத்திவிட்டு மரபை மீறுவதும், உடைப்பதும் எழுத்தாளனின் வேலையல்ல அது தானாகவே நிகழ்வது என்றும் புரட்சி என்றால் புதிய மரபுகள் என்றும் கூறுகிறார்.

ஜெயகாந்தன் அடுத்ததாக ஆராய்ந்து எழுதிய கட்டுரை மனிதனின் தனித்தன்மையும், அவனிடமே அவனுக்குள்ள உறவும் என்பதாகும்.

நா. பார்த்தசாரதி எழுதியுள்ள கட்டுரை சமூகத்தின் மதிப்பீடுகளை மனிதன் ஏற்றுக்கொள்பவனா? மறுப்பவனா? என்பதாகும். சமூகத்தின் மதிப்பீடுகள் என்பவை

நிரந்தரமானவை அல்ல; அவை மாறுபவை; மாறுதலுக்கு உட்பட்டவை. மனிதன் அவற்றை ஏற்றுக்கொண்டு பணிவதும், ஏற்காமல் மறுப்பதும் புதிய பாதை ஏற்படுத்துவதும் நடந்திருக்கின்றன ; நடந்து வருகின்றன ; நடக்கும் என்கிறார்.

சிதம்பர சுப்ரமணியனின் காலப்போக்கில் மாறிவரும் ஆண் பெண் உறவு முறைகள் என்னும் கட்டுரையில் பல்வேறு தமிழ் நாவல்களை எடுத்துக்கொண்டு ஆண் பெண் உறவு முறைகள் எப்படிக் காலத்திற்கு ஏற்ப மாறிவருகின்றன என்பதை ஆராய்கிறார்.

சமூகத்தின் பழக்க வழக்கங்கள் மாறும்பொழுது, ஆண் பெண் உறவிலும் சில மாறுதல்கள் ஏற்படுவது இயற்கையே. நம்முடைய புறவாழ்வு வளர்வது போலவே, நம் அகவாழ்வும் வளர்ந்துகொண்டே தான் வருகிறது. நாம் எந்த மாறுதலைச் செய்தாலும் ஏற்றுக் கொண்டாலும், நம்முடைய அக வளர்ச்சிக்குக் குந்தகம் இல்லாமல் இருக்க வேண்டும். அப்பொழுதுதான் நாம் முழுமை அடைய முடியும்[10] எனச் சமூக மாற்றத்தில் ஆண் பெண் உறவு நிலை குறித்துப் பேசுகிறார்.

சரோஜினி பாக்கியமுத்துவின் எப்சிபா ஜேசுதாசன் நாவல்களில் மனிதன் என்னும் கட்டுரையில் காலத்துக்கேற்ப மனிதனும் மனிதர்களாகிய சமுதாயமும் மாறிக்கொண்டு வருவது போல ஹெப்சிபா நாவலில் படைத்துள்ள மனிதர்களும் இருக்கிறார்கள் என்கிறார். மேலும் நாவலில் படம்பிடித்துக் காட்டியுள்ள சமுதாயமும் அவர் சித்திரிக்கும் மனிதர்களும் யதார்த்தமாக இருக்கிறார்கள் என்கிறார்.

அடுத்ததாக இடம்பெறும் எழில் முதல்வன் எழுதியுள்ள கட்டுரை நா. பார்த்தசாரதியின் நாவல்களில் சமகாலத்து மனிதனின் படிவம் என்பதாகும். சமகாலத்து மனிதனின் படிவம் ஒரு நாவலாசிரியருடைய படைப்பில் தெளிவாகப் புலப்படுகிறது என்று அறிய, நாவலாசிரியருடைய கதையில் வரும் மாந்தர்களைச் சமுதாயவியல், மாந்தரியல் அடிப்படையில் நின்று கண்டு அவ்வாசிரியரின்

பார்வை, அனுபவ எல்லை இரண்டையும் உணர்ந்து எந்த அளவுக்கு அவருடைய பாத்திரங்கள் நிகழ்வாழ்க்கையைப் பிரதிபலிக்கின்றன என்று காண்பதேயாகும்[11] என்று கூறுகிறார். இவ்வகையில் சமகாலத்து மனிதனின் படிவம் அவர் எழுத்துக்களில் ஆழமாகவும், தெளிவாகவும் விழுந்திருக்கிறது என்கிறார் எழில் முதல்வன்.

ஆர்.எஸ்.ஜேக்கப் கதைகளில் மனிதன் என்னும் இரா. பாலகிருஷ்ணனின் கட்டுரையில் ஏற்றத்தாழ்வான இந்தச் சமூக அமைப்பில் உண்மையோடும் உத்தமத்தோடும் வாழ்க்கைக்கு உத்தரவாதம் அளிக்கும் ஒரு நல்ல சமூக அமைப்பு தோன்றவேண்டும் என்று கதையாசிரியரின் விருப்பத்தைக் கூறுகிறார் கட்டுரையாளர்.

அடுத்ததாக இடம்பெறும் கட்டுரை எஸ்.ஆல்பர்ட் எழுதியுள்ள தமிழ்ப்படங்கள் காட்டும் மனிதனும் சமூகமும் என்பதாகும்.

தமிழ்ப்படங்களில் ஒரு தனிமனிதனை முழுமையாகப் பார்க்க முடிவதில்லை. அவனுடைய செயல்களின் பூரண மலர்ச்சியையோ, அவை சமூகத்தில் ஏற்படுத்தும் அலைகளையோ அல்லது சமூகம் அவன் மீது செலுத்தும் ஆதிக்கத்தின் முழு விளைவுகளையோ தமிழ்ப்படங்கள் சரியாகக் காட்டுவதில்லை[12] என்று வருத்தப்படுகிறார் எஸ். ஆல்பர்ட்.

இன்றையத் தமிழிலக்கியத்தில் மனிதன் என்ற கருப்பொருளில் நடைபெற்ற கருத்தரங்கக் கட்டுரைகள் அனைத்தும் இலட்சியக் கண்ணோட்டத்துடன் வாழ்வியல் மெய்ம்மை நிலை முதலியவற்றை அடிப்படையாகக் கொண்டு இன்றைய தமிழ் இலக்கியத்தில் இடம்பெறும் மனிதனை ஆய்வாளர்கள் ஆராய்ந்துள்ளனர்.

## 3. விடுதலைக்குப்பின் தமிழ் நாவல்கள்

நண்பர் வட்டத்தின் நான்காவது கருத்தரங்கு 1973 ஆம் ஆண்டு நடைபெற்றது. கருத்தரங்கின் கருப்பொருள் **விடுதலைக்குப்பின் தமிழ் நாவல்களின் கருப்பொருட்களும் போக்கும்** என்பதாகும். இக்கருத்தரங்கக் கட்டுரைகள் விடுதலைக்குப்பின் தமிழ் நாவல்கள் எனும் தலைப்பில் நூலாக வெளிவந்துள்ளன. நூலில் நாவலாசிரியர்கள் சிலர் அளித்த பதில் உரைகளும் இடம்பெற்றுள்ளன.

**கல்கியின் அலையோசை** எனும் தலைப்பில் சரஸ்வதி ராம்நாத் கட்டுரை படைத்துள்ளார். கலை கலைக்காகவே என்பதில்லாமல் கலை மக்களுக்காகவே என்ற நோக்கத்துடன் தன் காலத்து அரசியல் சமூக வாழ்வை ஒரு கதை மூலம் கல்கி படைத்து இருக்கிறார் என்று கட்டுரையாளர் குறிப்பிடுகிறார். இவரது கட்டுரைக்கு கல்கியின் பதில் உரை இடம்பெறவில்லை.

மு. வரதராசனின் **அகல்விளக்கு** என்ற கட்டுரையை டி. ஏசுதாஸ் எழுதியுள்ளார். அகல்விளக்கு நாவலை முழுமையாக ஆராய்ந்து அந்நாவலின் பின்னணி, உத்தி, உரையாடலும் கருத்து விளக்கமும், நடை முதலிய பல்வேறு கோணங்களில் இக்கட்டுரை அமைந்துள்ளது. இதற்கு மு.வ.வின் பதில் உரை இடம்பெற்றுள்ளது.

மூன்றாவது கட்டுரை டாக்டர் கா. மீனாட்சி சுந்தரத்தால் எழுதப்பெற்றது. அகிலனின் **புதுவெள்ளம்** என்ற நாவலை ஆராய்கிறது. அகிலனைப்பற்றி மீனாட்சி சுந்தரம் குறிப்பிடும்போது, நூல் முழுமையும் கிட்டத்தட்ட அறுபது உவமைகளுக்கு மேல் சிறுசிறு வடிவில் கொடுத்துச் செல்வதே அவருடைய உணர்த்தும் திறனின் சிறப்பம்சம். எல்லா உவமைகளும் தெளிவாகவும், தெரிந்தனவாகவும் இருப்பது சிறப்பு[13] என்று கூறுகிறார். இதற்கு அகிலனின் பதில் உரை விளக்கமாக அமைந்துள்ளது.

நான்காவதாக இடம்பெற்றுள்ள பார்த்தசாரதியின் ஆத்மாவின் ராகங்கள் எனும் கட்டுரையைப் படைத்திருப்பவர் இரத்தினாவதி ஜான். இது ஒரு கருத்தமைவுப் புதினம் என்பது இவரின் கருத்து. கரு, அமைப்பு, பாத்திரப்படைப்பு, கலை, கருத்துக்களும் காலமும், ஆன்ம வாழ்வு என்னும் நோக்குகளில் இந்நாவல் ஆராயப்பட்டுள்ளது. இதற்கு நா. பார்த்தசாரதி பதிலளிக்கையில் விமர்சகரின் கருத்துக்கள் சில குறைகளைச் சுட்டிக் காட்டுவதாகக் கொண்டு, அதற்கான காரணங்களையும் விளக்கியுள்ளார்.

ஐந்தாவது கட்டுரை டி. செல்வராஜின் மலரும் சருகும் என்பதாகும். இதனை செந்தில்நாதன் எழுதியுள்ளார். ஒரு தலைமுறைக்கும் இன்னொரு தலைமுறைக்கும் இடையே ஏற்படும் மாறுதல்கள் பலப்பல. இந்த மாறுதல்களை வெறும் பௌதிக மாறுதல்களாகக் காட்டாமல் அடுத்தடுத்து விளையப்போகும் மாற்றத்தைச் சித்தாந்த ரீதியில் கோடிட்டுக் காட்டி நாவல் முற்றுப்பெறுகிறது.[14] என்று கூறுகிறார். இதற்கு நாவலாசிரியர் டி. செல்வராஜ் நண்பர் வட்டக் கருத்தரங்கினால் அதில் இடம்பெறும் விமர்சனங்களால் மேலும் பல நல்ல நாவல்களை உருவாக்க இயலும் என்று கூறியுள்ளார்.

ஜெயகாந்தனின் சில நேரங்களில் சில மனிதர்கள் என்ற நாவலைப்பற்றிய ஆய்வினை இர. தாகூர் என்பவர் அளித்துள்ளார். இந்நாவல் தமிழ் இலக்கியப் புதினங்களில் ஒரு புது முயற்சி என்கிறார். இக்கட்டுரைக்கு ஜெயகாந்தனின் பதில் உரை அமைந்துள்ளது.

ர.சு. நல்லபெருமாளின் போராட்டங்கள் என்ற நாவலை வி.சுப்பிரமணியம் தனது ஆய்விற்கு எடுத்துக் கொண்டிருக்கிறார். இக்கட்டுரை கேட்பவர்க்கும், படிப்பவர்க்கும் புரியும் வண்ணம் அமைந்துள்ளது. ஆனால் நாவல் விறுவிறுப்பாக இல்லை என்கிறார். ர.சு. நல்லபெருமாள் பதில் அளிக்கும்போது

ஒரு நீண்ட நாவல் தொடக்கம் முதல் முடிவுவரை விறுவிறுப்பாக இருக்கும் என எதிர்பார்க்க முடியாது எனக் குறிப்பிடுகிறார்.

அடுத்ததாக இடம்பெறும் கட்டுரை சித்திரபாரதியின் நீல. பத்மநாபனின் பள்ளிகொண்டபுரம் என்பது. தமிழில் இந்த அளவுக்கு மண்ணின் மகிமைக்கென்றே பிரதான அந்தஸ்து அளித்து படைக்கப்பெற்ற நாவல் வேறு இல்லை[15] என்பது கட்டுரையாளரது அனுபவக்குறிப்பு.

இறுதியாக இடம்பெறும் கட்டுரை டி.கே. துரைசாமி எழுதிய அசோகமித்திரனின் தண்ணீர் என்பதாகும். கட்டுரையின் தொடக்கத்தில் நாவலுக்கான பெயர்க்காரணத்தை ஆராய்கிறார். பின்னர் நாவலின் நடை, பாத்திரங்கள் 'தண்ணீர்' என்னும் குறியீடு முதலியவற்றை ஆராய்ந்துள்ளார். தண்ணீரில் கதை சொல்லப்படவில்லை; நிகழ்கிறது. பாத்திரங்கள் உரையாடல் செயல்கள் மூலம் அவர்களைப்பற்றிய கதையைப் பற்றிய தகவல்கள் கொடுக்கப்படுகின்றன[16] என்கிறார் கட்டுரையாளர்.

தண்ணீர் என்ற தமது நாவல் நூலாக வெளிவருவதற்கு முன்பாகவே ஓர் இலக்கிய அவையில் விவாதிக்கப்படுவது தமது நாவலுக்கு ஓர் தனிச்சிறப்பை அளித்துள்ளது என்று நாவலாசிரியர் அசோகமித்திரன் இதற்குப் பதிலுரையாகக் குறிப்பிட்டுள்ளார்.

விடுதலைக்குப்பின் தமிழ் நாவல்களின் கருப்பொருட்களும் போக்கும் என்ற கருப்பொருளில் நடைபெற்ற கருத்தரங்கக் கட்டுரைகள், நாவல்களின் கருப்பொருட்களை விரிவாக ஆராய்ந்துள்ளார்கள் கட்டுரையாளர்கள்.

## 4. தமிழ் நாவல்களில் மனித விமோசனம்

1974ஆம் ஆண்டு நடைபெற்ற ஐந்தாவது நண்பர் வட்டக் கருத்தரங்கின் கட்டுரைகள் **தமிழ் நாவல்களில் மனித விமோசனம்** என்னும் தலைப்பில் நூலாக வெளிவந்துள்ளன.

முதல் கட்டுரை சி.சு.செல்லப்பாவின் **தமிழ் நாவல்களில் மனித விமோசனம்** என்பது. மாதவையாவின் **பத்மாவதி சரித்திரம்**, வ.ரா.வின் **சுந்தரி**, க.நா.சுவின் **பொய்த்தேவு** என்ற மூன்று நாவல்களிலும் காணப்படும் மனித விமோசனம் பற்றி ஆராய்ந்துள்ளார்.

இரண்டாவதாக இடம்பெற்றுள்ள கட்டுரையை சோ. சிவபாதசுந்தரம் எழுதியுள்ளார். இவர் தமது கட்டுரையில் தமிழ் நாவல் வளர்ச்சி, இன்றைய நிலை முதலியவற்றையும் தமிழ் நாவல் இலக்கியத்தில் காணப்படும் மனித விமோசனத்தையும் விளக்குகிறார். சுந்தர ராமசாமியின் ஒரு புளியமரத்தின் கதை என்ற நாவல் இவரது கட்டுரையில் முக்கியமான இடத்தினைப் பெற்றுள்ளது. அத்துடன் நீல. பத்மநாபனின் **தலைமுறைகள், பள்ளிகொண்டபுரம்**, ராஜம் கிருஷ்ணன் எழுதிய **வளைக்கரம், வேருக்கு நீர், ரோஜா இதழ்கள்**, நா. பார்த்தசாரதியின் **சத்தியவெள்ளம்** ஆகிய நாவல்களிலும் ஆசிரியர்கள் திட்டமிட்டு, குறிக்கோளுடன் கதை புனைந்து உள்ளார்கள் என்று குறிப்பிட்டுள்ளார்.

தி. பாக்கியமுத்துவின் **தமிழ் நாவல்களில் மனித விமோசனம்** என்ற கட்டுரை மூன்றாவதாக இடம்பெற்றுள்ளது. சமூக அநீதி, அரசியல் குழப்பம், ஏமாற்றல், சுரண்டல் முதலியவற்றிற்கான தீர்வுகளே மனித விமோசனம் என்ற கருத்தினை இவரது கட்டுரை விளக்குகிறது. ரகுநாதனின் **பஞ்சும் பசியும்**, டி.என். சுகி. சுப்பிரமணியத்தின் **உழைக்கும் கரங்கள்**, டி.செல்வராஜின் **தேநீர்**, ஜெயகாந்தனின் **ஒரு மனிதன் ஒரு வீடு ஒரு உலகம்** ஆகிய நான்கு நாவல்களை இவர் ஆராய்ந்து தமிழ் நாவல்களில் மனித விமோசனம் பெற்றுள்ள இடத்தை விவரிக்கிறார்.

தமிழ் நாவல்களில் மனித விமோசனம் என்ற கருத்தரங்கில் பங்குபெற்ற கட்டுரையாளர்கள் தமிழ்ச்சமுதாயத்தில் நிகழ்ந்த மக்கள் விடுதலை, விமோசனம், ஈடேற்றம் இவற்றைத் தமிழ் நாவல்கள் கையாண்டுள்ள விதத்தைப்பற்றி விரிவாக ஆராய்ந்துள்ளார்.

## 5. தமிழ் நாவல், சிறுகதைகளில் சாதி வர்க்க அமைப்புகள்

1975ஆம் ஆண்டு நடைபெற்ற நண்பர் வட்டத்தின் ஆறாவது கருத்தரங்கக் கட்டுரைகளின் தொகுப்பு நூல் **தமிழ் நாவல் சிறுகதைகளில் சாதி வர்க்க அமைப்புகள்** என்பதாகும்.

இதிகாச காலம் முதற்கொண்டு இந்நாள் வரை தமிழ் இலக்கியங்களில் சாதி அமைப்பும், வர்க்கப் போராட்டமும் வளர்க்கப்பட்டுள்ளதை பா. சௌந்திராவின் கட்டுரை ஆராய்ந்துள்ளது.

சாதிப்பகுப்பு, உயர்வுதாழ்வு மனப்பான்மை எல்லாமும் கூடப் பன்னூறு ஆண்டுகட்கு முன்பே வளர்ந்துவிட்டாலும் இவை ஒரு பெரும் தீமையாக சமுதாயத்தின் ஆணிவேரையே அழிக்கும் விஷப்பூச்சியாக மாறின. இடைக்காலத்தில் தான் சாதிக் கொடுமைகளை இன்றைய இலக்கியங்கள் பிரதிபலிப்பது போல் பண்டைய இலக்கியங்கள் காட்டாததிலிருந்தே இதனை அறிந்து கொள்ளலாம்[17] என்பது பா. சௌந்திராவின் கருத்து.

இரண்டாவதாக அமையும் கட்டுரை வல்லிக்கண்ணன் எழுதியது. இவர் தமிழ் நாவல்களிலும், சிறுகதைகளிலும் இடம்பெற்றுள்ள வர்க்க அமைப்புகள், அவற்றின் போக்குகள், பண்புகள்,செயல்கள், வர்க்கங்களின் எழுச்சி, உரிமைப் போராட்டங்கள், வெற்றிகள், தோல்விகள் முதலியவற்றால் ஏற்பட்ட பாதிப்புகளை அவற்றின் பிரதிபலிப்பைக் காட்டும் இலக்கியங்களைப் பற்றி ஆராய்ந்துள்ளார். மக்கள் மத்தியில் வலிய சக்தியாக நிலைபெற்றிருக்கும் சாதி

அமைப்புகள் ஏற்படுத்திவிட்ட கொடுமைகளும், சிறுமைகளும் அகற்றப்படுவதற்கு மனிதரின் சிந்தனைப் பழக்கங்களும் நடைமுறை நிலைமைகளும் மாறியாக வேண்டும்[18] என்று கூறுகின்றார்.

நீல.பத்மநாபனின் பைல்கள், தலைமுறைகள் என்னும் நாவல்களில் வர்க்கமும், சாதியும் எவ்வாறு பிரதிபலிக்கின்றன என்பதை த.பாண்டியன் தனசிங் தனது ஆய்வுக் கட்டுரையில் விளக்கியுள்ளார்.

கண.முத்தையா தனது கட்டுரையில் சாதிப் பிரச்சனை இந்திய நாட்டில் அழகாக வேரோடியுள்ள மிகச்சிக்கலான ஒரு பிரச்சினை என்றும், வர்க்க உணர்வு இன்னும் ஒரு தெளிவான வடிவம் பெறாத குழப்ப நிலையில் உள்ளது என்றும் கூறுகிறார். டி.செல்வராஜின் மலரும் சருகும், தேநீர் ஆகியவற்றை ஆராய்ந்து இறுதியில் சாதிப்பிரச்சினைகள் இயற்கைச் சூழ்நிலை காரணமாக இடம் பெற்றிருக்கிறதே தவிர ஒரு பிரச்சினையாக எழுதப் பெறவில்லை என்கிறார். மேலும் இரண்டு நாவல்களிலுமே வர்க்க உணர்வுகள் தலைதூக்கி நிற்கிறது ஆனால் தெளிவான வர்க்க அறிவு என்று அதைச் சொல்வதற்கில்லை என்று முடிக்கிறார்.

தமிழ் நாவல், சிறுகதைகளில் சாதி வர்க்க அமைப்புகள் என்ற கருப்பொருளில் நடைபெற்ற கருத்தரங்கக் கட்டுரைகளில் கட்டுரையாளர்கள், எழுத்தாளர்களின் காலம், சமுதாயம் முதலியவற்றின் பிரதிபலிப்புகளாக அவர் தம் படைப்புகள் அமைகின்றன. நாவல்களில் தாம் காணும் குறை நிறைகளை உள்ளவாறு விவாதித்துத் திறனாய்வு செய்துள்ளார்கள்.

## 6. இலக்கியத்தில் பெண்கள்

1976 ஆம் ஆண்டு நடைபெற்ற நண்பர் வட்டத்தின் ஏழாவது கருத்தரங்கின் கருப்பொருள் இலக்கியத்தில் பெண்கள் என்பதாகும்.

ச. மெய்யப்பன் எழுதிய **சங்க இலக்கியத்தில் பெண்கள்** என்ற கட்டுரை முதலாவதாக அமைகின்றது. சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ள பெண்கள் நாணம், கற்பு முதலிய செல்வப் பண்புகளும், விருந்தோம்பல், மக்கட்பேறு, கணவனைப் பேணுதல் முதலிய குடும்பச் சிறப்புகளும், வீரம், கல்வி முதலிய சமுதாய நல இயல்புகளும் அமைந்த உருவமாக விளங்கினார்கள் என்றும், இலக்கிய உணர்வுள்ள பல பெண் புலவர்கள் இருந்தனர் என்ற செய்தியையும் இவரது கட்டுரை விளக்குகின்றது.

இரண்டாவது கட்டுரை எம்.எஸ். அருள்சாமி எழுதிய கட்டுரை பெருங்காப்பியம், புராணம் இதிகாசங்களில் பெண்கள் என்ற தலைப்பில் அமைந்திருக்கிறது. ஐம்பெருங்காப்பியங்களான **சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி, வளையாபதி, குண்டலகேசி, திருவிளையாடற்புராணம், இராமாயணம், மகாபாரதம்** ஆகிய காப்பிய, புராண இலக்கியங்களை ஆய்வுக்கு எடுத்துக் கொண்டு இவற்றில் பெண்களுக்கு அளிக்கப்பட்டுள்ள முக்கியத்துவத்தை ஆராய்கிறார்.

தமிழ்ப்புனைகதைகளில் பெண்கள் 1875 - 1925 என்ற கட்டுரையைத் தி.பாக்கியமுத்து எழுதியுள்ளார். வேதநாயகம் பிள்ளையின் பிரதாப முதலியார் **சரித்திரம்** ராஜம் ஐயரின் **கமலாம்பாள் சரித்திரம்**, சி. அருமை நாயகத்தின் **மீதி இருள்** முதலிய நாவல்களை ஆய்வுக்கு எடுத்துக் கொண்டிருக்கிறார். ஆரம்ப கால நாவல்களில் இடம் பெற்றுள்ள பெண்கள் சமுதாய மாற்றத்திற்கு எடுத்துக் காட்டுகளாக அமைந்துள்ளனர் என்று கூறுகிறார்.

அடுத்தாக இடம் பெறும் கட்டுரை **தற்காலத் தமிழ் நாவல்களில் பெண்கள்** 19948–1960 என்ற கட்டுரையை பிளாரன்ஸ் வில்லியம் எழுதியுள்ளார். பெண்கள் வாழ்விற்கு மட்டுமே பிறந்தவர்கள் என்ற கொள்கை முன்னாளில் இருந்தது. அத்தோடு அவள் வாழவும் பிறந்தவள் தான் என்பதை இக்கால இலக்கியம்

உணர்த்த முயன்று இருக்கிறது[19] என்று இலக்கியத்தில் பெண்கள் பெற்றுள்ள இடத்தைக் குறிப்பிடுகிறார் பிளாரன்ஸ் வில்லியம்.

எஸ்.வி.சுப்பிரமணியனின் தற்காலப் புனைகதைகளில் பெண்கள் 1961-1975 என்ற கட்டுரையில் தற்காலப் புனைகதைகளில் இடம் பெறும் பெண்களின் காதல், சாதி, மதம், பொருள் போன்ற பல்வேறு கூறுகளையும் ஆராய்கிறார். தி.ஜானகிராமன், நீல.பத்மநாபன், அகிலன், நா.பார்த்தசாரதி, ஜெயகாந்தன், ஜெகசிற்பியன், ஐசக் அருமைராசன், ராஜம் கிருஷ்ணன், மணியன், கோ.வி.மணிசேகரன் முதலியோரின் பல்வேறு புதினங்களை ஆராய்ந்து இவற்றில் காணப்படும் தாய்,மகள், மனைவி, அண்ணி, அக்காள், தங்கை, மாமியார், பணிபுரிபவள் போன்ற பல்வேறு உறவு நிலைகளில் பெண்களின் இடத்தை விளக்கியுள்ளார்.

தற்காலக் கவிதைகளில் பெண்கள் என்ற தலைப்பில் ரா.சுப்பிரமணியன் எழுதியுள்ளார். இவரது கட்டுரையின் வாயிலாக பாரதியார், பாரதிதாசன், முத்துசாமி, காமராசன், சோமசுந்தரன் முதலியோரின் கவிதைகளில் பெண்கள் பெறும் இடத்தை ஆராய்ந்துள்ளார்.

இறுதியாக இடம் பெற்றுள்ள இந்திய இலக்கியத்தில் பெண்கள் என்னும் ஆங்கிலக் கட்டுரையை கே.எம்.தாரகன் அளித்துள்ளார்.

இலக்கியத்தில் பெண்கள் என்ற கருத்தரங்கில் பங்குபெற்ற கட்டுரையாளர்கள் சங்ககாலத்தில் இருந்து தற்காலம் வரையில் தமிழ் இலக்கியத்தில் பெண்கள் எவ்வாறு சித்திரிக்கப் பெற்றிருக்கிறார்கள், இலக்கியத்தில் இருந்து நாம் பெண்களைப் பற்றி அறிந்து கொள்ளக்கூடிய செய்திகள் யாவை என்ற வினாக்களுக்கு விடையளிக்க முயன்று இருக்கிறார்கள் கட்டுரையாளர்கள்.

## 7. தமிழ் நாவல்களில் குடும்பசக்தி சமுதாய மாற்றம்

1977ஆம் ஆண்டு நடைபெற்ற நண்பர் வட்டத்தின் எட்டாவது கருத்தரங்கின் கருப்பொருள் **தமிழ் நாவல்களில் குடும்பசக்தி சமுதாய மாற்றம்** என்பதாகும்.

முதல் கட்டுரையாக தி.பாக்கியமுத்து எழுதிய **இராஜம் ஐயர் - மாதவய்யா -** நாவல்கள் என்பதாகும். இராஜம் ஐயரின் **கமலாம்பாள் சரித்தரம்,** மாதவய்யாவின் **கிளாரிந்தா, பத்மாவதி சரித்திரம்** முதலிய நாவல்களை ஆய்வுக்கு உட்படுத்தி உள்ளார். அக்காலக் குடும்ப அமைப்பு, சாதி, மதம், சடங்குகள், அதனை எதிர்த்துப் போராடத் துணை செய்த குடும்ப சக்தி, இக்குடும்ப சக்தியால் ஏற்பட்ட சமுதாய மாற்றம் ஆகியவை இவரது கட்டுரையில் விளக்கப்பட்டுள்ளன.

தா.வே.வீராசாமி எழுதிய **கா.சி.வேங்கடரமணி - கல்கி நாவல்கள்** என்பது இரண்டாவது கட்டுரை. வேங்கடரமணியின் **முருகன் ஓர் உழவன், தேசபக்தன் கந்தன்,** கல்கியின் **தியாகபூமி, அலைஓசை** முதலிய நாவல்களைக் கொண்டு குடும்பத்தின் சக்தியையும் சமுதாய மாற்றத்தையும் விளக்கியுள்ளார்.

**கு.ப.ராஜகோபாலன் - புதுமைப்பித்தன் கதைகள்** என்ற தலைப்பில் பெ.கோ.சுந்தரராசனின் கட்டுரை மூன்றாவதாகும். குடும்ப சக்தியைப் பற்றி கு.ப.ராஜகோபாலன், புதுமைப்பித்தன் ஆகியோருடைய கதைகளிலிருந்து விளக்கம் காண்பது எளிதல்ல. இவ்விரு படைப்பாளிகளும் சிறுகதைகளே அதிகம் எழுதி சிறுகதையின் முன்னோடிகளாக விளங்கியதால் குடும்பம் என்னும் கருப்பொருள் இவர்களுடைய கதைகளில் சிறு அளவில்தான் கையாளப்படுகிறது[20] என்று கூறுகிறார்.

**கிருத்திகா - அகிலன் நாவல்கள்** என்ற கட்டுரையை அளித்தவர் ஆர்.சேதுமணி. கிருத்திகாவின் **நேற்றிருந்தோம், புதிய கோணங்கி** என்ற

நாவல்களையும் அகிலனின் சிநேகிதி, எங்கே போகிறோம்? என்ற இருநாவல்களையும் ஆராய்ந்துள்ளார்.

எப்சிபா ஜேசுநாதன் உருவாக்கியிருக்கும் கட்டுரையின் தலைப்பு ஜெயகாந்தன் - ஜானகிராமன் நாவல்கள் என்பதாகும். இது ஐந்தாம் கட்டுரையாக இடம் பெற்றுள்ளது. ஜெயகாந்தனின் உன்னைப்போல் ஒருவன், சில நேரங்களில் சில மனிதர்கள் ஆகிய நாவல்களையும், தி.ஜானகிராமனின் மோகமுள், மலர் மஞ்சம் ஆகியவற்றையும் ஆராய்ந்து இலட்சியமுள்ள குடும்பங்கள், இலட்சியமற்ற குடும்பங்கள் என இருவகை குடும்பங்களின் நிலையை விவரித்துள்ளார்.

ஆறாவது கட்டுரை செ. ஜேசுநாதன் எழுதிய நீல. பத்மநாபன் - எப்சிபா ஜேசுநாதன் நாவல்கள் என்பதாகும். நீல. பத்மநாபனின் உறவுகள், மின் உலகம், எப்சிபா ஜேசுநாதனின் புத்தம் வீடு, டாக்டர் செல்லப்பா ஆகிய நாவல்களின் துணையோடு தமிழ் நாவல்களில் காணப்படும் குடும்ப சக்தி சமுதாய மாற்றம் ஆகியன விளக்கப்படுகின்றன.

நா. பார்த்தசாரதி - ஆர் சண்முகசுந்தரம் நாவல்கள் என்ற தலைப்பின் கீழ் இடம் பெற்றுள்ள கட்டுரையை சி.எம்.ஐ. சிங்கராஜ் எழுதியுள்ளார். நா. பார்த்தசாரதியின் பிறந்த மண், குறிஞ்சிமலர் என்பனவும் ஆர். சண்முகசுந்தரத்தின் சட்டி சுட்டது, அதுவா இதுவா என்பனவும் இக்கட்டுரையில் இடம் பெற்றுள்ள நாவல்கள்.

ராஜம் கிருஷ்ணன் - டி. செல்வராஜ் நாவல்கள் என்னும் தலைப்பில் ராஜம் கிருஷ்ணனின் நாவல்களையும், டி. செல்வராஜின் நாவல்களையும் எஸ். லாரன்சு ஆராய்ந்து உள்ளார்.

ஆ. மாதவனின் புனலும் மணலும் என்பது டி.ஏசுதாஸ் என்பவரால் அளிக்கப்பட்ட கட்டுரை. இந்நாவலில் இடம் பெற்றுள்ள அங்குசாமியின் குடும்பத்தையும் தாமோதரன் என்னும் பாத்திரத்தையும் ஆராய்ந்திருக்கிறார்.

ஆர்.எஸ்.ஜேக்கப்பின் 'ஐசக் அருமைராசனின் கீறல்கள்' என்ற கட்டுரை இறுதியாக அமைந்துள்ளது.

தமிழ் நாவல்களில் குடும்ப சக்தி சமுதாய மாற்றம் என்ற கருத்தரங்கில் பங்கு பெற்ற கட்டுரையாளர்கள் தமிழ் நாவல்கள், புனை கதைகளில் காணப்படும் சமுதாயப் பிரச்சினையையும், இலக்கியக் கொள்கையையும் ஆராய்ந்து, இலக்கியமும் சமுதாயமும் மேம்பாடு அடைய முயன்றுள்ளனர்.

## 8. நூ றாண்டு தமிழ் நாவல் தரும் செய்தி

1978ஆம் ஆண்டு நடைபெற்ற நண்பர் வட்டத்தின் ஒன்பதாவது கருத்தரங்கின் கருப்பொருள் **நூறாண்டு தமிழ் நாவல் தரும் செய்தி** என்பதாகும்.

முதல் கட்டுரை சரோஜினி பாக்கியமுத்து எழுதிய **பண்பாட்டு உணர்வு (1879-1910)** என்பதாகும். வேதநாயகம் பிள்ளையின் பிரதாப முதலியார் சரித்திரம், சு.வை.குருசுவாமி சர்மாவின் **பிரேம கலாவதி**, கிருபை சத்தியநாதனின் **கமலா**, **ஓர் இந்துப்பெண்ணின் வாழ்க்கை**, மாதவையாவின் **கிளாரிந்தா** என்ற நான்கு நாவல்களை எடுத்துக்கொண்டு பண்பாட்டு உணர்வினை ஆராய்கிறார்.

இரண்டாவது கட்டுரை சோ.சிவபாதசுந்தரம் எழுதிய **சமய உணர்வு (1879-1910)** என்பதாகும். கட்டுரையாளர் தம் ஆய்வுரையில் ஆரம்பகால நாவலாசிரியர்கள் மேற்கேயிருந்து வந்த பண்பாட்டு மரபுகள் தமிழ்நாட்டு மரபுகளுடன் பொருந்தியதை உணர்ந்தனர். நமது மரபுகளைக் காத்து வைக்க வேண்டும் என்பதுடன் பிராட்லா முதலிய நாஸ்திகவாதிகளின் கொள்கைகளெல்லாம் உயர்கல்வி கற்கும் ஆங்கில மாணவர்களிடையே பரவிச் சீர்கெட வைத்துவிடுமே என்ற கவலையும் கொண்டிருந்தனர். அக்கால நாவல்களைப் படிக்கும்போது இவை புலனாகின்றன[21] என்கிறார்.

மூன்றாவது கட்டுரை ராஜம் கிருஷ்ணன் எழுதிய **சமுதாய விமர்சனம் (1911-1935)** என்பதாகும். தமிழ் நாவல்களில் சமுதாய விமர்சனத்தைப் பற்றிப் பேசுகையில் நாவல் என்பது என்ன? என்று வினா எழுப்புகிறார். வ.ரா.வின் **விஜயம்** நாவலைச் சுட்டிக்காட்டி நாவலின் சாத்தியக்கூறுகளைக் கோடிட்டுக் காட்டுகிறார். சமுதாய மாற்றத்துக்கான ஒரு சீர்திருத்தவாதியின் ஓங்கிய குரலின் முத்திரை பதித்த வ.ரா.வுக்கு இந்தியப் பெண்குலம் என்றென்றும் கடமைப்பட்டுள்ளது என்கிறார்.

நான்காவது கட்டுரை எழில்முதல்வன் எழுதிய **தேசீய உணர்வு** (1911-1935)' என்பதாகும். தமிழ் நாவல் இலக்கியத்தில் காணப்படும் தேசீய வறுமைக்குரிய காரணங்களை ஆராய்கிறார். இதற்குத் தமிழகத்தில் தேசீய விழிப்புணர்வு குறைவு இல்லையென்றாலும் அக்கால எழுத்தாளர்களுக்கும் இந்த அவகாசமும் கிடைக்கவில்லை என்ற காரணமும் எழுத்தாளர்களுக்கு இருந்த அச்சமும் இதற்குக் காரணமாயிற்று என்கிறார்.

ஐந்தாவது கட்டுரை ம.செ.இரபிசிங் எழுதிய **பொழுது போக்கு நாவல்கள் (1910-1935)** என்பதாகும். நாவல்களில் பொழுதுபோக்குக் கூறுகளை முற்றிலும் நீக்க இயலாது என்பதையும், நாவல் கற்பது ஒருவகையில் பொழுதைப் போக்கப் பயன்படுகிறது என்பதையும் மறுக்க முடியாது என்று தன் கட்டுரையில் குறிப்பிடுகிறார்.

ஆறாவது கட்டுரை இரத்தினாவதி ஜான் எழுதிய **சென்ற காலப்பெருமை** (1936-1960) என்பதாகும். நா.பார்த்தசாரதியின் **மணிபல்லவம்** கல்கியின் **சிவகாமியின் சபதம்** அகிலனின் **வேங்கையின் மைந்தன்** சாண்டில்யனின் **கன்னிமாடம்** ஜெகசிற்பியனின் **ஆலவாய் அழகன்** பாலகிருஷ்ணா நாயுடுவின் **டணாய்க்கன் கோட்டை** என்ற ஆறுநாவல்கள் மூலம் சென்ற காலப்பெருமை ஆராய்கிறார்.

சென்ற காலச் சிறப்பு என்பது கோட்டைகளிலும், கொத்தளங்களிலும், போர்களிலும், வீரத்திலும், விவேகத்திலும், அரசியல் தந்திரங்களிலும் மட்டுமன்று, வாழ்க்கையிலும், வாழ்க்கை மதிப்பீடுகளிலும், கலையிலும், சமயத்திலும், குறிக்கோள்களிலும், தியாகத்திலும், திறமையிலும் இருந்தது என்பதை இந்த நாவல்கள் எடுத்துக் காட்டுகின்றன[22] என்கிறார் இரத்னாவதி ஜான்.

ஏழாவது கட்டுரை சேதுமணி மணியன்எழுதிய **சமூக** எதிர்ப்பு (1935-1965) என்பதாகும். *1935-1965* கால வரையறைக்குள் உள்ள இந்த நாவல்களில் காணப்படும் பிரச்சினைகளுள் ஒன்றான தேவதாசி முறை இன்றைய சமூகத்தில் இல்லை. இன்னும் சில பிரச்சனைகள் அன்றிருந்த தீவிரத்தோடு இன்று இல்லை என்கிறார். இவ்வுண்மை சமூக மாற்றத்தை மட்டுமன்று, சமூக எதிர்ப்பின் ஆற்றலையும் கணிக்கும் அளவுகோலாக உள்ளது என்கிறார்.

எட்டாவது கட்டுரை எச்.பி.ராஜ்குமார் எழுதிய இலட்சிய நோக்கு (1961-1977) என்பதாகும். ந.சிதம்பர சுப்பிரமணியன், நாரண துரைக்கண்ணன், மு.வரதராசன், கு.ராஜவேலு ஆகியோருடைய நாவல்களில் பிரதிபலிக்கும் இலட்சிய நோக்குகளை ஆராய்கிறார்.

நாவலாசிரியர்கள் தங்கள் இலட்சியங்களைப் பிரதிபலிக்க யதார்த்தக் கலப்பற்ற இலட்சியக் கதாநாயகர்களைப் படைக்கும்போது, அவர்கள் நமது அறிவைக் கவர்ந்தாலும், நமக்கு வழிகாட்டுவதில் தோற்றுப் போய்விடுகிறார்கள். சமுதாயத்திற்கு வழிகாட்டும் இலட்சியம் இன்றி, வெறும் இலட்சியத்திற்காகவே படைக்கப்படும் இலட்சிய நாவல்கள் யாதொரு பயனையும் தரமுடியாது என்பது திண்ணம்[23] என்கிறார் ராஜ்குமார்.

ஒன்பதாவது கட்டுரை பெ.கோ.சுந்தரராஜன் (சிட்டி) எழுதியுள்ள கொள்கைப் புரட்சி (1961-1977) என்பதாகும். இந்திரா பார்த்தசாரதியின்

குருதிப்புனல், சின்னப்ப பாரதியின் தாகம், ஐசக் அருமைராசனின் **கீறல்கள்**, பொன்னீலனின் **கரிசல்** என்ற நான்கு நாவல்களை ஆய்வுக்கு எடுத்துள்ளார்.

தாகம் சொல்லும் கதையில் போர்க்குரல் இறுதியில் ஒலிக்கிறது. **கீறல்கள்** கதையில் கதாநாயகன் இறந்து விடுகிறான். போராட்டம் தொடர்கிறதா என்பதில் தெளிவில்லை. **கரிசல்** கதையில் போராட்டம் தொடரும் வாய்ப்பு தெளிவாகப் புலப்படுகிறது. குருதிப்புனல் கதையிலும் போராட்டம் தொடருமா என்பது தெரியவில்லை என்று நான்கு கதைகளின் கொள்கை முடிவினைச் சுட்டிக் காட்டுகிறார்.

இறுதியாக இடம்பெறும் கட்டுரை ச.வே.சுப்பிரமணியனின் நாஞ்சில் நாடனின் **தலைகீழ் விகிதங்கள்** என்பதாகும். நாவலின் கதை, பாத்திரப்படைப்பு, வட்டார வழக்கு, இலக்கியத் தாக்கம், அங்கதம், நடை, வருணனை என்ற நிலைகளில் நாவலைத் திறனாய்வு செய்துள்ளார். தமிழ் நாவல் இலக்கியத்தில் இப்புதினத்திற்கு ஒரு தனித்த இடம் உண்டு என்று கூறுகிறார்.

நூறாண்டு தமிழ் நாவல் தரும் செய்தி என்ற கருத்தரங்கில் பங்குபெற்ற கட்டுரையாளர்கள் ஒரு நூறு ஆண்டு காலத் தமிழ் நாவல்களின் வாயிலாக நமக்குக் கிடைத்துள்ள பயன்பாட்டினையும் பல்வேறு பண்பாட்டுச் சமய, சமூக,தேசியச் செய்திகளையும் பற்றி விரிவாக ஆராய்ந்துள்ளார்கள்.

**தமிழ் நாவல்களில் மனித உரிமைகளும் மக்கள் போராட்டமும்**

*1979*ஆம் ஆண்டு நடைபெற்ற நண்பர் வட்டத்தின் பத்தாவது கருத்தரங்கின் கருப்பொருள் தமிழ் நாவல்களில் மனித உரிமைகளும் மக்கள் போராட்டமும் என்பதாகும்.

தொழிலாளர்கள் உரிமைகள் எனுந் தலைப்பிலான முதல் கட்டுரையை எழுதியவர் இனியவன். தமிழ் நாவலில் தொழிலாளர் உரிமைகள் பற்றி

ஆராய்ந்துள்ள இவர் குருதிப்புனல், மலரும் சருகும், தாகம், கரிசல் ஆகிய புதினங்களில் காணப்படும் விவசாயத் தொழிலாளர் போராட்டத்தையும், கடல்புரம், அலைவாய்க்கரை இவற்றின் மூலம் மீனவத் தொழிலாளர்களின் பிரச்சினைகளையும் ஆராய்ந்து உள்ளார்.

டாக்டர் கிரேசு அலெக்சாந்தர் எழுதியுள்ள தனிமனிதனின் உரிமை என்னும் கட்டுரை இரண்டாவதாக இடம் பெற்றுள்ளது. அசோகமித்திரனின் 18வது அட்சக்கோடு, ச.கந்தசாமியின் சாயாவனம் என்னும் நாவல்கள் சிறப்பாகவும், இந்திரா பார்த்தசாரதியின் குருதிப்புனல், ஆர்.சண்முக சுந்தரத்தின் தனிவழி, ஜெயகாந்தனின் ஒரு நடிகை நாடகம் பார்க்கிறாள் என்ற மூன்று நாவல்கள் ஆராயப்பட்டுள்ளன.

தனிமனித உரிமைகள் ஆண்டவனால் அருளப்பட்டவைதான். ஆனால் தெய்வம் வரம் கொடுத்தால் மட்டும் போதாது. சிலபல பூசாரிகளும் அல்லவா வரம் தரவேண்டியிருக்கிறது[24] என்றும் கிரேஸ் செல்வராஜ் தமது கட்டுரையில் பெண்ணுரிமையைப் பற்றியும் ஆராய்ந்துள்ளார்.

மூன்றாவது கட்டுரை திருமதி கிரேஸ் செல்வராஜ் எழுதிய பெண்ணுரிமை என்பதாகும். பெண்ணுரிமையைப் பற்றி திருமதி கிரேஸ் செல்வராஜ் குறிப்பிடும்போது நிகழ்ந்து வரும் சமுதாய மாற்றங்களால் ஆங்காங்கே புரையோடிவிட்ட சிற்சில விரிசல்களை எடுத்துக்காட்டி, அவை பெண்மையை எந்த அளவிற்குப் பாதித்துள்ளன என்று ஆய்வதுடன் பெண்மையின் புனிதம் கெடாது காப்பதின் முக்கியத்துவத்தையும் இக்கால நாவல்கள் எடுத்துக் காட்டுகின்றன[25] என்று கூறுகிறார்.

டி.அ.தாவீது எழுதிய இளைஞர் பிரச்சனைகள் என்ற கட்டுரை நான்காவதாக இடம் பெற்றுள்ளது. 18வது அட்சக் கோடு, காகித மலர்கள் ஆகிய நாவல்களைப் பின்னணியாகக் கொண்டு இளைஞர் பிரச்சினைகளை ஆராய்ந்துள்ளார். இளைஞர்

பிரச்சினைகள் என்று வரையறுக்கப்படக்கூடிய பிரச்சினைகள் என்னென்ன என்றும் விளக்குகிறார்.

சுதா.நேசய்யனால் எழுதப்பட்ட பொருளாதார உரிமை என்ற கட்டுரை கரிசல், தாகம் என்ற இரு நாவல்களைக் கொண்டு ஆராயப்பட்டுள்ளது.

ஈழத்து எழுத்தாளர் ஆர்.எஸ்.சுசிர்தராஜாவின் ஈழத்து எழுத்துகளில் மனித உரிமைகளும் மக்கள் போராட்டங்களும் என்ற கட்டுரை ஆறாவதாக அமைந்துள்ளது. தனிமனித உரிமைகள், சாதி இனப் பிரச்சினைகள், தொழிலாளர் பிரச்சினைகள், பெண்களின் உரிமை, வர்க்க பாத்திர வார்ப்புகள், எனும் கோணங்களில் இக்கட்டுரையினை எழுதியுள்ளார். ஈழத்து எழுத்தாளர்கள் தம் படைப்புகளில் தனிமனிதனுடைய உரிமைகளுக்கே முக்கிய இடத்தை தருகிறார்கள் என்று கூறுகிறார்.

காகித மலர்கள் - ஒரு மதிப்பீடு என்ற கட்டுரை ஏழாவதாக இடம் பெற்றுள்ளது. இதனை எழுதியவர் தி.க.சிவசங்கரன். நூறு வயது உடைய தமிழ் நாவல்கள் என்ற இலக்கிய வடிவத்தின் வளர்ச்சிக்கும் உயர் ஆற்றலுக்கும் ஓர் எடுத்துக்காட்டாக இந்நாவல் விளங்குகிறது என்று குறிப்பிட்டுள்ளார்.

எட்டாவதாக இடம் பெற்ற கட்டுரை காகித மலர்கள் என்பதாகும். கட்டுரையாளர் ஆதவன், மனித உரிமைகளையும் மக்கள் போராட்டத்தையும் எவ்வாறு காகித மலர்கள் வெளிப்படுத்தியுள்ளது என்பதை ஆராய்கிறார்.

தமிழ் நாவல்களில் மனித உரிமைகளும் மக்கள் போராட்டமும் என்ற கருத்தரங்கில் பங்குபெற்ற கட்டுரையாளர்கள் ஒவ்வொரு காலகட்டத்திலும் மனித உரிமைகளும், மக்கள் போராட்டங்களும் ஏற்பட்ட விதம், அவற்றைத் தமிழ் நாவல்கள் வெளியிட்டுள்ள பாங்கு, அதனால் சமுதாயத்திற்குக் கிடைக்கும் பயன்கள் என்ன என்பதை ஆராய்ந்துள்ளார்கள்.

**தற்கால இலக்கியத்தில் முற்போக்குப் பார்வைகள்**

1980ஆம் ஆண்டு நடைபெற்ற நண்பர் வட்டத்தின் பதினோராவது கருத்தரங்கின் கருப்பொருள் **தற்கால இலக்கியத்தில் முற்போக்குப் பார்வைகள்** என்பதாகும்.

முதல் கட்டுரையாக நா.வானமாமலை எழுதியுள்ள **இலக்கியத்தில் முற்போக்குப் பார்வைகள்** என்பதாகும். இலக்கியம், உரைநடைப் புரட்சியாகத் தோன்றி தமிழ்நாட்டில் தோன்றி மக்கள் இயக்கங்களின் தாக்கங்களால் மாறுதல் அடைந்து தற்போது சமூக மாற்றத்தை ஊக்குவிக்கும் பேராயுதமாக உருவாகி வருகிறது. மனித நேசம், பெண் விடுதலை, தேச விடுதலை, சுயமரியாதை இயக்கம், உழைப்பாளர் இயக்கம், உழைப்பாளர் இயக்கம் மக்கள் இயக்கங்களால் பாதிப்பு பெற்றுள்ளது. தமிழ் மக்களுக்கு அறிவு வெளிச்சம் பாய்ச்சத் துவங்கிய நமது முதல் நாவலாசிரியர் காலத்திலிருந்து இன்று சமூகப் புரட்சி என்ற தற்கால நாவலாசிரியர் காலம் வரை முற்போக்குப் பார்வைகள் வளர்ந்து வந்துள்ளன[26] என்கிறார்.

இரண்டாவதாக இடம் பெறும் கட்டுரை செ.ஜேசுதாசன் எழுதிய **தற்காலத் தமிழ் இலக்கியத்தில் முற்போக்கு - சத்தியானந்தன்** என்பதாகும். இவர் அ.மாதவையாவின் **சத்தியானந்தன்** என்ற நாவலில் முற்போக்குப் பார்வைகளை ஆராய்கிறார். மாதவையாவின் முற்போக்கில் சமகால வாடை நன்றாகவே வீசுகிறது என்றாலும் சில விடுபாடுகள் இருப்பதைக் கூறுகிறார். எடுத்துக்காட்டாக சாதி வேறுபாடு, பொருளாதாரப் பிரச்சினை ஆகியவற்றைக் குறிப்பிடுகிறார்.

மூன்றாவதாக இடம் பெறும் கட்டுரை எப்சிபா ஜேசுதாசன் எழுதிய **மூன்று நாவல்கள் - முற்போக்குப் பின்னணியில்** என்பதாகும். பூமணியின் **பிறகு** வல்லிக்கண்ணனின் **நினைவுச் சரம்** பொன்னீலனின் **கொள்ளைக்காரர்கள்** என்ற

மூன்று நாவல்களில் வாழ்க்கைத் தத்துவங்களை மட்டும் ஆராய்ந்துள்ளார் கட்டுரையாளர்.

அடுத்ததாக சு.சமுத்திரத்தின் **ஒரு கோட்டுக்கு வெளியே** என்ற நாவலை மனோன்மணி ரவீந்திரன் திறனாய்வு செய்துள்ளார். இந்நாவலில் நாவலாசிரியரின் முற்போக்குப் பார்வைகள் எவ்வாறு நாவலில் பரவிக் கிடக்கிறது என்பதைச் சுட்டிக்காட்டுகிறார் நாவலாசிரியர் முற்போக்குப் பார்வையில் வெற்றி பெற்றுள்ளார் என்கிறார்.

ஐந்தாவதாக இடம் பெறம் கட்டுரை வல்லிக்கண்ணனின் **இன்றைய சிறுகதைகளில் முன்னேற்றப்போக்கு** என்பதாகும். செயப்பிரகாசம், பூமணி, ஜெயந்தன், லிங்கன், ஜோதிர்லதா கிரிஜா, வீர, வேலுசாமி, என்.ஆர்.தாசன், ச.சமுத்திரம் ஆகியோரின சிறுகதைகளில் முன்னேற்றப் போக்குகளை விரிவாக ஆராய்ந்து பின்வருமாறு கூறுகிறார். தமிழ்ச் சிறுகதைத் துறையில் முற்போக்குப் பார்வைகள் கூர்மையாகவும் நேர்மையாகவும் பாய்ந்துள்ளன. அநீதிகளைச் சுட்டெரிக்க அவை விரும்புகின்றன என்பது விளங்கும். தமிழ்ச்சிறுகதை இலக்கியம் ஆரோக்கியமான பாதையில் வளர்ந்து வருகிறது என்பதும் புரியும் [27] என்கிறார்.

ஆறாவதாக இடம் பெறும் கட்டுரை கெ.பக்தவச்சலம் எழுதியுள்ள **அறிஞர் அண்ணாவின் சிறுக்கதைகள்** என்பதாகும். சமுதாய நிலைமைகளை சாதி உயர்வு தாழ்வுகளினால் ஏற்படும் விபரீதங்கள், மூட நம்பிக்கையினால் விளையும் கேடுகள், சமுதாய விரோதிகளால் பாமரர் அடையும் அவதிகள் முதலியவற்றைச் சுட்டிக்காட்ட அண்ணா தயங்கியது இல்லை என்கிறார் கட்டுரையாளர்.

ஏழாவது கட்டுரை பிரியக்குமார் எழுதியுள்ள **தற்காலக் கவிதைகளில் முன்னேற்றப் போக்குகள்** என்பதாகும். பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம், பொன்னடியான், நா.காமராசன், மீரா, மு.மேத்தா, தயானந்தன் பிரான்சிஸ்,

இன்குலாப், புவியரசு ஆகியோரின் கவிதைகளில் முன்னேற்றப் போக்குகள் பற்றி ஆராய்ந்துள்ளார். கவிஞர்கள் புதிய சமுதாயத்திற்குப் பாதை படைக்கிறார்கள். சமுதாயத்தைப் பற்றி அனுதாபங்களாக இல்லாமல், சமூக வாழ்வின் அனுபவங்களாக உள்ளன என்று கூறுகிறார்.

எட்டாவது கட்டுரை ஜான் ஆசிர்வாதம் எழுதியுள்ள **இன்றைய சிந்தனைக்குச் சுரதாவின் கவிதைகள்** என்பதாகும். கவிஞர் சுரதாவின் கவிதைகளில் இருந்து பல்வேறு முற்போக்கான கருத்துக்களை எடுத்துக்காட்டி அவரின் சிந்தையைப் புலப்படுத்துகிறார். சுரதாவின் கவிதைகள் வெறுங் கவிதைகளல்ல, ஒவ்வொன்றும் சிந்தனைச் சுரப்பிகள், கற்பனை ஊற்றுக்கள், கருத்துச்சிதறல்கள் என்கிறார் கட்டுரையாளர்.

ஒன்பதாவது கட்டுரை கோமல் சுவாமிநாதன் எழுதியுள்ள **தமிழ் நாடகத்தில் முன்னேற்றப் போக்குகள்** என்பதாகும். நாடகத்தின் முன்னேற்றப் போக்குகளை விரிவாக ஆராய்ந்துள்ள இவர், தமிழ் நாடகம் என்பது இன்றும் குழந்தையாகத்தான் உள்ளது. சுதந்திரம் அடைந்த முப்பதாண்டுகளில் இன்னும் நாடகத்தில் மட்டும் இந்த தேக்கநிலை ஏன் என்று சிந்திக்கச் சொல்கிறார்.

பத்தாவது கட்டுரை சா.லாரன்சு எழுதியுள்ள **இன்றைய தமிழ்த் திரைப்படங்களில் முற்போக்குப் பார்வை** என்பதாகும். நீண்ட நெடுங்காலமாக நோயாளிப் படுக்கையில் கிடந்த தமிழ்த் திரைப்படத்துறை இப்போதுதான் நல்ல நாவலாசிரியர்கள், இயக்குநர்கள், தயாரிப்பாளர்களால் ஆரோக்கியம் பெற்றிருக்கிறது என்கிறார். மனித உறவுகள் வலுப்பட, மூட நம்பிக்கைகள் முறியடிக்கப்பட, மனிதாபிமானம் மேலோங்க, புரட்சி, புதுமை என்ற கோணத்தில் தமிழ்த் திரைப்படங்கள் தொடர்ந்து வெளியிடப்பட வேண்டும்[28] என்கிறார்.

இறுதியாக இடம் பெறுவது சி.ஆர்.டபிள்யு டேவிட்டின் **பாரதிராஜாவின் திரைப்படங்களில் முன்னேற்றப் போக்குகள்** என்பதாகும். 16 வயதினிலே, கிழக்கே

போகும் ரயில், சிகப்பு ரோஜாக்கள், புதிய வார்ப்புகள், நிறம் மாறாத பூக்கள், கல்லுக்குள் ஈரம், நிழல்கள் ஆகிய திரைப்படங்களில் பாரதிராஜாவின் முன்னேற்றப் போக்குகளை வரிசையாகப் பட்டியலிட்டுக் காட்டுகிறார். இறுதியாக, இத்திரைப்படங்களை நோக்குங்கால், முன்னேற்றப் போக்குகளை சமுதாய மாற்றத்திற்கு, வளர்ச்சிக்கு நற்பண்புகளுக்கு உரியவற்றைச் சுட்டிக்கூறாது, கலை நுணுக்கத்திலும், கதை சொல்லும் ஆற்றலிலும் தான் முன்னேற்றப் போக்குகள் கூறப்பட்டுள்ளன என்பது தெளிவு[29] என்கிறார்.

தற்கால இலக்கியத்தில் முற்போக்குப் பார்வைகள் என்ற கருத்தரங்கில் பங்கு பெற்ற கட்டுரையாளர்கள் மனித வாழ்க்கையின் முன்னேற்றப்போக்கை இலக்கியம், நாடகம், திரைப்படங்கள் வாயிலாக அவற்றின் ஆசிரியர்கள் எங்ஙனம் நோக்குகின்றார்கள் என்பதை இக்கருத்தரங்கு விவரிக்கின்றது.

## 11. தற்காலத் தமிழிலக்கியத்தில் வறுமையும் சாதீயமும்

1982ஆம் ஆண்டு நடைபெற்ற நண்பர் வட்டத்தின் பன்னிரண்டாவது, கருத்தரங்கின் கருப்பொருள் தற்காலத் தமிழிலக்கியத்தில் வறுமையும் சாதீயமும் என்பதாகும்.

கா.சிவத்தம்பி தற்காலத் தமிழ் இலக்கியத்தில் வறுமையும் சாதீயமும் என்ற தமது கட்டுரையில் இவ்விரு கோட்பாடுகளும் தமிழ் இலக்கியத்திற்குப் புதுமையானவையன்று; இக்கோட்பாடுகள் புறநானூற்றுக் காலம் முதலே இருந்து வருகின்றன என்று குறிப்பிட்டுள்ளார்.

தி.தயானந்தன் பிரான்சிஸ் தமது தற்காலத் தமிழ்க் கவிதைகளில் வறுமையும் சாதீயமும் என்ற ஆய்வுக் கட்டுரையில் தற்காலம் என்ற வார்த்தை கடந்து முப்பது ஆண்டுகளை மட்டுமே குறிப்பதாகவும் தற்காலத் தமிழ்க் கவிதைகளில்

வறுமையும் சாதீயமும் எவ்வாறு தொடர்பு கொண்டுள்ளது என்பதையும் ஆராய்கிறார்.

மூன்றாவது கட்டுரை ஈழத்தைச் சேர்ந்த சிறுகதையாசிரியரான டொமினிக் ஜீவா என்பவரால் படிக்கப்பட்டதாகும். **தற்காலத் தமிழ்ச் சிறுகதைகளில் வறுமையும் சாதீயமும்** என்ற தலைப்பின் கீழ் வறுமையும் சாதீயமும் இரட்டைக் குழந்தைகள் இவை இரண்டும் ஒரு நாணயத்தின் இரு பக்கங்கள் என்று தமது கருத்தைத் தெரிவித்துள்ளார்.

**இலக்கியங்களில் ஏழ்மையும் சாதீயமும்** என்பது சரஸ்வதி ராம்நாத் எழுதிய கட்டுரையின் தலைப்பு. கணத்திற்குக்கணம் நம்மிடையே நிகழ்ந்துவரும் நிஜங்களை நாம் கண்டும் காணாமல் இருக்கும் உண்மைகளை எழுத்தாளர்கள் தங்களது படைப்பிலே காட்டி நிவாரணம் காணும் பொறுப்பை வாசகர்களின் மீதே விட்டுவிடுகின்றனர்[30] என்கிறார்.

ஐந்தாவது கட்டுரை ஆ. மாதவன் எழுதிய **1879-1935 காலக்கட்ட நாவல்களில் வறுமையும் சாதீயமும்** என்பதாகும். இக்கட்டுரையின் மூலம் சுமார் ஐம்பத்தாறு ஆண்டுகாலத் தமிழ் நாவல்களில் இடம்பெற்றுள்ள பல்வேறு செய்திகளின் மூலம் சுமார் அரை நூற்றாண்டுக் காலத் தமிழ் நாவல்களைப் பற்றியும் அவற்றின் கண் இடம்பெற்றுள்ள வறுமை, சாதிப்பிரச்சினைகள் ஆகியவற்றையும் அறிந்துகொள்ள முடிகின்றது.

ஆறாவது கட்டுரை **தமிழ் நாவல்களில் வறுமையும் சாதீயமும்** என்பதாகும். சேதுமணி மணியன் இதனை வழங்கியுள்ளார். வறுமை, சாதி என்ற இருசமூக அநீதிகள் அழித்தொழிக்கப்பட வேண்டும் என்று கூறியுள்ள இவர் சமூக அமைப்பு மாற்றத்திற்காக மேற்கொண்டு எடுக்க வேண்டிய முயற்சிகளை வரலாற்றில் இருந்து பெற்ற கற்பனையோடு ஆக்கபூர்வமாகப் படைத்துக் காட்டும் நாவல்கள்

தோன்ற வேண்டும். அவையே இப்பிரச்சினைகளில் இருந்து விடுபடும் ஓர் ஒளிப்பாதையை நமக்குக் காட்ட முடியும்[31] என்று முடிக்கிறார்.

தற்காலத் தமிழிலக்கியத்தில் வறுமையும் சாதீயமும் என்ற கருத்தரங்கில் பங்குபெற்ற கட்டுரையாளர்கள் வறுமை, சாதீயம் எனும் இவை இரண்டும் கொண்டுள்ள தொடர்பு, இதற்கானத் தீர்வுகள் முதலியவை தற்காலத் தமிழ் இலக்கியங்களில் இடம்பெற்றிருக்கும் விதத்தை ஆராய்ந்துள்ளார்கள் .

## 12. தற்காலத் தமிழ் இலக்கியத்தில் ஒடுக்குதல் சக்திகளின் படப்பிடிப்பு

1983ஆம் ஆண்டு நடைபெற்ற பதிமூன்றாவது கருத்தரங்கிற்கு எடுத்துக்கொள்ளப்பட்ட பொருள் தற்காலத் தமிழ் இலக்கியத்தில் ஒடுக்குதல் சக்திகளின் படப்பிடிப்பு என்பதாகும். இக்கருத்தரங்க கட்டுரைகளைத் தொகுத்து நூலாக வெளியிடவில்லை. அக்கட்டுரைகளின் தலைப்புக்கள் மட்டும் பின்வருமாறு:

| | | |
|---|---|---|
| 1. | திரு.வி.க.வின் படைப்புகளில் ஒடுக்குதல் சக்திகளின் படப்பிடிப்பு | கோவேந்தன் |
| 2. | விந்தன் எழுத்துக்களில் ஒடுக்குதல் சக்திகளின் படப்பிடிப்பு | மு. பரமசிவம் |
| 3. | டி. செல்வராஜின் படைப்புகளில் ஒடுக்குதல் சக்திகளின் படப்பிடிப்பு | டி. இயேசுதாஸ் |
| 4. | இராஜம் கிருஷ்ணன் படைப்புகளில் ஒடுக்குதல் சக்திகளின் படப்பிடிப்பு | சேதுமணி மணியன் |
| 5. | வலம்புரிஜானின் படைப்புகளில் ஒடுக்குதல் சக்திகளின் படப்பிடிப்பு | கவித்தலம் ஆசா |
| 6. | பாரதிதாசன் சாடிய ஒடுக்குதல் சக்திகள் | பொன்னடியான் |
| 7. | இன்றைய இஸ்லாமிய இலக்கியத்தில் ஒடுக்குதல் சக்திகளின் படப்பிடிப்பு | ஒ.ஏ. காஜாமுகதீன் |
| 8. | இன்றைய கிறித்தவ இலக்கியத்தில் ஒடுக்குதல் சக்திகளின் படப்பிடிப்பு | மைக்கேல் பாரடே |
| 9. | தற்காலக் கவிதை இலக்கியத்தில் ஒடுக்குதல் சக்திகளின் படப்பிடிப்பு | சக்திக்கனல் |

என்பனவாகும்.

## 13. படைப்பிலக்கியப் பாதையில் எண்பதுகளும் தொண்ணூறுகளும்

1990ஆம் ஆண்டு நடைபெற்ற நண்பர் வட்டத்தின் இருபத்தொன்றாவது கருத்தரங்கின் கருப்பொருள் படைப்பிலக்கியப் பாதையில் எண்பதுகளும் தொண்ணூறுகளும் என்பதாகும்.

முதல் கட்டுரை ஜி. ஜான்சாமுவேலின் படைப்பிலக்கியப் பாதையில் எண்பதுகளும், தொண்ணூறுகளும். எண்பதுகளின் இலக்கியப் போக்குகளையும், இலக்கிய இலட்சியத் தாக்கங்களையும் அவற்றுக்கு உரிய களச்சூழலில் வைத்துக் காட்டியதோடு இலக்கியப் படைப்பாளர்கள் தத்துவ ஞானிகளாகவும் புரட்சியாளர்களாகவும் கலைஞர்களாகவும் விளங்க வேண்டும் என்று குறிப்பிட்டுள்ளார்.

இரண்டாவது வல்லிக்கண்ணனின் எண்பதுகளில் சிறுகதை என்ற கட்டுரையில் எண்பதுகளில் சிறுகதை இலக்கியத்தில் ஏற்பட்ட விளைவுகளையும், விபத்துகளையும், வளர்ச்சியையும் நன்கு விளக்கியதோடு, தமிழ்ச்சிறுகதை வளர்ந்து கொண்டுதான் இருக்கிறது என்ற முடிவுடன் முடித்துள்ளார்.

த. கோவிந்தனின் எண்பதுகளில் தமிழ்க்கவிதை என்ற கட்டுரையில் எண்பதுகளில் வாழ்வியல் சார்ந்த வளமான படைப்புகளை வழங்கியுள்ள சில கவிஞர்களின் சிறப்பாற்றல் வெளிப்பாடுகளைச் சுட்டிக்காட்டி, ‘அன்பின் வழியது உயிர்நிலை அதுபோல் மரபின் வழியது கவிதையில் வாழ்வுநிலை’ என்ற கொள்கைத் தெளிவோடு கருத்துக்களை வழங்கியுள்ளார்.

நான்காவதாக இடம்பெறுவது எண்பதுகளில் புதுக்கவிதைகள் என்பதாகும். கட்டுரையாளர் பி.வி. கிரி எண்பதுகளில் வளர்ச்சியை ஒட்டி புதுக்கவிதையில் புதுத்திருப்பம் ஏற்பட்டிருப்பதாகவும் பொதுவாக 1980-1990 கால கட்டங்களில் புதுக்கவிதை வளர்ந்துதான் இருக்கிறது என்றும் விளக்குகிறார்.

ஐந்தாவதாக இடம்பெறுவது மா.செ. இரபிசிங் எழுதிய **எண்பதுகளில் தமிழ் நாவல்கள்** எனும் ஆய்வுக்கட்டுரை. அரசியல் பொருளாதாரப் பாதிப்புக்களைக் கொண்ட சமுதாயச் சூழல்களைப் படைப்பாளர்களின் மனப்போக்கிற்கு ஏற்ப ஆராய்ந்துள்ளார். புதுமையைக் காண விழையும் வாசகனை மனதிற்கொண்டு சமூக உணர்வுடன் படைக்கப்படும் நாவல்கள் எண்ணிக்கை மிகுந்துள்ளன[32] என்ற கருத்துடன் இக்கட்டுரை நிறைவு பெறுகிறது.

ஆறாவதாக இடம்பெறும் கட்டுரை என்.ஆர். தாசனின் **எண்பதுகளில் திறனாய்வுப் போக்குகள்** என்பதாகும். இக்கட்டுரையின் ஆசிரியர் உள்ளடக்கமே உருவத்தைத் தீர்மானிப்பதில் பெரும்பங்கு வகிக்கின்றது என்கிறார். இக்கொள்கையாளர்களின் படைப்புகளே தொண்ணூறுகளில் வரவேற்பினைப் பெறலாம் என்றும் கருதுகிறார்.

ஏழாவது கட்டுரை **தொண்ணூறுகளில் படைப்பிலக்கியம் - எதிர்நோக்குகள்** என்பதாகும். கட்டுரையாளர் சேதுமணிமணியன், தொண்ணூறுகளில் படைப்பிலக்கியத்தின் வளர்ச்சியும் வளமும் எவ்வாறு அமைந்திட வேண்டும் என்பதை இனம் காட்டித் தருகிறார்.

எட்டாவது கட்டுரை ஆர்.எஸ். ஜேக்கப் எழுதிய **தொண்ணூறுகளில் படைப்பிலக்கியம்** என்பதாகும். கட்டுரையில் நம் எழுத்து, நடை என்பதெல்லாம் கழற்றி எறியும் சட்டை மாதிரி அல்ல - அது எழுத்தாளனின் தோல் - உடலோடு ஒட்டிய ஒன்று எழுதுவோம் எழுதி விண்ணை மண்ணுக்கு இழுப்போம்[33] என்கிறார்.

இறுதியாக இடம்பெற்ற கட்டுரை பிளாரன்ஸ் வில்லியம் எழுதிய **பொது இதழ்களில் கிறித்தவக் கதைகள்** என்பதாகும். கட்டுரையாசிரியர் இன்றைய படைப்பிலக்கியத்தில் கிறித்தவம் அருகியே பேசப்படுகிறது என்றும், சிலர்

கிறித்தவத்தைச் சரியாகப் புரிந்து கொள்ளாமல் எழுதுகிறார்கள் என்றும் வருந்துகிறார்.

படைப்பிலக்கியப் பாதையில் எண்பதுகளும் தொண்ணூறுகளும் என்ற கருத்தரங்கில் பங்குபெற்ற கட்டுரையாளர்கள் யாவும் எண்பதுகளில் வெளிவந்த படைப்பிலக்கியங்களின் பங்குகளைப் பகுப்பாய்வு செய்யும் வகையில் அமைந்துள்ளன.

## 14. படைப்பாளர்கள் பார்வையில் மானுடத்தின் காயங்கள்

1991ஆம் ஆண்டு நடைபெற்ற நண்பர் வட்டத்தின் இருபத்திரண்டாவது கருத்தரங்கின் கருப்பொருள் படைப்பாளர்கள் பார்வையில் மானுடத்தின் காயங்கள் என்பதாகும். இக்கருத்தரங்கில் படிக்கப்பட்ட கட்டுரைகள் கவிதை, சிறுகதை, நாவல், குழந்தை இலக்கியம் என்ற நான்கு பிரிவுகளில் அடங்கும். இக்கருத்தரங்கில் ஆறு கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன.

### மரபுக்கவிதைகள்

மரபுக்கவிதைகள் என்னும் இப்பகுதியில் முதலாவதாக மரபுக்கவிதைகளில் மானுடத்தின் காயங்களை ம.வி. சுதாகர் ஆராய்கிறார். உரைநடை இலக்கியப் படைப்பாளர்களை விட கவிஞர்கள் மானுடத்தின் காயங்களை ஆழமாகவும் அழுத்தமாகவும் வெளிப்படுத்தும் வாய்ப்பு உண்டு என்கிறார். மேலும் அவர், தமிழ்ஒளி, கே.சி. அருணாசலம், பொன்னடியான், த. கோவேந்தன் ஆகியோரின் மரபுக்கவிதைகளில் காணலாகும் மானிடத்தின் காயங்களை விவரிக்கிறார்.

### புதுக்கவிதைகள்

இரண்டாவதாக எஸ். லாரன்ஸ் புதுக்கவிதைகளில் மானுடத்தின் காயங்களை வெளிப்படுத்துகிறார். இன்குலாப்பின் சூரியனைச் சுமப்பவர்கள், துறவியின்

சூடுபறிக்கப்பட்ட சூரியன்கள், சக்திக்கனலின் கனகாம்பரமும் டிசம்பர் பூக்களும், மேத்தாவின் காத்திருந்த காற்று, தயாவின் ஒரு பாதிரியின் பார்வையில், மோகன்குமாரியின் ஒரு அப்பமும் சில அழுகல்களும், இங்கு கோலங்கள் அலங்கோலங்கள் ஆகிறபொழுது என்ற கவிதைத் தொகுப்பு நூல்களின் மூலம் பொருளாதார ஏற்றத்தாழ்வுகள், தீண்டாமைக் கொடுமைகள், அரசியல் கட்சியின் நிலைமைகள், பெண்ணினத்திற்கு இழைக்கப்படும் கொடுமைகள் பற்றி ஆராய்ந்து - படைப்பாளிகள் தரும் நம்பிக்கையுடன் கட்டுரையை முடித்துள்ளார்.

**குழந்தை இலக்கியம்**

மூன்றாவதாக இடம்பெறுவது பி.வி. கிரி எழுதிய குழந்தை இலக்கியத்தில் மானுடத்தின் காயங்கள் என்பதாகும். இன்று வெளிவரும் குழந்தை நூல்களில் சமுதாயத்தின் கீறல்களைப் பார்க்க முடிகிறது. அந்தவகையில் நமக்கு மகிழ்ச்சி என்கிறார். இன்பமும் துன்பமும் கலந்தது தான் வாழ்க்கை என்பதைச் சிறியோரும் புரிந்துகொள்ளத்தக்க வகையில் படைப்புகள் வெளிவர வேண்டும்[34] என்பது பி.வி.கிரியின் கருத்தாக அமைகிறது.

நான்காவதாக இடம்பெறுவது குழந்தை இலக்கியம் பற்றிய கட்டுரை எழுதியவர் எஸ்.குலசேகரன். குழந்தை இலக்கியம் எவ்வாறு மானுடத்தில் காயங்களை ஏற்படுத்தியுள்ளது என்பதை விளக்குகிறார். குழந்தை இலக்கியத்தில் மானுடத்தின் காயங்கள் ஏராளம் என்கிறார்.

**சிறுகதைகள்**

ஐந்தாவதாக இடம்பெறுவது மு. பரமசிவம் எழுதிய சிறுகதைகளில் மானுடத்தின் காயங்கள் என்பதாகும். கவிதை, நாவல்களைவிட சிறுகதைகள்தான் அதிக அளவில் மானுடத்தில் காயங்களை ஏற்படுத்தியுள்ளது என்பது கட்டுரையாளரது கருத்து.

ஆறாவது கட்டுரை இயேசுதாஸ் எழுதிய **இக்காலத் தமிழ் நாவல்களில் மானுடத்தின் காயங்கள்** என்பதாகும். தோப்பில் முகமதுமீரானின் **ஒரு கடலோரக் கிராமத்தின் கதை** ஐசக் அருமைராஜனின் **தவறான தடங்கள்**, சு. சமுத்திரத்தின் **வேரில் பழுத்த பலா** என்ற மூன்று நாவல்களை மட்டும் எடுத்துக்கொண்டு மானுடத்தின் காயங்களை ஆராய்கிறார்.

**படைப்பாளர்கள் பார்வையில் மானுடத்தின் காயங்கள்** என்ற கருத்தரங்கில் பங்குபெற்ற கட்டுரையாளர்கள் இக்காலப் படைப்பிலக்கியத்தில் மானுடத்தின் காயங்கள் எவ்வகையிலெல்லாம் எடுத்துக் காட்டப்படுகின்றன என்பதை ஆய்வாளர்கள் குறிப்பிட்டுள்ளார்கள். மானுடத்தைக் காயப்படுத்துவோர், காயப்படுத்திக் கொள்வோர் யாவர் என்பதோடு அத்தகு காயங்கள் எத்தகையவை என்பதையும் கட்டுரையாளர்கள் காண முயன்றிருக்கிறார்கள்.

## 15. தற்காலப்படைப்பிலக்கியத்தில் மத நல்லிணக்கமும் மனிதநேயமும்

1993ஆம் ஆண்டு நடைபெற்ற நண்பர் வட்டத்தின் இருபத்திநான்காவது கருத்தரங்கின் கருப்பொருள் **தற்காலப் படைப்பிலக்கியத்தில் மத நல்லிணக்கமும் மனிதநேயமும்** என்பதாகும். 1992ஆம் ஆண்டு டிசம்பர் 6ஆம் தேதியன்று அயோத்தியில் நடைபெற்ற மதவெறியரின் செயல்களைக் கண்டித்து மத நல்லிணக்கத்தையும் மனிதநேயத்தையும் பல்வகையிலும் தங்கள் எழுத்துக்களில் வலியுறுத்த முற்பட்டார்கள் கட்டுரையாளர்கள்.

### கவிதை

**தற்காலக்கவிதைகளில் மத நல்லிணக்கமும் மனிதநேயமும்** என்ற தலைப்பில் சரளா இராசகோபாலன், ம.வி. சுதாகர், பால. இரமணி ஆகியோர் எழுதியுள்ளார்கள்.

கட்டுரையாளர்கள் இக்காலக் கவிதைகளில் மத நல்லிணக்கத்தையும் மனித நேயத்தையும் பாரதியிலிருந்து தொடங்கி இக்காலச் சிறு பத்திரிகைகளில் வரும் கவிஞர்கள் வரை தொட்டுக்காட்டுகின்றார்கள். கவிதை என்பது - கருவைக் கூடக்கணக்கிட்டுப் பார்க்கிற துலாக்கோல்; துல்லியமானது. எனவே இந்தத் துல்லிய துலாக்கோலைப் பிடிக்கிற கவிஞர்களின் கரங்களில் உறுதிப்பாடும் உண்மையும், எதிர்காலமும் நம்பிக்கையும், வேகமும், விவேகமும் உரமேறிக்கிடக்கும் என்பது உணர்ந்துவிட்ட மெய்ப்பொருளாகும்[35] என்று இக்காலக் கவிஞர்கள் தம் படைப்புக்களில் மத நல்லிணக்கத்தையும் மனித நேயத்தையும் சுட்டிக்காட்டுகிறார்கள் என்று குறிப்பிடுகிறார்.

எனது படைப்புகளில் மத நல்லிணக்கமும் மனிதநேயமும் என்ற தலைப்பில் ஞா. மாணிக்கவாசகன், ஏர்வாடி எஸ். இராதாகிருஷ்ணன், கே.சி.எஸ். அருணாசலம், கவிஞர் இன்குலாப், பொன்னீலன், என்.ஆர்.தாசன் ஆகியோர்கள் கட்டுரை வழங்கியுள்ளார்கள்.

மதம் மக்களைப்பற்றி நினைக்க வேண்டும். கோவிலில் ஆறுகால பூசை நடக்கிறதா என்பதைவிடக் குறைந்தபட்சம் கோவிலைச் சுற்றியுள்ள வீடுகளிலாவது பசியால் வாடுவார்கள் குரல் கேட்காமல் இருக்கப் பார்த்துக்கொள்வது முக்கியம். மனிதனை மறக்கிற, மனிதனை மதிக்கத் தவறுகிற எந்த மதமும் மனிதனுக்குத் தேவையில்லை[36] என்பதுவே கட்டுரையாளர் ஞா. மாணிக்கவாசகனின் தீர்மானமும் தெளிவான கொள்கையும்.

மனிதநேயம் என்பது பசியெடுத்தவனுக்கு இரக்கம் காட்டும் ஜீவகாருண்ய உணர்வு அல்ல. மக்கள் தம்மை வருத்தும் கொடுமைகள், ஒடுக்குமுறைகள், அடிமைத்தனம், சுரண்டல் ஆகியவற்றிலிருந்து மீண்டு வெளிச்சத்தை நோக்கி வீறுடன் கிளர்ந்தெழும்போதெல்லாம் அதன்பால் பரிவுகாட்டி துணை நிற்பது, ஊக்குவிப்பதுதான் மனிதநேயம்[37] என்கிறார் கே.சி.எஸ். அருணாசலம்.

**சிறுகதை**

தற்காலச் சிறுகதைகளில் மத நல்லிணக்கமும் மனிதநேயமும் என்ற கருப்பொருளில் மு. பரமசிவம், எஸ். குலசேகரன், வல்லிக்கண்ணன் ஆகியோர் கட்டுரை வழங்கியுள்ளனர்.

படைப்பிலக்கியத்தில் மனித நல்லிணக்கமும் மனிதநேயமும் ஒரே தளத்தில் ஒன்றாக இணைந்து இறுக்கம் பெற்றிருப்பது அரிது என்றும் தற்காலப் படைப்பிலக்கியம் இந்த இரண்டு பண்புகளையும் ஒருசேர உரத்த சிந்தனையோடு வெளிப்படுத்துவதை அங்கொன்றும் இங்கொன்றுமாகத்தான் காண முடிகிறது என்றும் விவரிக்கிறார் குலசேகரன்.

வல்லிக்கண்ணன் தம் ஆய்வுரையில் தமிழ்ச்சிறுகதை எழுபத்தைந்து வருடகால வளர்ச்சியில் விதம் விதமான உணர்ச்சிகளை உளப்போராட்டங்களைத் தமிழ்ச்சிறுகதை பதிவு செய்துள்ளது என்றாலும் மத நல்லிணக்கத்தைப் பிரதிபலிக்கும் கதைகள் போதுமான எண்ணிக்கையில் கூட எழுதப்பட்டிருக்கவில்லை[38] என்கிறார்.

**புதினம்**

தமிழ்ப்புதினங்களில் மத நல்லிணக்கமும் மனிதநேயமும் என்ற தலைப்பில் இராம.குருநாதன் ஆய்வுக்கட்டுரை வழங்கியுள்ளார். குடந்தையானின் வேதபுரத்து நாயகர்கள், ஜெயமோகனின் ரப்பர், தோப்பில் முகமதுமீரானின் துறைமுகம், சமுத்திரத்தின் நிழல் முகங்கள் என்ற நான்கு நாவல்களை எடுத்துக்கொண்டு மத நல்லிணக்கத்தையும் மனிதநேயத்தையும் ஆராய்கிறார். மத நல்லிணக்கத்தை மட்டுமே எடுத்துக்காட்டுவது வேதபுரத்து நாயகர்கள். பிற நாவல்கள் அனைத்தும் மானிட நேயத்தை விளக்குவன. மனிதாபிமானம் முழு வல்லமையோடு நிழல் முகங்களில் வெளிப்படுத்தப்பட்டுள்ளது. மத வெறியர்களுக்கு எதிரான போக்கில்,

அன்பை வெளிப்படுத்தும் கதை மாந்தர்களைக் கொண்டு அன்பின் பரிமாணத்தைக் காட்டுவது துறைமுகம். இவை மூன்றும் மனிதர்களை முன்வைத்து மனிதம் பேச, ரப்பர் இயற்கையையும், உயிரினங்களையும் மனித வாழ்வோடு இணைத்துக்கொண்டு மனித நேயத்தைக் காட்டிச் செல்கிறது[39] என்கிறார்.

**முஸ்லீம் இலக்கியம்**

முஸ்லீம் படைப்பிலக்கியத்தில் மத நல்லிணக்கமும் மனிதநேயமும் என்ற கட்டுரையில் தோப்பில் முகமது மீரான் 1855இற்கும் 1930இற்கும் இடைப்பட்ட கால இடைவெளியில் வேறு எந்த முஸ்லீம் சமூக நாவலோ, சிறுகதையோ வெளிவந்ததாகத் தெரியவில்லை என்றும், 1935-1950 ஆண்டு வரையிலான 15 ஆண்டுகளை முஸ்லீம் தமிழ்ச் சிறுகதையின் தொடக்ககாலமாகச் சொல்லலாம் என்றும் தொடங்கி தம்முடைய படைப்புகளில் முஸ்லீம் எழுத்தாளர்கள் கையாளாத விஷயங்களைக் கையாளவும், அவர்கள் மீறாத எல்லையை மீறவும் செய்தேன்[40] என்கிறார் கட்டுரையாளர்.

**கிறித்தவ இலக்கியம்**

கிறித்தவ இலக்கியத்தில் மத நல்லிணக்கமும் மனிதநேயமும் என்ற தலைப்பில் குளோரிகிறிஸ்டோபர், ஆர்.எஸ். ஜேக்கப், ஐசக் அருமைராசன், டேவிட் சித்தையா என்ற நால்வரும் கட்டுரை வழங்கியுள்ளனர். கிறித்தவ இலக்கியங்களில் கவிதை, சிறுகதை, நாவல் என்ற நிலைகளில் எழுத்தாளர்கள் மத நல்லிணக்கத்தையும் மனித நேயத்தையும் பல்வேறு வகையிலும் தங்கள் எழுத்துக்களில் எவ்வாறு வலியுறுத்த முற்பட்டார்கள் என்பதனை ஆராய்ந்துள்ளனர். மனித நேயத்தின் அடிப்படையில் மட்டுமே மத நல்லிணக்கத்தை ஏற்படுத்த முடியும் என்பதும் நாட்டில் அமைதிச் சூழலை உருவாக்கும் பொறுப்பையும் ஆற்றலையும் பெற்றிருப்பவர்கள் எழுத்தாளர்கள் என்ற கருத்தினையும் வழங்கியுள்ளனர்.

**தலித் இலக்கியம்**

தலித் இலக்கியத்தில் மத நல்லிணக்கமும் மனித நேயமும் என்ற தலைப்பில் கட்டுரை எழுதியிருப்பவர் டி.எஸ்.இரவிந்திரதாஸ் கட்டுரையாளர் கட்டுரையில் தலித் என்ற சொல்தான் தமிழுக்குப் புதியதே தவிர தலித் இலக்கியம் என்பது புதிதல்ல என்று திட்டவட்டமாகக் கூறுகிறார். தலித் இலக்கியத்தின் வரலாற்றுப் பின்னணியை மகாகவி பாரதியின் படைப்புகளில் இருந்து இக்காலக் கவிஞர்கள் மேத்தா, அறிவுமதி, இளவேனில், பழமலய் என ஏராளமானோர் சமூக அவலங்களையும் சரித்திரக் கேடுகளையும்பாடிக் கொண்டிருக்கிறார்கள் என்று கூறி தலித் இலக்கியத்தையும், தலித் இலக்கியத்தை உள்ளடக்கிய வர்க்கப் போராட்டப் படைப்புகளையும் சுட்டிக்காட்டுகிறார்.

**குழந்தை இலக்கியம்**

குழந்தை இலக்கியத்தில் மத நல்லிணக்கமும் மனிதநேயமும் என்ற கட்டுரையைப் படைத்தவர் பி.வி. கிரி. இவர் குழந்தை இலக்கியத்தைப் பாரதியில் இருந்து தொடங்கி நாமக்கல் கவிஞர், இராமலிங்க அடிகளார், புலவர் தணிகை உலகநாதன், அழ. வள்ளியப்பா, கவிமணி, பட்டுக்கோட்டை இராசேந்திரன், பரதன், பொன்ராசன், பூங்கோவன், மலையமான், ஸ்வீட்லின் பிரபாகரன் ஆகியோரின் படைப்புக்களில் காணப்படும் மனிதநேயத்தை ச் சுட்டிக்காட்டுகிறார்.

இறுதியாக இடம்பெறுவது டி.எஸ். ரவீந்திரதாஸ் எழுதிய திரைப்படப் பாடல்களில் மத நல்லிணக்கமும் மனிதநேயமும் என்ற கட்டுரையாகும். திரைப்படப் பாடலாசிரியர்களில் பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரத்தில் இருந்து கண்ணதாசன், மருதகாசி, கருணாநிதி, வைரமுத்து, மேத்தா, வாலி வரையிலானவர்களின் மனிதநேயத்தை ஆராய்கிறார் கட்டுரையாளர்.

மெட்டுக்கும் இசைக்கும் ஏற்ற வகையில் பெரும்பாலான பாடல்களுக்குரிய சொற்கள் பொருத்தப்படுவதால் கருத்துக்கள் பின்னுக்குப் போய்விடுகின்றன. அர்த்தமற்ற வெற்று வார்த்தைகள் மட்டுமே மிஞ்சி நிற்கின்றன. ஆழமான கருத்துக்களோ சமூக ரீதியான சிந்தனைகளோ பிற கவிதைகளைவிட சினிமா பாடல்களில் மிகவும் குறைவாகவே இருக்கின்றன. தற்போதைய திரைப்படப் பாடல்களில் முற்போக்குக் கருத்துக்களைப் பூதக்கண்ணாடியின் மூலமாகத்தான் தேடிக் கண்டுபிடிக்க வேண்டியிருக்கிறது[41] என்று தன்னுடைய கருத்தைச் சுட்டிக்காட்டுகிறார் டி.எஸ். ரவீந்திரதாஸ்.

தற்காலப் படைப்பிலக்கியத்தில் மத நல்லிணக்கமும் மனிதநேயமும் என்ற கருத்தரங்கில் வழங்கப்பெற்ற கட்டுரைகள் மத நல்லிணக்கத்தின் தேவையைப் பல்வேறு கோணங்களிலிருந்து காண முயல்கின்றன. மனிதநேயத்தின் அடிப்படையில் மட்டுமே மத நல்லிணக்கத்தை ஏற்படுத்த முடியும் என்ற கருத்தைக் கட்டுரையாளர்கள் வலியுறுத்துகின்றனர்.

## 16. பண்பாட்டுச் சீரழிவுகள்: படைப்பாளர்கள், பார்வையும் பாராமுகமும்

1994ஆம் ஆண்டு நடைபெற்ற நண்பர் வட்டத்தின் 25ஆவது ஆண்டின் கருத்தரங்கின் கருப்பொருள் பண்பாட்டுச் சீரழிவுகள்; படைப்பாளர்கள் பார்வையும் பாராமுகமும் என்பதாகும்.

கவிதை, சிறுகதை, நாவல், திரைப்படம், நாடகம், இதழ்கள், கிறித்தவ இலக்கியச் சங்க நூல்கள் என்னும் ஏழு நிலைகளில் பண்பாட்டுச் சீரழிவுகள்; படைப்பாளர்கள் பார்வையும் பாராமுகமும் எவ்வாறு அமைந்துள்ளன என்பதைக் கட்டுரையாளர்கள் ஆராய்ந்துள்ளனர்.

**கவிதை**

கவிதை என்ற தலைப்பில் இரண்டு கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன. என் கவிதைகளில் என்ற தலைப்பில் சக்திக்கனலும், மரபுக் கவிதைகளில் என்ற தலைப்பில் குளோரி கிறிஸ்டோபரும் எழுதியுள்ளனர்.

சக்திக்கனல் தமது கவிதைகளில் நமது பண்பாடுகள் எவ்வாறு சீரழிந்து கிடக்கின்றன, மனிதர்களை மனிதர்கள் எவ்வாறு அடிமைப்படுத்துகிறார்கள், மானத்தை மறந்த மனிதர்கள், கொச்சைப்பட்டுப் போன தாம்பத்திய உறவுகள், நச்சு இலக்கியங்கள், கலப்படம், கையூட்டு, உண்ணாவிரதம் என்ற போலி நாடகம், கொத்தடிமை முதலியவை தமது கவிதையாகின்றன என்பதைக் கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார்.

குளோரி கிறிஸ்டோபர் மக்கள் மனதில் பொய், பொறாமை, வஞ்சனை, களவு, ஏற்றத்தாழ்வு, பெண்ணடிமை, வரதட்சணை ஆகிய முட்கள் எவ்வாறு முளைவிட்டு வளர்ந்து வருகின்றன என்பதையும் அவற்றை நீக்க பல கவிஞர்கள் எவ்வாறு பாடியுள்ளார்கள் என்பதனையும் மேற்கோளுடன் சுட்டிக் காட்டியுள்ளார்.

**சிறுகதை**

சிறுகதை என்ற தலைப்பில் நான்கு கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன. ஆர்.எஸ். ஜேக்கப், டி. செல்வராஜ், தனுஷ்கோடி ராமசாமி, மு. பரமசிவம் ஆகியோர் கட்டுரைகளை எழுதியுள்ளார்கள். தற்காலத் தமிழ்ப்படைப்புகளான சிறுகதைகள் எந்தத் திசையை நோக்கி போய்க் கொண்டிருக்கின்றன? எத்தகைய பண்பாட்டுச் சீரழிவுப் பள்ளங்களில் வீழ்ந்து கொண்டிருக்கின்றன? அல்லது பழைய பண்பாட்டை முற்றாக மறந்து புதிய சிந்தனையை வளர்த்துக் கொண்டிருக்கின்றனவா? என்ற நோக்கில் ஆராய்ந்துள்ளனர்.

**நாவல்**

நாவல் எனும் பகுதியில் நான்கு கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன. இராம.குருநாதன், மேலாண்மை பொன்னுசாமி, ம.வீ. பச்சையப்பன், டேவிட் சித்தையா ஆகியோர் எழுதியுள்ளனர். நாவலாசிரியர்களின் படைப்புகள்தான் பண்பாட்டுச் சூழலை மேன்மைப்படுத்தும். வியர்வை, மக்களின் ஆத்மாவாகத் திகழும் என்பதில் கட்டுரையாளர்கள் உறுதியாக இருக்கிறார்கள்.

**நாடகம்**

நாடகங்களில் என்ற தலைப்பில் கோமல் சுவாமிநாதனின் கட்டுரை இடம்பெற்றுள்ளது. பண்பாட்டுச் சீரழிவுகளுக்குக் காரணமாக இருப்பவை அரசியலும் மதமும் ஆகும். அரசியலும் மதமும் தனது பீடத்திலிருந்து கீழே விழுகின்றபோது அந்தந்தக் காலகட்டங்களில் பண்பாட்டுச் சீரழிவு என்பது தோன்றியிருந்தது. அரசியலும் மதமும் பண்பாட்டின் வீழ்ச்சிக்கும், உயர்வுக்கும் காரணமாக இருக்கும் இரண்டு காரணிகள் மட்டுமேயல்ல; இவை இந்த பண்பாட்டிற்குள்ளாகவே இருப்பவை. இதைவிட பெரிய ஆபத்து சமீபகாலமாக ஏற்படுகிற நுகர்வுக் கலாச்சாரம்தான் பண்பாட்டுச் சீரழிவுக்குப் பெரிதும் துணை புரிகிறது[42] என்கிறார்.

**திரைப்படம், தொலைக்காட்சி**

இயக்குநர் மகேந்திரன் திரைப்படங்களிலும் தொலைக்காட்சிகளிலும் பண்பாட்டுச் சீரழிவுகள், படைப்பாளர்கள் பார்வையும் பாராமுகமும் எவ்வாறு அமைந்துள்ளது என்பதனை ஆராய்ந்துள்ளார். திரைப்படங்களிலும் தொலைக்காட்சியிலும் எவ்வாறு பண்பாட்டுச் சீரழிவுகள் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன என்றும் இதற்குக் காரணமான காரணிகள் எவை என்றும், பின்னணியையும் ஆராய்கிறார். இனிவரும் தன் படங்களில் அழகோடும்,

அளவோடும் தமிழ்ப் பண்பாட்டை நிலைநாட்ட முயற்சிப்பேன் என்ற உறுதிமொழியோடு கட்டுரையை முடித்துள்ளார்.

திரை இசைப் பாடல்களில் என்ற தலைப்பில் பி.வி. கிரி கட்டுரை எழுதியுள்ளார். தமிழ்ப்படம் என்கிறபோது, அதில் தமிழ்ப்பண்பாடு நிச்சயம் இடம்பெற வேண்டும். பாத்திரப்படைப்பாகட்டும், காட்சி அமைப்புகளாகட்டும் அதிலே நமது நாகரீகத்தின் நளினம் கலந்திருக்க வேண்டும். அதாவது தமிழ்ப பண்பின் தன்மை அதிலே நீக்கமற நிறைந்திருக்க வேண்டும்[43] என்று தமது ஆய்வுக்கட்டுரையில் சுட்டிக்காட்டியுள்ளார்.

மாமணி இதழ்களில் பண்பாட்டுச் சீரழிவுகள் பற்றி விளக்குகிறார். நாட்டு விடுதலை, சமூக விடுதலை, பொருளாதார விடுதலை, கலை - இலக்கிய மறுமலர்ச்சி, சாதி - மத வேற்றுமை நீக்குதல், பெண்கள் முன்னேற்றம், தீண்டாமை ஒழிப்பு ஆகியவற்றிற்காக தங்களையே வருத்திக்கொண்டு இதழ்களை நடத்தியவர்களில் குறிப்பிடத்தக்கவர்களைப் பட்டியலிட்டுக்காட்டி இன்றைய இதழ்களின் போக்குகளையும் ஆராய்கிறார்.

பண்பாட்டுச் சீரழிவுகள்: படைப்பாளர்கள் பார்வையும் பாராமுகமும் என்ற கருத்தரங்கில் பங்குபெற்ற கட்டுரையாளர்கள் பண்பாட்டுச் சீரழிவுகள் இலக்கியத்தை எந்த அளவுக்குப் பாதித்துள்ளன, இலக்கியப் படைப்பாளர்கள் எவ்வகையிலெல்லாம் இதை எதிர்த்துப் போராடி மக்களிடையே விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தியுள்ளார்கள் என்பதை ஆதாரப்பூர்வமாக ஆராய்ந்து மக்களிடையே சில உண்மைகளை வலியுறுத்த வேண்டும் என்கின்றனர்.

## 17. மக்கள் இலக்கியமும் திறனாய்வுப் போக்குகளும் சில பார்வைகள்

1995-ஆம் ஆண்டு நடைபெற்ற இலக்கிய நண்பர் வட்டத்தின் கருப்பொருள் மக்கள் இலக்கியமும் திறனாய்வுப் போக்குகளும் சில பார்வைகள் ஆகும்.

இக்கருத்தரங்கத்தில் இடம்பெற்ற கட்டுரைகள் நாவல், சிறுகதை, கவிதை, திரைப்படம் என்ற நான்கு பிரிவுகளில் அடங்கும். இக்கருத்தரங்கில் ஏழு கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன.

**நாவல்களின் திறனாய்வுப் போக்குகள்**

நாவல் பகுதியில் முதலாவதாக இடம்பெற்றுள்ள கட்டுரை தி.ராசகோபாலன் எழுதிய நாவல்களில் திறனாய்வுப் போக்குகள் என்பதாகும். மக்கள் இலக்கியம் என்றால் என்ன என்பதை முதலில் கூறிப் பின்னர் நாவல்களில் திறனாய்வுப் போக்குகள் பற்றி ஆராய்கிறார். ஒருமுகமாக இருந்த திறனாய்வுக் கலை இன்று ஐந்துமுகங்களாக விரிந்திருக்கின்றது என்கிறார். பெண்ணியத் திறனாய்வு, மார்க்சியத் திறனாய்வு, தலித்தியத் திறனாய்வு, அழகியல் திறனாய்வு எனும் ஐந்துவகைத் திறனாய்வுகளில் அழகியல் திறனாய்வு தவிர மற்ற நான்குவகைத் திறனாய்வுப் போக்குகள் மக்கள் இலக்கியத்துக்குப் பெரிதும் பொருந்தி வருவதால் அந்நான்கினை மட்டும் விவாதிக்கிறார். மக்கள் இலக்கியம் என்ற சிந்தனை, தமிழுக்குப் பாய்ச்சப்பட்ட புதுரத்தமாகும். இச்சிந்தனை வந்தபிறகுதான், தமிழிலக்கியம் பெருவாரியான மக்களின் பிரதிநிதியாயிற்று. அதனையொட்டி எழுந்த திறனாய்வுப் போக்குகள் உழைக்கும் வர்க்கத்தின் முகவரிகளைத் தாங்கிப் பிடிக்கின்றன[44] என்று தம் கட்டுரையில் கூறுகிறார்.

**கிறித்தவப் படைப்புகளில் திறனாய்வுப் போக்குகள்**

கருத்தரங்கில் இரண்டாவதாக இடம்பெறுவது டேவிட் சித்தையா எழுதிய கிறித்தவப் படைப்புகளில் திறனாய்வுப் போக்குகள் என்பதாகும். தமிழின் தொடக்ககால நாவலான பிரதாப முதலியார் சரித்திரத்திலிருந்து இன்றையக் காலகட்டம் வரை ஆராய்கிறார். கிறித்தவர்களின் படைப்புகளை மட்டுமன்றி, கிறித்தவரல்லாத சில நாவலாசிரியர்கள் எழுதிய சில கிறித்தவ நாவல்களையும் ஆராய்கிறார்.

**மரபுக்கவிதைகளில் திறனாய்வுப் போக்குகள்**

மூன்றாவதாக இடம்பெறுவது ம.வி. சுதாகர் எழுதிய மரபுக்கவிதைகளில் திறனாய்வுப் போக்குகள் என்பதாகும். கட்டுரையாளர் சங்க இலக்கியத்தில் இருந்து, இடைக்கால இலக்கியம் பாரதி, பாரதிதாசன் முதலியோர்களின் மரபுக் கவிதைகள் வரை எடுத்துக்கொண்டு திறனாய்வு செய்துள்ளார்.

**திரைப்படங்களில் திறனாய்வுப் போக்குகள்**

நான்காவது கட்டுரை ஞா. மாணிக்கவாசகன் எழுதிய திரைப்படங்களின் திறனாய்வுப் போக்குகள் என்பதாகும். தமிழ்த் திரைப்பட வளர்ச்சி வரலாற்றை நடிகர்கள் காலம், பாடலாசிரியர்கள், வசனகர்த்தாக்கள் காலம், இயக்குனர்கள் காலம், நடிகர் - நடிகையர் காலம் என்று பிரித்துக்கொண்டு வகுத்தும் தொகுத்தும் ஆராய்கிறார். தம்முடைய ஆய்வு முடிவுரையில் பின்வருமாறு கூறுகிறார். திரைப்படம் ஒரு தொழில். பலகோடி ரூபாய் மூலதனத்தில் பல ஆயிரம் பேர் பலனை எதிர்பார்த்துக் காத்திருக்கும் ஒரு மாபெரும் தொழில் - மறுப்பதில்லை. ஆனால் அந்தத் தொழில் அதனால் பயன்பெறும் மக்களை மறந்து அவர்கள் நலனுக்கு விரோதமாகச் செயல்படுமானால் அதன் கலைத்தன்மை கெட்டுப் போகும். உற்பத்தி குன்றி உறங்கிப்போன பல தொழிற்கூடங்களைப் போலத் தமிழ்த் திரைப்படத்தொழில் மூலைக்குத் தள்ளப்பட்டுவிடும். மக்கள் இயக்கத்தின் படைக்கலனாகப் படத் தொழில் மாறும் காலம் வரும்[45] என்ற நம்பிக்கையோடு கட்டுரையை முடிக்கிறார்.

**சிறுகதைகளின் திறனாய்வுப் போக்குகள்**

ஐந்தாவதாக இடம்பெறுவது மாமணி எழுதிய சிறுகதைகளில் திறனாய்வுப் போக்குகள் என்பதாகும். இக்கட்டுரையில் திறனாய்வு எப்படி இருக்கிறது என்பதற்குச் சிறுகதைகளில் சான்று காட்டுவதற்குப் பதிலாக திறனாய்வுகள் எப்படி

இருக்க வேண்டும் எப்படி இருக்கக் கூடாது என்று விளக்கியுள்ளார். இறுதியாக ஒரு திறனாய்வாளன் நீதிபதியைப்போல் இருக்க வேண்டும் என்கிறார்.

**சி.எல்.எஸ். நூல்களில் திறனாய்வுப் போக்குகள்**

ஆறாவதாக இடம்பெறுவது மு. பரமசிவம் எழுதிய சி.எல்.எஸ். நூல்களில் திறனாய்வுப் போக்குகள் என்ற கட்டுரையாகும். தமிழில் சிறந்த நூல்களை வெளியிட்டு தமிழுக்கும் கிறித்தவ இலக்கியத்திற்கும் தொண்டு செய்து வரும் கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் வெளியீடுகளில் உள்ள நூல்களை மையமாகக் கொண்டு மக்கள் இலக்கியத்தையும் திறனாய்வுப் போக்குகளையும் அடையாளம் காண்கிறார். சிறுகதை, நாவல், நாடகம், கட்டுரை, இலக்கிய நண்பர் வட்டக் கருத்தரங்கு நூல்கள் ஆகியவற்றின் வாயிலாக கிறித்தவ இலக்கியச் சங்கம் மனிதநேயமிக்க மக்கள் சங்க இலக்கியத்தையும் திறனாய்வுப் போக்குகளையும் வணிக நோக்கமின்றி வளர்த்து வருவதைப் போற்றுகிறார்.

**மக்கள் இலக்கியமும் திறனாய்வுப் போக்குகளும்**

ஏழாவதாக இடம்பெறுவது பி.வி. கிரி எழுதிய மக்கள் இலக்கியமும் திறனாய்வுப் போக்குகளும் என்பதாகும். கட்டுரையாசிரியர் எது இலக்கியம் எது மக்கள் இலக்கியம் என்ற வினாக்களுக்கு விடையளித்து, காலந்தோறும் மக்கள் இலக்கியம் தோன்றி வந்ததை விரிவாக எடுத்துரைக்கிறார். பாமரக் கதைப்பாடல்கள், பாரதியின் பாட்டில் திரைப்படங்களில் தாலாட்டுப் பாடல், கதைப் பாடல்கள், வாய்மொழிக்கதைகள், கூத்துக்கலை எல்லாம் மக்கள் இலக்கியம் என்றும் இவை எப்படி மக்கள் இலக்கியமாக மாறின என்றும் திறனாய்வு செய்கிறார். இறுதியில், கலை இலக்கியங்கள் மனித வாழ்வியலோடும் அரசியலோடும் கலந்துள்ளன. புதிய சமூகம் அமைக்கப்பாடுபடும் நம்மவர்கள் நாட்டுப்புறக் கலை இலக்கியத்தையும் கையிலெடுத்துக்கொள்வது

அவசியமானதாகும்[46] என்று நாட்டுப்புற மண்ணும் மக்களும் என்னும் நூலில் டாக்டர் கே.ஏ. குணசேகரன் கூறிய கருத்தினைச் சுட்டிக்காட்டி முடிக்கிறார்.

## 18. இருபதாம் நூற்றாண்டின் இலக்கிய வீச்சும் எழுச்சிமிக்க படைப்பாளர்களும்

*1997*-ஆம் ஆண்டு நடைபெற்ற இலக்கிய நண்பர் வட்டத்தின் 27வது ஆண்டின் கருப்பொருள் **இருபதாம் நூற்றாண்டின் இலக்கிய வீச்சும் எழுச்சி மிக்க** படைப்பாளர்களும் ஆகும்.

### தேசிய இலக்கியம்

தேசிய இலக்கியம் எனும் இப்பகுதியில் முதலாவதாக இடம் பெற்றுள்ள கட்டுரை திருப்பூர் கிருஷ்ணன் எழுதியுள்ள **தேசிய இலக்கியத்தில் இலக்கிய வீச்சும்** எழுச்சி மிக்க படைப்பாளர்களும் ஆகும். நாரண துரைக்கண்ணனின் **தியாகத் தழும்பு**, அகிலனின் **நெஞ்சின் அலைகள்**, வல்லிக்கண்ணனின் **வீடும் வெளியும்**, கு.ராஜவேலுவின் **1942**, கல்கியின் **அலையோசை**, நா.பார்த்தசாரதியின் **ஆத்மாவின் ராகங்கள்**, ர.சு.நல்லபெருமாளின் **கல்லுக்குள் ஈரம்**, சி.சு.செல்லப்பாவின் **சுதந்திர தாகம்** ஆகிய நாவல்கள் தேசியம் பற்றி விவரிக்கின்றன. உயர்ந்த உணர்வுகளை மக்கள் மனதில் தட்டி எழுப்பி, இந்த நாவல்கள் ஒரு பெரும் இலக்கியச் சேவையைச் செய்துள்ளன. தேசிய நாவல்களின் இன்னொரு முக்கியச் சிறப்பு இவை பிற இந்திய மொழிகளில் மொழிபெயர்க்கப்படும்போது அமோகமாக வரவேற்கப்படுகின்றன. வெவ்வேறு இந்திய மொழிகளைச் சார்ந்தவர்களும் கூட இந்த நாவல்களைப் படிக்கும்போது ஒரு தேசிய உத்வேகம் கிடைக்கிறது. நா.பா.வின் வார்த்தைகளில் சொல்வதானால் கங்கை இன்னும் வற்றிவிடவில்லை; தேசிய உணர்வு இன்னமும் ஏராளமான இந்திய மனங்களில் பெருக்கெடுத்து ஓடிக்கொண்டு தான் இருக்கின்றது. அந்த உணர்வு வற்றாத வரை தேசிய

இலக்கியம் வாழும். புதிய புதிய தேசிய இலக்கியங்கள் தோன்றித் தழைக்கவும் செய்யும் என்கிறார்.[47]

**மறுமலர்ச்சி இலக்கியத்தில்**

இரண்டாவது கட்டுரை இராம. குருநாதன் எழுதிய மறுமலர்ச்சி இலக்கிய வீச்சும் எழுச்சி மிக்க படைப்பாளர்களும் ஆகும். மறுமலர்ச்சி இலக்கியப் படைப்பாளர்களில் புதுமைப்பித்தன், விந்தன், கு.அழகிரிசாமி ஆகியோர்களது கருப்பொருள்களைக் கொண்டு மனித நேயத்தை ஆராய்கிறார். எதையும் சாதிக்கும் முயற்சி இவர்களிடம் இருந்துள்ளது. தார்மீகமான கோபத்திற்கு ஆளான இவர்கள் பல்வேறு வகையான சமூகப் பார்வைகளைப் படைப்பில் எடுத்துக் காட்டியுள்ளனர். எழுத்தும் வாழ்வும் வேறல்ல என்று எண்ணியிருந்த இவர்களிடம் புதிய சிந்தனைகளுக்கும், புதிய தடங்களில் இலக்கியத்தைக் கொண்டு செல்லுதற்கான வீறு இருந்துள்ளது. கருப்பொருள், உள்ளடக்கம், உத்தி, பார்வை முதலியவற்றை இலக்கிய வீச்சாகத் தந்துள்ளதோடு மானிட நேயம் என்பதையும் மறவாமல் படைப்பில் பதிவு செய்துள்ளார்[48] என்று சுட்டிக்காட்டிக் கட்டுரையை முடிக்கிறார்.

மறுமலர்ச்சி இலக்கியத்தில் என்ற தலைப்பில் மேலும் ஒரு கட்டுரை இடம் பெற்றுள்ளது. இதை மு.பரமசிவம் எழுதியுள்ளார்.

**திராவிட இயக்க இலக்கியத்தில்**

மா.நாராயணன் எழுதிய திராவிட இயக்க இலக்கியத்தில் என்ற கட்டுரை அடுத்ததாக இடம் பெறுகிறது. பெரியாரின் தாக்கமும் சமூக சீர்திருத்த வேகமும் இன உணர்வும் எழுந்து இலக்கியத்திற்கு உரமிட்டது. இந்தக் காலகட்டத்தில் எழுந்த பாவேந்தர் பாரதிதாசன், அறிஞர் அண்ணா, கலைஞர் ஆகியோரது படைப்புகளின் பயன்களையும் எழுச்சிகளையும் ஆராய்கிறார். திராவிட இயக்கம்

அரசியலில் தீவிர கவனம் செலுத்தி, தேர்தல்களில் வென்று அரசு அமைத்து ஆட்சி நடத்தத் தொடங்கிய பின்னர், திராவிட இயக்க இலக்கிய தேக்கம் அடைந்தது ; தேய்ந்தது ; பிற்காலத்தில் வளர்ச்சி பெறவில்லை என்று தம் ஆய்வில் கூறியுள்ளார்.

**கிறித்தவ இலக்கியத்தில்**

தமிழ்ச் சிறுகதையின் வரலாற்றில் கிறித்தவ எழுத்தாளர்களின் பங்களிப்பு பற்றி ஸ்வீட்லின் பிரபாகரனின் கட்டுரை ஆராய்கிறது. குறிப்பாக தயா, ஆர்.எஸ்.ஜேக்கப், டேவிட் சித்தையா, ராஜதுரை, ராஜ் ஆகியோரின் இலக்கியங்களை ஆராய்கிறார். சில கிறித்தவ எழுத்தாளர்கள் தங்கள் படைப்பினை வழங்க முயன்றுள்ளனர். இலக்கியத் தரமுடன் கிறித்தவ சமுதாயத்தினரின் சிந்தனையைத் தூண்டும் வகையில் எழுதப்பட்ட கதைகள் பல உள்ளன. இருபதாம் நூற்றாண்டின் கிறித்தவச் சிறுகதைகள் என்னும் தலைப்பில் பல கோணங்களிலிருந்து ஆய்வுக் கட்டுரைகள் எழுதப்படக் கூடிய அளவுக்குக் கதைகள் தகுதி வாய்ந்தவையாக இருக்கின்றன[49] என்று தம் ஆய்வில் கூறியுள்ளார்.

**இஸ்லாமிய இலக்கியத்தில்**

ஆறாவது கட்டுரை தோப்பில் முகமது மீரானின் இஸ்லாமிய இலக்கியத்தில் என்பதாகும். தோப்பில் முகமது மீரானின் சாய்வு நாற்காலி, ஜே.எம்.சாலியின் வெள்ளைக் கோடுகள், பண விலங்கு ஆகிய நாவல்களை மட்டும் ஆய்வுக்குரிய கருப்பொருளாக எடுத்துள்ளார்.

ஏழாவதாக இடம் பெற்றுள்ள கட்டுரை மோகனப்பிரியனின் கிறித்தவ இலக்கியத்தில் என்பதாகும். கிறித்தவப் புதுக்கவிதைகளில் இலக்கிய வீச்சையும் எழுச்சிமிக்க படைப்பாளர்களையும் குறிப்பிட்டுள்ளார். இருட்டைப் புசிக்கும் இறையியல் மாடங்கள், கிறித்தவரல்லாத கிறித்தவப் பிரதிகள், தலித்தியக் கதவுகள், ஈழத்துச் சிந்தனைச் சிலுவைகள், பெண்ணியத்தின் பிரவாகம், காவியக்காலடித்

தடங்கள், மயானச் சிதையும் மார்க்சிய விதையும், கொல்கதாவைப் புரட்டும் நெம்புகோல்கள் முதலிய உட்தலைப்புகளின் கீழ் ஆராய்ந்துள்ளார்.

**இருபதாம் நூற்றாண்டின் இலக்கிய வீச்சும் எழுச்சிமிக்க படைப்பாளர்களும்** எனும் கருத்தரங்கில் பங்கு பெற்ற கட்டுரையாளர்கள் ஒரே காலகட்டத்தில் தேசியம், திராவிடம், மறுமலர்ச்சி இயக்கங்கள், தங்கள் வேறுபட்ட இலட்சியங்கள், கொள்கைகள் அவற்றில் காணப்பட்டாலும் இலக்கியத்தரம் என்னும் அளவுகோலைக் கொண்டு ஆராய்ந்துள்ளனர்.

## 19. பொன் விழாப் பார்வையில் எழுத்தாளர்கள்

இலக்கிய நண்பர் வட்டத்தின் 28 வது கருத்தரங்கு 1998 ஆம் ஆண்டு நடைபெற்றது. கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் 140ஆம் பணியாண்டு நிறைவினை ஒட்டி நான்கு நாட்கள் இக்கருத்தரங்கு நடைபெற்றது. இக்கருத்தரங்கக் கட்டுரைகள் நூலாக வெளி வரவில்லை. இக்கருத்தரங்கில் இடம் பெற்ற கட்டுரைகளும் கட்டுரையாளர்களும் பின் வருமாறு:

| | **கட்டுரைகள்** | | **கட்டுரையாளர்கள்** |
|---|---|---|---|
| 1. | வ.ரா. | - | பழ. அதியமான் |
| 2. | நாரண துரைக்கண்ணன் | - | முகம் மாமணி |
| 3. | கல்கி | - | யோ.ஞான சந்திர ஜான்சன் |
| 4. | அண்ணா | - | மாணிக்கவாசகன் |
| 5. | கலைஞர் | - | சு.சமுத்திரம் |
| 6. | மு.வ. | - | ம.வி.சுதாகர் |
| 7. | சி.சு. செல்லப்பா | - | சு.வேங்கடராமன் |

